ஸ்ரீபுரம் என்னும் திருவாரூர்

# ஸ்ரீ தியாகராஜ லீலைகள்

இரண்டாம் பிரிவு—உத்தராயண லீலைகள்

இரண்டாம் பாகம்

(131 முதல் 211 முடிய)

திருச்சி மாவட்டம் பிக்ஷாண்டார்கோவில் பண்ணையாளர்
ஜீ. இராஜகோபால் பிள்ளையவர்களால்

ஸ்ரீரங்கம்
ஸ்ரீ வாணீ விலாஸ் அச்சாபீஸில்
பதிப்பித்து
ஷையாரால் பிரசுரிக்கப்பெற்றது.

1956



விலை ரூ. 3/-

உ

# ஸ்ரீ தியாகராஜ லீலைகள்

## (இரண்டாம் பிரிவு)

### உத்தராயண லீலை

இரண்டாம் பாகம் 131-211 லீலைகள்

பொருளடக்கம்

# திருவாரூர் தியாகராஜ லீலைகள்.

## இரண்டாம் பிரிவு—உத்தராயண லீலைகள்

## இரண்டாம் தொகுதி

## (131 முதல் 211 முடிய உள்ள லீலைகள்)

## பதிப்புரை.

தென்னாடுடைய சிவனாகிய முன்னைப் பழம்பொருளாம் முன்னவன் தனது பெருங்கருணைத் திறத்தால் அலகிலா உலகம் யாவையும் ஆக்கியளித்தருளும் தம் திருவிளையாட்டை அவ்வப்போது திவ்யலீலைகள் மூலம் தம் பக்தர்களுக்கு விளக்கிக் காட்டிய பேரன்பே இந்த **தியாகராஜ லீலைகள்** என்னும் புத்தகமாகும். இக்கருத்தையே மும்முறையும் நமது மெய்யன்பர் திவான்பகதூர் **K. S. ராமஸ்வாமி சாஸ்திரிகள்** அவர்கள் வெகு அழகாகவும் தெளிவாகவும் ஆங்கிலத்தில் விளக்கி இந்த மூன்றும் தொகுதி லீலைகளையும் பக்தகோடிகளுக்கு அறிமுகப்படுத்தியிருக்கிறார்கள். அதுவும் படித்து ஆனந்திக்க வேண்டியது.

சென்னை குஹானந்த மண்டலி ஸ்தாபகர் பிர்ம்மஸ்ரீ **N. சுப்பிரமணிய அய்யர்** அவர்கள் (சிதாநந்தநாதர்) இந்தத் தொகுதியில் வெளிவரும் சில லீலைகளுக்கு விளக்கம் எழுதி உபகரித்திருக்கிறார்கள்.

சிவப்பணியும் தவப்பணியுமே தமக்குரிய பெரும் பணியாகப் பூண்ட **தருமையாதீன மஹாஸந்நிதானம்** அவர்கள் அருளிச்செய்த அணிந்துரை இந்த நூலின் அழகுக்கு அழகு செய்வது உண்மையே!—இவர்களே தான் அழகுக்கு அழகு செய்ய வல்லவர் அன்றோ? நக்ஷத்திரம் போல் விளங்கும் தமது 27 தேவஸ்தானங்களையும் மஹா சிவஸ்தானங்களாகவும் போகமோக்ஷங்களின் வாயிற்படியாகவும் சிவதருமம் பரிபாலித்து, சச்சிதானந்த சிவஸ்வரூப

மான **சிவானந்த சந்திர** உதயமாக விளங்கி உலகினர்க்கு அருள் ஆசி வழங்கிவரும் தருமையண்ணலின் பேரன்பும் பேரருளும், அனைவர்க்கும் திருவருள் பெருக்கி நிற்கிறது வெள்ளிடைமலையே.

**திராவிடக்கவிமணி** போன்ற சிவபக்த சிகாமணிகளும் இந்தப் புத்தகத்தை தமது சிறப்புப்பாயிரக் கவிகள் மூலம் அலங்கரித்து உதவினார்கள். மற்றும் எல்லோருடைய அன்பின் திறத்தாலே இதுகாலை வெளிவரும் இந்த லீலைகள் மக்களின் இதயத்தில் சிவபக்தியை விளைவிக்கும் நல்ல மருந்தாகவும் விருந்தாகவும் விளங்குவதாக.

இந்தப் புத்தகம் அச்சாகி முடிவதற்குள் **கமலாம்பிகா மாஹாத்மியம்** என்னும் அரியநூல் அவசரமாக வெளிவர வேண்டியிருந்ததால் இது சிறிது காலம் தாமதித்துவர நேரிட்டது.

இதைத் தொடர்ந்தே லீலைகளின் மூன்றும் பிரிவாகிய தக்ஷிணாயன லீலைகளும் அச்சாகி வெளிவரும் என்று கமல வசந்தத் தியாகேசரது பொற்பாதகமலங்களைத் துதிப் போமாக.

குருவருளும் திருவருளுமே துணை.

இமைப்பொழுதும் என்னெஞ்சில்
நீங்காதான் தாள் வாழ்க.

**ஆனந்த விலாசம்**
**பிக்ஷாண்டார் கோவில்**
**மன்மத வருஷம்**
**பங்குனி உத்தரம்**

அடியார்க்கடியன் மீளா அடிமை,
ராஜகோபாலன்.

குருபாதம்

தருமபுர ஆதீனம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

தருமபுரம்,
மாயூரம், P. O.
11—1—1954.

"ஞாலம் நின்புகழே மிகவேண்டும் தென்
ஆலவாயில் உறையும் எம் ஆதியே."

# அணிந்துரை.

**தியாகராஜ லீலைகள். (உத்தராயண லீலைகள்)**

அஜபா நடேசப் பெருமானாகிய செல்வத் தியாகேசப் பெருமானின் உத்தராயண லீலைகளை உரைப்பது இந்நூல். இதனால் இறைவன் மக்களுக்குத் துன்பம் வந்தகாலத்தில் தோன்றாத் துணையாயிருந்து காப்பாற்றுதலும் இறைவன் அருள் துணையிருப்பின் குற்றமே செய்யினும் குணமாகும் பெருமையும், அன்பர்களை அவமதித்ததற்கு இறைவனே அளிக்கும் தண்டனை முறைகளும் இறைவன் அடியார்களுக்காக எதனையும் செய்யப் பின்வாங்கான்—எளியனாயிருப்பன் என்ற நிலையும் அறிவிக்கப்பெறுகின்றன. பசு புண்ணியங்களைச் செய்கின்ற காலத்து கொடையாளி செருக்கடைவானாயின் அப்புண்ணியம் பயனளியாது என்பதை உணர்த்தவந்த லீலை மிக அழகானது. உலகத்தில் இல்லாமை என்பதை இல்லாமையாக்கக் கண் கொடுத்தும், காது கொடுத்தும், வாய் கொடுத்தும், கால் கொடுத்தும் காப்பாற்றிய லீலைகள் இறைவனுடைய எளிவந்த கருணைக்குச் சிறந்த எடுத்துக்காட்டுகள். புதல்வர் கடமை, மாதர்—ஆடவர் தருமம், வணிகர் இயல்பு, மன்னன் ஆட்சிமுறை, அந்தணரொழுக்கம், வேளாண்மைச் சிறப்பு இவற்றை அறிவிக்கும் நீதி நூலென்றே இதனைச் சொல்லலாம்.

மக்களுக்கு இறைவனிடம் உண்மையன்பு உள்ளத்து உதிக்க வேண்டுமானால் இறைவன் ஆன்மாக்களுக்கு அருளிச் செய்கின்ற கருணைத் திறங்களை உள்ளபடி உணர வேண்டும். உணர்ந்து உருக வேண்டும். உருகி அடியிணையில் இணைய வேண்டும். இணைந்தால் ஆன்மா அஜபையாகிறது. அஜபைதான் செல்வத் தியாகேசத் திருநடனம். இதனை எல்லோரும் எளிதிற் கண்டு அநுபவிக்கச் செய்வது இந்நூல்.

மகாவித்வான் மீனாட்சிசுந்தரம் **பிள்ளையவர்கள்** இந்நூலை முழுதும் பாடச் செய்த முயற்சிகள் பல என்று அறிகிறோம். தியாகராஜ லீலை என்ற தெய்வக் கோட்டையை எழுப்ப அவர்கள் இட்ட அஸ்திவாரத்தின் மேல் அவர்களாலேயே இக்கோட்டை முடிந்திருக்குமாயின் சிறந்ததொரு காவியத்தைச் செந்தமிழ் பெற்றிருக்கும். அந்தக் குறையை வசன காவியமாக நமது அன்பர் ஸ்ரீமான் பிக்ஷாண்டார் கோயில் பண்ணையார் **ராஜகோபால் பிள்ளை** அவர்கள் முடித்திருப்பது இறைவன் திருவருட் பெருக்கே யாகும். அறவழி காட்டிய செம்பொருளே சிவப்பணிக்கு ஆகும் என்பது சிவாகமத் துணிவு. ஆஸ்திக உலகம் இந்நூலைப்பெற்று இருமைப் பயனையும் எய்துக. அனைவர்க்கும் திருவருளால் நலம் பெருகுக.

## FOREWORD

I am glad that it has been given to me to read this book which contains a further sheaf of the stories relating to the grace of God Tyagaraja of Tiruvarur. I wrote forewords to its two predecessor volumes also. Sri G. Rajagopala Pillai, who is a leading mirasdar of Bhikshandarkoil and is highly respected for his many high qualities of head and heart, has had an inner call to reveal the glories of God and has already done praiseworthy service to our culture by publishing Volumes containing 50 and 80 *Leelas* of Sri Thyagaraja. In this volume 80 leelas (131 to 211) are described in simple and chaste Tamil. Sri N. Subramania Iyer (Chidanandanathar) who is a great philosopher and saintly personality and is a supreme authority on Sakthi worship is connected with this holy effort. The place of Puranas and Itihasas in our national culture is unique. A well-known spiritual concept says that the Vedic technique is that of a royal command (Prabhu Sammita), that the Puranic technique is that of a friendly advice (Suhrit Sammita), and that the Kavya technique is that of a charming suggestive persuasion by a young lovely loving beloved wife (Kantā Sammita). The matter and content of these techniques are the same but the manner and the form vary. The aim of all of them is to turn the outgoing mind and senses inward and upward, to make the human being heed the voice of conscience and of God, to rise from the pleasures of the senses to the bliss of the soul, to soar from egoism to altruism, to sublimate the human into the divine, and to incline our temperaments away from using others as the instruments

of our selfish enjoyment and in the direction of the exalted ideals of Service of Man and glory of God.

Such is the unique value of the Itihasas and the Puranas. The so-called Divine Leelas are the divine acts of mercy and benediction and salvation. They are indispensable for the invigoration of Faith (sraddha) without which mantra and yantra and tantra cannot be effective aids to God-realisation.

The Trinity (Trimurthis) are Parabrahman viewed in relation to the cosmos and especially the cosmic functions of creation and preservation and dissolution. Without creation there can be no preservation; without preservation there can be no dissolution; and without dissolution there can be no creation. Similarly the immanence and transcendence of God go together. God has become the universe, is immanent in it, and transcends it. There is no incompatibility between God the Absolute and God the Father of the Universe. In Himself He is Sathchidananda. In relation to the cosmos He is the creator and the ruler and is full of benevolence and beneficence and mercy and love. He is Law as well as Love. He is the Father of the Universe, and he is also the Mother of the Universe (Pitāham asya jagato mātā dhātā pitāmahaḥ — Bhagavad Gita, Chapter IX verse 17). He is formless and yet has many forms. He is above all attributes and yet has infinite auspicious attributes. Only a small aspect of God has become the world (Pādōsya viswā bhootāni tripād asya amritam divi). The universe is unlimited though boundless as Einstein has shown. But God is Infinite and Absolute. The

dependent transient nature of the world does not limit or affect His Infinite Majesty and Glory.

The Divine concepts of Siva and the Universal Mother and the Linga form of God existed so early as the Sunerian civilisation and even earlier. The Linga is a silent teacher of God's combined form and formlessness. The concepts of Sundaresa and Natesa and Tyagesa show God as Beauty and Dynamic Activity, and total Renunciation. These names embody the highest and most supreme aspects of God-head.

Let us realise and remember that there is a great truth imbedded in the concept of divine miracles. Man is the only animal capable of conceiving and beholding God. The Bhagawata says that that was why God felt glad when man appeared in creation and as the pinnacle of creation. Man feels that he is deathless though the body dies. His self-consciousness is continuous and bridges the yawning gaps between the mutually incompatible and exclusive states of waking and dream and dreamless sleep. Man yearns for total and full and endless bliss and cannot conceive of a time when he was not or will not be. He refuses to believe that he is finite or limited. He refuses to be bound by fetters of the senses. As the great poet Tennyson asks in his famous poem 'The Two Voices',

> Who forged that other influence,
> The heat of inward evidence
> By which he doubts against the sense?

If he were not immortal, why does he long for immortality? If he were not bliss, why does he long for bliss? In the Isāvāsya Upanishad the devotee

asks the Sun-god to gather and put aside His dazzling rays so that he may see the soul of the Sun. He realises that his soul and the soul of the Sun are one and the same. Man's feet are planted on the earth but his eyes gaze on the stars and he stretches out his hands to reach them.

The so-called marvels and miracles are a revelation to man of the higher laws of God — the laws which are higher than the ordinary laws of Nature and which are put in operation for a while out of the infinite store-house of Divine power and then withdrawn into the same treasury of power. Many such higher potencies of miracles are narrated in this Volume. Let me refer to a few of them here. In the Greek stories there is a story of a sculptor named Pygmalion who created a beautiful ivory statue and fell in love with it to the degree of infatuation and began to decline and die in grief, till the goddess Venus endowed it with life. In the 140th Leela we are told how an artist created an elephant made of crystal rivalling Indra's elephant Airavata and how Tyagaraja endowed it with life for a while to enable it to go in procession with the image of Tyagaraja on it. In the 141st Leela we are told how a thief touched the feet of Tyagaraja to steal the anklets and was transformed by the touch into a pure devotee. The supreme aim of these stories is to show the supremacy and omnipotence of Divine Grace.

May we all learn the spiritual lessons of human surrender and Divine Grace!

May this work illumine the hearts of all!

Madras, 16—3—56. K. S. RAMASWAMI SASTRI.

ஸ்ரீ தியாகராஜாய நம:

ஸ்ரீபுரமென்னும் திருவாரூர்

# தியாகராஜ லீலைகள்

இரண்டாம் பிரிவு

(உத்தராயண லீலைகள்)

இரண்டாம் பாகம்

(131-வது லீலை முதல் 211-வது லீலை முடிய)

81 லீலைகள்

## விமர்சவுரை

இவ் விமர்சவுரையைப் படிப்பவர்கள், முதற் பிரிவாகும் தேவலீலைகள் ஐம்பதுக்கும், இரண்டாம் பிரிவாகிய உத்தராயண லீலைகள் முதற்பாகம் 80 லீலைகட்கும் அடியேனால் இயற்றப்பட்ட மெய்யுரையை மனவொருமையோடு அமைதியாய் வாசித்த பின்னர் இவ்வுரையை வாசிக்கும்படி கேட்டுக்கொள்ளப்படுகின்றனர்.

கிருத, திரேதா, துவாபர, கலியென்று கூறப்படும் யுகங்கள் நான்கினுள், முதல் இரண்டு யுகங்களில் ஸ்ரீ தியாகராஜப் பெருமான் இயற்றியருளிய லீலைகட்குத் தேவலீலை யென்றும், துவாபர யுகத்திலும் கலியுக ஆரம்பத்திலும் இயற்றிய லீலைகளுக்கு உத்தராயண லீலை யென்றும், கலியுகத்தில் இயற்றியருளிய லீலைகட்குத் தக்ஷிணாயன லீலை யென்றும் வரையறுத்துக் கூறப்பட்டுள்ள விஷயம் ஸ்ரீ தியாகராஜ லீலைகள் முதற்பகுதியாகும் தேவ லீலைகளின் முன்னுரையில் கூறப்பட்டுள்ளதைக் கூர்ந்து உணர்தல் அவசியம்.

ஸ்ரீ தியாகராஜ லீலைகள், இரண்டாம் பிரிவு இரண்டாம் பாகமாகும் இந்நூலில் 81 லீலைகள் வர்ணிக்கப் பட்டுள்ளன. இதிலுள்ள ஒவ்வொரு லீலையும், ஸர்வக்ஞனும், ஸர்வ வியாபியும், பேராற்றலுடையவனும், கருணைக் கடலாய் விளங்குபவனும், மெய்யன்பர்களின் இதயக் குகையில் நன்கு விளங்குபவனுமாகிய ஸ்ரீ தியாகராஜப் பெருமான், தத்தம் வர்ணாச்ரம தர்மங்களினின்றும் ஒரு சிறிதும் வழுவாமல் நல்லறமாகிய ஸன்மார்க்கத்தில் நின்று ஜீவகாருண்யம், பாசவைராக்கியம் முதலிய உத்தம ஸாதனங்களைப்பெற்றுத் திரிகரணத் தூய்மையுடன் ஸ்ரீ தியாகேசனிடத்தில் மெய்யன்புடைய உத்தம பக்தர்களுக்கு, அவரவர் வேண்டியபடி அருள்புரிந்த வரலாற்றைக்கரதலாமலகம்போல் காட்டுவதாயுளளது.

இதிலுள்ள லீலைகளிற் பெரும்பாலும் ஸ்ரீ தியாகேசன் ஸ்வஸ்வரூபத்தோடு பிரத்தியக்ஷமாகாமல் ஆகாசவாணியாய்த் தோன்றியருளியது கூர்ந்துணரத்தக்க விஷயமாகும். கலியுகத்தின் இயல்பிற்குத்தக்கபடி, தர்மமானது மிகமிகக் குறைந்துள்ளதென்பது சாஸ்திரசித்தாந்தமாகும். தர்மம் குறைந்த இக்கலியுகத்தில், மெய்யன்பர்க்குப் பிரத்தியக்ஷமாய்த்தோன்றாது தோன்றாவடிவினனாய்த்துணை செய்வது இந்த லீலைகளில் கண்கூடாய்க் காணலாம். இங்ஙனம் தோன்றாத்துணையாய் விளங்கியருள்புரிந்தது ஸ்ரீ தியாகேசனேயாமென்று ஆகாசவாணி உணர்வித்தமையும் காணலாம்.

இதிலுள்ள ஒவ்வொரு லீலையையும் நன்கு விமர்சிப்பின் அவ் விமர்சனமே ஒரு பெரிய நூலாகும். இந்த லீலைகளால் பரமேச்வரனது பேராற்றலும் ஸ்வாதந்தர்யமும், இச்சைப்படி ஒருருவத்தோடு விளங்குதலும் நன்கு புலனாகின்றன. 176-வது லீலையில் ஸ்ரீ தியாகேசன் ஒரு மந்த்ரவாதியாய்த் தோன்றி இந்திரதத்தை யென்னும், சோழ

ராஜகுமாரியின் மேல் ஆரோகணித்துள்ள பிரஹ்மராக்ஷஸ னுடைய, பாரமார்த்திக சுத்தப் பிரஹ்மத்தைப் பற்றிய ஐயவினாக்களுக்குத் தக்க விடைகூறிப் பிரஹ்மரக்ஷஸை யுய்வித்து, அரசகுமாரிக்கு அருள் புரிந்த விஷயம் உய்த் துணரத் தக்கதாகும். அங்ஙனமே 190-வது லீலையில், தியாகேசன் ஆதி குரு தக்ஷிணாமூர்த்தியாய்த் தோன்றிக் காத்தியாயனர், சாண்டில்யர், முதலிய மஹரிஷிகளுக்கு அருள்புரிந்து தத்வோபதேசம் செய்தமையும் கவனிக்கத் தக்கதேயாகும்.

அன்றியும் 201-வது லீலையில், சிவபக்தியின் சிறந்த சின்னமான உருத்திராக்ஷத்தின் மஹிமை நன்கு விளக்கப் பட்டுள்ளது. வைதிக சைவசமயத்தை ஒழித்துவிட வேண்டுமென்று தீர்மானித்த புத்த, சமணராதி அவைதிக புறச்சமயிகளின் மந்த்ர ஸ்தம்பன, உச்சாடனாதிகளை மஹா மந்த்ரேச்வரனாய் விளங்கும் ஸ்ரீ தியாகேசன் தடுத் தொழித்து சைவத்தை நிலைபெறச்செய்து சிவபக்தர்க்கு அருள் புரிந்த விஷயம் நன்கு அநுஸந்திக்கத்தக்கதாகும். இறந்தவரை மறுபடியும் உயிர்ப்பித்து அருள் புரிந்த லீலை களால் பரமேச்வரனது காலகாலத்தன்மை வெளியாகின் றது. சகுன சாஸ்திரம் ஸ்வப்ன சாஸ்திரம் இவற்றின் படி நடந்த நிகழ்ச்சிகளை மீறி அருள்புரிந்த லீலையால், பரமேச் வரனே ஸர்வசாஸ்திரங்கட்கும் ஈசானனும் என்னும் விஷயம் புலனாகின்றது.

பரமேச்வரனுக்கு அர்ச்சனை செய்த வில்வதளங்களின் அபாரசக்தி 167-வது லீலையால் நிர்ணயிக்கப்படுகின்றது.

இங்ஙனமே, இந்நூலிலடங்கியுள்ள 81-லீலைகளைத் துருவி ஆராயின், மானிடப்பிறவியின் பெரும் பயனாகிய சிவாநந்த நிலையின் அடைவிற்குரிய சாதனங்கள் பல விளங்கும்.

இத்தகைய சிறப்புக்கள் வாய்ந்த இந்நூலை, ஸ்ரீ பிக்ஷாண்டார்கோயில் பெரும் பண்ணையாளரும், ஸ்ரீ தியாகராஜாவின் சீரடித் தாமரைகளிற் சிறந்த உழுவலன்புடையவரும், வைதிக சிவாத்வைதத்தின் அநுபூதியில் தோய்ந்த மனமுடையவரும், மிருதுமதுர பாஷியும் ஸ்ரீ கமலாலயத்தின் சிறப்பையுலகிற்கறிவிக்கக் கங்கணம் பூண்டு விளங்குபவருமாகிய **ஸ்ரீமான் G. ராஜகோபால பிள்ளையவர்கள்** தமது விடாமுயற்சியால் சொந்த சிலவில் அச்சிட்டு வெளியிட்டுள்ளார். இங்ஙனமே தக்ஷிணாயன லீலைகளையும் வெளிப்படுத்தி ஆஸ்திக லோகத்திற்கு அருள் புரிவாராக. இவர் மாட்டுப்பொதுவாக ஆஸ்திக மானிடவர்க்கமும் சிறப்பாகச் சிவநேசச் செல்வர்களும் நன்றி பாராட்டுவாராக.

சிவம்.

ஸ்ரீ ஞானாநந்தமண்டலி
பவழந்தாங்கல்
சென்னை-16
மன்மத-பங்குனி-5
பாநுவாரம்.

இங்ஙனம்
விதேயன்

N. சுப்பிரமண்ய அய்யர்

(சிதாநந்தநாதன்)

# சிறப்புப் பாயிரம்.

பிரம்மஸ்ரீ *திராவிடக் கவிமணி வே. முத்துஸாமி ஐயர் M. A., L. T.,—முன்னைப் பாடசாலைப் பரிசோதகரும், மஹாமஹோபாத்யாய உ. வே. சாமிநாத ஐயரவர்கள் சீடருமான திருக்காட்டுப்பள்ளியை அடுத்த ரங்கநாதபுரவாசி அளித்தது.

**ஆறுசீர் விருத்தம்.**

1. மனவாக்குக் கெட்டாத மறைப்பொருளாம்
மாதேவன் மன்உ யிர்தம்
இன்மாக்கம் பெற்றுய்தி எய்தத் தன்
திருவுளத்தில் ஈரம் கொண்டு
தன்தாடல் அற்புதமாப் பல இடத்தும்
பலகாலும் தழையச் செய்தான்
எனுமுண்மை சொக்கேசன் கண்ணபிரான்
இலீலைகள் எடுத்துக் காட்டும்.

2. உம்பர் நா டாளாதே உவந்து முசு
குந்தன் அன்புக் (கு) உமை சே யோடும்
இம்பர் ஆ ரூரில் அரி யாசனம் வீற்
றிருந்தருள் த்யா கேசப் பெம்மான்
பம்புசீர் லீலைமுந் நூற் றறுபதுமுன்
புரிந்தனன்; அப் பரமன் ஆடல்
தம் பருஉப் பெயரளவும் தாம்மறைய
நின்றவைகள் தாம்சீ ரேழே.

(வரி 4. பருஉப் பெயர்—பெரும் பெயர்)

* ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதிகள் அளித்த பட்டம்.

3. இந்நிலையில் மீனாட்சி சுந்தரப் பேர்ப்
பெருஞ்சைவத் (து) ஈடில் பாடல்
மன்னனுந்தன் தியாகேச லீலையிலிப்
பதினான்கே வகுத்துச் சொன்னான்
அன்னவனும் அவன் முதன்மா ணவன், எளியேன்
குரு, பெரும்பேர் ஆசான் தானும்
என்னமுயன் றுங்காணு இப்புதையல்
துருவிக்கண் டெடுத்தச் சிட்டான்

(பெரும்பேர் ஆசான்—மஹா மஹோபாத்யாயர்)

4. இச்சிட்டன் நிறைசெல்வத் திருவாரூர்
இலங்கும் அபி ஷிக்த வம்சத்(து)
அச்சிட்ட கோவிந்த சாமி
வேள்திருமகனு அங்குத் தோன்றி
மொய்ச்சிட்ட புகழ்ப்பிச்சாண் டாரூர்ப் பண்
ணையார் மகளை முறையின் வேட்டு
மச்சிட்ட மாளிகைநன் னிலபுலம் பொன்
எனைத்திருவும் மல்குஞ் சீலன்.

(வரி 4. எனைத்திரு—எத்தனை செல்வம்)

5. சிவமயமாக் குகமயமாச் செகமனைத்தும்
கண்டுவக்கும் செம்மை யாளன்,
தவமயமே உருவெடுத்த தன்மையினில்த்
தக்கோரைத் தாங்கிப் போற்றி
நவவகையில் ஆதரிக்கும் இராஜகோ
பாலப் பேர் நண்பார் செல்வன்
பவமயல் தீர்க் துய வாணீ விலாஸ் முதல்வர்
பால் வசனம் பண்பிற் கண்டான்

6. கண்டெடுத்த பிரதியொன்றைக் கண்போலக்
காப்பாற்றிக் கைவல் லோரைக்
கொண்டுபடி எழுதுவித்துப் பிழைதிருத்தி
நலஎழுத்திற் கூறு கூறு
மண்டு சுவை லீலை இரு நூற்றுப் பத்
தொன்றுவரை வகுத்து மூன்று
தண்டமிழ்நூ லா அளித்தான் படிக்குநர்தம்
கரத்தெளிது தயங்கு மாறே.

7. செவ்வியஇந் நூல்தருமைத் தலைவர் அணிந்
துரையினொடு திவான் பஹதூர்
ஒவ்விய ரா மஸ்வாமி சாஸ்திரியார்
ஆங்கிலமுன் னுரையும் சென்னைத்
திவ்விய கவி அபிநவபாஸ் கரசுப்ர
மணியயர் சிறப்பும் சேரும்
இவ்வகை நூற் கெளியேனிங் கேற்றமினி
எவ்வகையின் இயம்பு கேனோ?

ஷை வேறு.

8. எஞ்சிய நூற்று நாற்பத் தொன்பது லீலை யாவும்
செஞ்செவே விரைவில் அச்சிற் சேர்த்தொளி
செய்யு மாறு
இஞ்சிசூழ் திருவா ரூர்த்யா கேசன் இன்
அருட்சீர் வாழி
விஞ்சு ராவ் பகதூர் ராஜ கோபால விபுதன் வாழி

(வரி 3. இஞ்சி—மதில்; வரி 4. விபுதன்—அறிஞன்)

மேற்படி ஐயரவர்கள் குமாரரும் மாணாக்கருமாகிய திருவாளர், பாலகவி, மு. கோதண்டராமன் அவர்கள் கூறிய சாற்றுக்கவி.

## எழுசீர் விருத்தம்.

1. பிறந்தவர் பிறவாப் பேரருள் புரியும்
பீடுசால் எழிற் பதியாய
நிறைந்த நற் செல்வம் திகழ் திருவாரூர்
நிமலனார் புவிமிசை அன்பால்
அறந்தழைத் தோங்க நிகழ்த்திய மூந்நூற்
றறுபதாம் ஆடல்கள் அனைத்தும்
சிறந்த நன் முறையில் செகமெலா முய்யத்
தெளிவுறப் பதித்தனன் ஆய்ந்தே

## ஆறுசீர் விருத்தம்

2. நச்சாண்ட அரவமதி கங்கை நதி ஆத்திமுடி
நயந்தோன் நாளும்
கச்சாண்ட நகிலுமையாள் தனைப்பாகம் பிரியாதான்
கபாலம் ஏந்திப்
பிச்சாண்ட பிரான்பாதம் மறவாது பேரன்பாற்
பேணி நெஞ்சில்
வைச்சாண்ட தகையாளன் இராஜகோ பாலப்பேர்
வள்ளல் மாதோ.

# பொருளடக்கம்

## ஸ்ரீ தியாகராஜ லீலைகள் :—இரண்டாம் பிரிவு

## உத்தராயண லீலை.

(இரண்டாம் பாகம்)

திருச்சிற்றம்பலம்.

# திருவாரூர்

# ஸ்ரீ தியாகராஜ லீலைகள்

(முந்நூற்று அறுபது)

**இரண்டாவது பிரிவு**

## (உத்தராயண லீலை)

*(லீலை 51 முதல் லீலை 211 முடிய)*

இரண்டாவது பாகம்

### 131. விறகு வெட்டிய லீலை

காந்தார தேசத்து மகாராஜன் தனது பரிவாரங்களுடன் நடராஜரை தர்சிக்க வேண்டுமென்று தில்லைப் பதியை யடைந்தான். சிற்சபையில் விளங்கும் நடனபதியை முறைப்படி அவ்வரசன் தரிசித்துக் கொண்டு தமதிருப்பிடம் செல்ல முயன்றபொழுது அவ்வரசனது சமீபத்தில் சில புலவர்கள் வந்து, தியாகராஜாவின் மகிமையைச் சொல்லக்கேட்டு அவன் புண்ணியபுரத்துக்கு வந்தான்.

வேதியர்களின் வேத கோஷத்தையும், தேவாலய வாத்தியங்களின் ஒலியையும், மாதர்களின் வீணைகானத்தையும் கேட்டு ஆனந்தமடைந்த காந்தார தேசாதிபன் இத்திருவாரூருக்குச் சமமான நகரத்தை எங்கும் கண்டதில்லையென வியந்து கமலைப் பொய்கையில் நீராடி தேவாலயத்துக்குட்புகுந்து அங்கு விளங்கும் மண்டபங்களையும், மேடைகளையும், சாலைகளையும் கண்டு களித்து வலம் வந்து தியாகேசனின் முன்னிலையில் வந்து பணிந்து அமலனது [illegible]ருமே[illegible]கண்டு ஆனந்தக்கண்ணீர்

மல்கவும் உளம் மகிழவும் தெண்டனிட்டுப் பணிந்து மறுபடியும் பணிந்து துதித்துக் கைகூப்பிப் பலவாறு துதி செய்யத்தொடங்கினான்.

தியாகராஜ! தர்மசேதுவே! மணிவிளக்கே! பக்தரின் அமுதமே! பார்வதிபாகனே! என்று இவ்விதமாய் முகூர்த்தகாலம் துதி செய்து தனதிருப்பிடம் சென்று சோழ சக்கரவர்த்தியுடன் ஆலோசனை செய்து அந்தப் புண்ணிய புரத்தில் தியாகேசனின் திருவருளுக்காக லக்ஷப் பிராமண போஜனம் செய்து வைப்பதாய் தீர்மானித்துக் கொண்டான். செல்வத்தில் குபேரனுக்குச்சமமான அந்தக் காந்தார தேசத்தரசன் வேண்டிய திரவியங்களையெல்லாம் தகுந்தகாலத்தில் சேகரிக்கும்பொழுதே எண் திசைகளி லிருந்தும் லக்ஷக்கணக்கை மீறியவர்களாய் அந்தணர்கள் அங்குவந்து கூடினர்.

அத்தருணத்தில் அவ்வரசன் வேதியர் கூட்டம் கூட்ட மாய் வரக்கண்டு உளமகிழ்ந்து கோடிக்கணக்கான பிராமணர்கள் வந்தபோதிலும் ஒரு மாதம் வரையில் அவர்களுக்கு இந்தப் புண்ணியபுரியில் அமுதளிக்கப் போவதாயும் நானாவித தானங்கள் செய்யப்போகிறதாகவும் பறை சாற்றினான். இவ்விரண்டு காரணங்களினாலும் பக்தியினாலும் இழுக்கப் பட்டவர்களாய் அளவற்ற வேதியர்கள் திருவாரூருக்கு வந்து கூடும்பொழுதே நீர் கொண்ட மேகங்களும் ஆகாயத்தில் கிளம்பி அச்சோழ நாட்டில் வர்ஷா காலவரவை யறிவித்தன. அவ்வண்ண மிருந்தபோதிலும் அரசனது கட்டளையினால் அம்மழைக் காலத்துக்குத் தக்கவாறு சாலைகளையும், போசனசாலை களையும் அமைத்திருப்பதினாலும் மதிப்பற்ற திரவியங்கள் சேகரிக்கப்பட்டு வைத்திருப்பதினாலும் பௌர்ணமி தினத் தில் ஆரம்பிக்கப்பட்ட அந்தக்கோடிப் பிராமண போஜன மானது இருபது நாள்கள் வரையில் எவ்விதத் தடையு மின்றி முறைப்படி நடந்து வந்தது.

அத்தருணத்தில் சோழ நாட்டில் நாட்கள்தோறும் மேகங்கள் விசேஷமாய் மழையைப்பொழிய முயன்றமை யால் அத்தேசத்தில் எல்லா இடங்களிலும் பெரிய வெள்ளம் தோன்றிற்று. சூரியன் உதிப்பதும் மறைவதும் தெரியா வண்ணமாய்க் கருமுகில்கள் திசைகளை மூடிக்கொண்டு மழைத் தாரைகளை உமிழ்ந்தன. இடியும், மின்னலும் காற்றும் மிகவும் பயத்தை உண்டுபண்ணின. இப்படிப் பட்ட வர்ஷா காலத்தில் சமையல் செய்வதற்குச் சேகரிக் கப்பட்ட விறகு முற்றிலும் எரிக்கப்பட்டாயின. விறகு இல்லாமையைக்கண்ட பாசகர்கள் காந்தார ராஜனிடத் திலும், சோழ ராஜனிடத்திலும் தெரிவித்தார்கள். அதைக் கேட்ட அவ்வரசர்களிருவரும் எவ்வித முயற்சி செய்து போதிலும் விறகு கொஞ்சமும் கிடைக்கவில்லை. ஒரு நகரத்திலிருந்து மற்றொரு நகரம் செய்வதற்குத் தடையாய் இருந்தது ஜல வெள்ளம். "அளவற்ற வேதியர்கள் பசியை யடைந்து வருகிறார்களே! எங்கும் விறகு கிடைக்கவில்லையே தியாகேச! என்செய்வோம்; இப்பெரிய பாபத்துக்கு ஆளாகி விட்டோமே" என்று அவர்கள் துயரப்பட்டுக் கொண்டிருக்கையில் ஒரு வேதியர் அவர்களிடம் வந்தார்.

வந்த வேதியருக்கு ஆஸனமளிக்கவும் அர்க்கியம் கொடுக்கவும் மதியிழந்து நிற்கும் அவ்வரசர்களைக்கண்டு அவ்வேதியன் ஆசிகூறியபிறகு, "ஓ பூபாலர்களே! நீங்கள் ஏன் துயரப்படுகிறீர்கள்; நான் இவ்வூருக்கு வரும் வழியில் யோகிபோல் தோன்றுகின்ற புருஷன் ஒருவன் ஒரு மரத் தடியில் நின்றுகொண்டு விறகு வாங்குபவர்கள் உளரோ வென்று கூப்பிடுகிறான்" என்று சொன்னார். அம் மொழியைச் செவியிற்கொண்ட அம்மன்னரிருவரும் அள வற்ற தனத்தைக் கொடுத்தாவது அவனிடமிருந்து விறகு களை வாங்கி வாருங்கள் என்று வேலைக்காரர்களை அனுப்பி னார்கள். அவர்கள் வெகு விரைவாய் அப்புருஷனிடம் வந்து விறகுச்சுமை எங்கே இருக்கின்றதென்று கேட்க

தியாகராஜராகிய அப்புருஷன் கையிலிருக்கும் கோடாரியினால் ஒரு பச்சை மரத்தைப் பிளந்து துண்டுகளாக்கி அவைகளைக் கட்டிக்கொடுத்து இக்கட்டு ஒன்றே அநேக லக்ஷப்பிராமண போஜனத்துக்குப் போதுமென்று உரைத்தான். அவர்கள் அவ்வுரையைக்கேட்டு அக்கட்டு ஒன்றை மாத்திரம் அரசனிடம் கொண்டுவந்து அங்கு நடந்தவைகளைச் சொன்னார்கள்.



## 132. தேனைத் தண்ணீராக்கிய லீலை

சந்திரசூட தீக்ஷிதர் என்பவர் தியாகராஜாவின் திருமேனி குளிர்ச்சியடையும்படி அபிஷேகம் செய்வதற்காகப் பலவிடங்களுக்குச் சென்று பொருளை யீட்டிக்கொண்டு திருவாரூருக்குத் திரும்புகையில் ஒரு நாள் நடுவழியில் சூரியன் மறையும் ஸமயமாக இருந்தது.

அந்நேரத்தைக் கண்ட தீக்ஷிதர் அருகிலிருக்கும் கிராமத்தில் தங்கியிருந்து மறுநாட் காலையில் புண்ணியபுரம் போகலாமென்று நிச்சயம் செய்துகொண்டு அருகிலுள்ள கிராமத்தில் நுழைந்தார். அங்குள்ளவரனைவரும் அவரது பொருளீட்டும் விஷயத்தை அறிந்துகொண்டு தம்மால் அளிக்கக்கூடிய பொருளை அளித்து அவ்வூரிலுள்ள ஒரு மடத்தில் தங்கியிருக்கும் ஒரு வைசிய வியாபாரியைக் காண்பித்தார்கள். தீக்ஷிதரும் வியாபாரியிடம் சென்று தியாகராஜனது திவ்யாபிஷேகத்துக்காகப் பொருள் அளிக்கக் கூடுமாவென்று யாசித்தார். வியாபாரத் தொழிலால் அளவற்ற செல்வத்தைச் சம்பாதித்த அவ்வைசியன் அத்தருணத்தில் நூறு குடங்களில் தேனை வைத்துக்கொண்டிருப்பதையறிந்த தீக்ஷிதர் பரமேசுவரன் கைங்கரியத்துக்காக பொருளாவது திரவியமாவது அளிப்பது நலமென்று சொன்னார். பக்தியற்ற அவ்வைசியன் சற்று நேரம்வரையில் பேசாமலிருந்து தற்சமயம் என்னிடத்தில் திரவியம்

ஒன்றுமில்லையென்றுரைத்தான். அபிஷேகத்துக்காக கொஞ்சம் தேன் அளித்தால் போதுமென்று தீக்ஷிதர் கேட்டதற்கு அவன் இவைகள் எல்லாம் தண்ணீர்க் குடம் என்று பொய்யுரைத்தான்.

அவ்வுரை தனது செவியில் புகுவதற்குள்ளாக தீக்ஷிதர் தியாகேசனே கதியென்றுரைத்துக் கொண்டே திரும்பி வந்து அன்றிரவை அந்தக் கிராமத்தில் கழித்துவிட்டு மறுநாட் காலையில் புண்ணியபுரத்துக்குச் சென்றார். பொய்யுரைத்த அவ்வைசியன் அன்றிரவு உறங்கும்பொழுது தன் வசத்திலிருக்கும் நூறு தேன் குடமும் நூறு தண்ணீர்க் குடங்களாக மாறியதுபோல் கனவு கண்டான். வியாபாரத் தொழிலில் பேராவல் கொண்ட அவ்வைசியன் திடுக்கிட்டெழுந்து அத்தேன் குடங்களைப் பார்க்கும்பொழுது அவைகள் எல்லாம் தண்ணீர்க் குடங்களாக மாறியிருந்தன. அவ்வித மாறுதலைக் கண்டு மனக்கொதிப்பு கொண்ட அவ் வியாபாரி தீக்ஷிதர் செய்த மந்திரமோ; தியாகராஜனே செய்த சூதோ! என்று அலறி அழுது கூக்குரலிட்டு மோதிக்கொண்டு ஹா ஹாவென்று கதறி மறுநாட் காலையில் அந்தத் தீக்ஷிதரையே விசாரிப்போமென்று அவரிருக்குமிடத்தைத் தேடி வரலானான்.



## 133. செல்வத்தை மறையச்செய்த லீலை

சாரிகாபுரியில் தராமீடன் என்னும் வைச்யன் ஒருவன் இருந்தான். அவனும் வியாபாரவழியில் அளவற்ற செல்வத்தை யடைந்தவன். அவனுக்கு எவ்விதமாய் நற்புத்தியுரைத்த போதிலும் தானம் செய்வதினால் நற்பயனுண்டாகுமென்பதை அவன் அறிந்து கொள்ளவேயில்லை. செல்வத்தில் குபேரனுக்கு நிகராகிய அத்தராமீடன் தேவ

காரியத்திலும், அதிதி காரியத்திலும், ஆசாரிய காரியத்திலும் திரவியத்தைச் செலவு செய்யாமல் தனது வாழ்நாட்களை வீணில் கழித்துவந்தான். ஏழைகளிடத்தில் தயையற்றவனாயும், தானத்தின் சிறப்பையறிந்து கொள்ளாதவனாயும் உலோபியாயுமிருக்கும் அவனது இல்லத்திற்கு ஒரு நாள் ஒரு வேதியர் வந்தார்.

அவ்வேதியருக்கு அவன் அச்சமயத்தில் ஆஸனமளித்து அவரது தேச சஞ்சாரத்தை விசாரித்து வருகையில் அவ்வேதியர் தான் காஞ்சிநகர வாஸியென்றும் ஆரூர் நாதனுக்குத்தான் செய்யவேண்டிய பிரார்த்தனைத் திரவியங்களை அளிப்பதற்குப் பலரிடத்திலிருந்தே பொருள் தேடி வருவதாயும், உமது திரவியமும் இவ்விஷயத்தில் கொஞ்சம் சேரவேண்டுமென்று கூறினார். யாசகத்தின் ஸ்வரூபத்தையும் ஈகையின் சிறப்பையும் எழுபது வயது வரையில் அறியாத அவ்வைசியன் அச்சமயத்தில் தெய்வச் செயலாய்க் கொஞ்சம் மாறிய மதியையுடையவனாய்க் கொண்டு பிறைசேர்ந்தும் பிரானை மனதில் தியானித்துக் கொண்டு அவ்வேதியரின் தோற்றத்தையும் கண்டு வியப்படைந்து அவருக்கு நூறு பொன் அளிப்பதாகச் சொன்னான்.

அவ்வுரையைக்கேட்ட வேதியர் அக்காலத்துக்குரிய ஸந்தியாவந்தன காரியங்களை நிறைவேற்றுவதற்காகச் சென்று அவைகளைச் செய்து முடித்துவிட்டு, அவ்வைசியனிடம் செல்லும் பொழுது அவனது புத்திக்கு மறுபடியும் சஞ்சலம் உண்டாயிற்று. காரணமின்றித்தான் எதற்காக இவ்வேதியருக்கு நூறு பொன் அளிக்கவேண்டுமென்று சற்றுநேரம் நிலைகலங்கினான். இல்லையென்று சொல்வதற்கு மனம் வராமல் பேசாமல் இருந்தான். வேதியரைப் பல தடவை வரச்சொல்லி அவருக்கு வீணான சிரமத்தைக் கொடுத்தான். இவ்வாறு கடுஞ்சினத்தனாகிய அத்தராமீடன் என்னும் வைசியன் முடிவில் அவ்வந்தணரை நோக்கி இந்தச் சமயத்தில் என்னுடைய பண்டாரத்தில்

திரவியமே இல்லை ; மற்றொரு சமயத்தில் வருவீராகில் தடையின்றி யளிப்பதாய் உரைத்தான்.

முதுவேனிற் காலத்தில் காட்டில் வீசும் கானலை ஜலமென்று நினைத்த மான்போல் சரீர மெலிவையடைந்த அவ்வேதியர் தனக்கு உண்டாகிய கோபத்தை யடக்கிக் கொண்டு ஒன்றும் பேசாமல் திருவாரூருக்கு வரலானார்.

கடுஞ்சினத்துடன் வேதியர் சென்றதைக் கண்ட அவன் பயத்தை யடைந்து தான் கூறிய பொய்மொழிக்கு எவ்வித தீங்கு நேரிடுமோவென்று நடுக்கமுற்றுத் தனது பண்டாரசாலையைத் திறந்து பார்க்கும் பொழுது அவ்விடத்தில் தானே பெட்டியில் கணக்கிட்டு வைத்த நவரத்தினங்களும் பொன் குவியல்களும் மறைந்திருக்கக்கண்டு வயிற்றிலடித்துக் கொண்டும் மோதிக்கொண்டும் இவ்விதமாய் வஞ்சனை செய்தது அவ்வேதியரோ ? அல்லது தியாகேசன் செய்த வஞ்சனையோவென்று புலம்பிக்கொண்டு அக்கணமே திருவாரூருக்கு வந்து தியாகேசன் எதிரில் வணங்கி தனக்கு நேரிட்டதைச் சொன்னான்.

அத்தருணத்தில் தனது தேன் குடம் நூறும் தண்ணீர்க் குடமாக மாறிவிட்டதைப்பற்றி விசாரிக்க வேண்டுமென்னும் கருத்துடனே திருவாரூரை யடைந்து அந்தத் தீக்ஷிதரைக் காணமல் மெலிவெய்திய அவ்வைச்யன் ஆலயத்துக்குட்புகுந்து தியாகேசனுடைய எதிரில் நின்று முறையிட்டுக் கொண்டிருந்தான். இவ்விதமாய் ஒரே காலத்தில் இரண்டு வைச்யர்கள் தியாகராஜனது முன்னிலையில் புலம்புவதைக்கண்ட ஜனங்களெல்லோரும் திகைத்து நிற்கையில் தியாகராஜர் ஆகாய வாணியினால் "அவ்விரண்டு வைச்யர்களும் பொய்யுரைத்த படியால் இவ்வண்ணம் நேரிட்டது. இனி இவ்விதமாய் நடந்துகொள்ளக்கூடாது" என்று உரைத்ததைச் செவியிற்கொண்ட அவ்விரண்டு வைசியர்களும் ஈசனைப்பணிந்து திரவியத்தை யளித்து நற்புத்தியுடன் தமதிருப்பிடம் போய்ச் சேர்ந்தார்கள்.

## 134. பூநலையை யழித்த லீலை

தராமீடன் என்னும் வைச்யன் தனது இருப்பிடம் சென்று பண்டார சாலையைத் திறந்து பார்க்கையில் அளவற்ற திரவியங்கள் இருக்கக்கண்டு, எல்லாம் தியாகேசன் அருளையல்லாது வேறில்லை யென்று நினைத்துத் தியாகேசனிடத்தில் ஒப்பற்ற பக்தியையடைந்து தனது பண்டாரசாலையிலிருக்கும் நவரத்தினங்களையும் பொற் குவியல்களையும் ஒட்டகங்களின் மீதும் குதிரைகளின் மீதும் ஏற்றிக்கொண்டு தனது குல குருவையும் ஆயிரக்கணக்கான வேதியர்களையும் அழைத்துக்கொண்டு திருவாரூர் நகரத் துக்கு வந்து சேர்ந்தான்.

தேன் வியாபாரியும் அளவற்ற தேன் குடங்கள் இருக் கக்கண்டு எல்லாம் தியாகராஜாவின் செயலேயல்லாது வேறில்லை என்று நினைத்துத் தியாகேசனுக்குச் சிறந்த அபிஷேகம் செய்யக்கருதி தேன் குடங்களையும் அளவற்ற பொருள்களையும் எடுத்துக் கொண்டு திருவாரூருக்கு வந்தான். இவ்வண்ணம் இரண்டு வைச்யர்களும் சிறந்த பக்தியுடன் வந்திருக்கிறார்கள் என்று கேள்வியுற்ற அந்நகர வாஸிகளும் கும்பலாய் வந்து கூடி அவ்விருவர்களின் பக்தி யைப்பார்த்து வியப்படைந்து புகழ்ந்து கொண்டிருக்கையில் அவ்விருவர்களும் தமது குலகுருவை முன்னிட்டுக்கொண்டு கமலாலயத்தில் வேதியர்களுக்கு விசேஷ தானங்களைச் செய்தபிறகு தியாகேசனுக்குப் பஞ்சகவ்வியாபிஷேகத்தை ஆகம முறைப்படி செய்துவைத்து அன்றிரவில் தெப்போற் சவத்தையும் வெகு சிறப்பாய் நடத்திவைத்தார்கள்.

தியாகராஜர் அன்றிரவில் தெப்பத்தில் வீற்றிருந்து பக்த ஜனங்களின் கண்கள் குளிர்ந்து களிக்கும்படி தரிசனத்தையளித்து வருகையில், ஆகாயவாணி யுரைத்த தாவது:— "கேளீர் பக்தர்களே! இவ்விரண்டு பக்தர்களும் சிறந்த பக்தியுடன் செய்துவைத்த இத்தெப்போற் சவத்தைத் தியாகேசர் அடைந்து வருகையில் அநேக

ஆயிர வருஷங்களுக்கு முன் இத்தியாகேசனை அழிக்க வேண்டுமென்று எதிர்த்து வந்த ராக்ஷஸன் ஒருவன் துர்வாஸ முனிவரின் சாபத்தினால் இக்கமலாலயத்தில் முதலை ஜன்மத்தை யடைந்து வாசஞ்செய்துவந்தான். அப்படிப் பட்ட முதலையானது இத்தெப்பத்தைத் தண்ணீரில் கவிழ்த்துத் தியாகராஜனுக்குத் துன்பத்தை விளைவிக்கக் கருதித் தனது கொடிய பற்களால் இத்தெப்பத்தை இழுக்கும் தருணத்தில் தியாகராஜன் திவ்யசக்தியினால் அம்முதலை வாய்பிளந்து இறந்துவிட்டது" என்று சொல்ல தொண்டர்கள் எல்லோரும் விரைவாய் அங்கு சென்று உயிரை யிழந்து மலைபோல் தோன்றும் அம்முதலையை வலைவீசிக் கரையில் கொண்டுவந்து சேர்த்தார்கள்.

பிறகு தொண்டர்கள் எல்லோரும் வியப்படைந்து தியாகபதியின் கருணையைப் பலவாறு துதித்து அத்தெப்பத்திலிருந்து தியாகபதியின் திருமேனியை இறக்கிப் பற்பல சிதலோபசாரங்களினால் விடாய்மாறச் செய்துவைத்து தேவவேதிகையின் மீது வீற்றிருக்கச் செய்து பணிந்து பூசித்துவந்தார்கள். பலவகையிலும் பக்தரை காக்கும் தியாகேசன் அருளால் அதுமுதல் சகலவித ஜீவராசிகளுக்கும் எவ்வித துன்பமும் நேரிடவில்லை. வியாதியுடையவர்களும் வியாதியின்றி வாழ்ந்தனர். அக்காலத்தை மெய்ஞ்ஞானியர் கிருதயுகம் என்றே நினைத்து மகிழ்ந்தார்கள்.



## 135. பக்ஷியின் குஞ்சுகளையீன்ற லீலை

காவிரிக்கரையில் சம்பாபுரமென்னும் ஒரு நகரமுண்டு நகருக்கருகில் ஓர் அழகிய தாமரை வாவி இருந்தது. அரசர்களுக்கும், அரண்மனை மாதர்களுக்கும், சுவர்க்க லோகத்திலுறைபவருக்கும் பரமசுகத்தையும் மகிழ்வையும்

அளிக்கும் அத்தாமரைத்தடாகத்தில் நெடுநாளாய் அநேக சக்கரவாகப்பறவைகள் வசித்துவந்தன.

அவைகளுக்குள் ஒரு சக்கரவாகத்தம்பதியானது அச் சோழ நாட்டில் அங்கங்குள்ள உத்தியான வனங்களில் உணவுத்தேடச் செல்லுகையில் பிராமணர் முதலிய நான்கு வர்ணத்தாரும் கூட்டம் கூட்டமாய்க்கூடி தியாகேசனது அற்புத லீலைகளைப் புகழ்ந்து வருவதைக்கேட்டு அது முதல் அப்பக்ஷிகளும் தியாகேசனிடத்தில் பக்தி செய்து அங்கங்கு கமலவாவியிலிருக்கும் தாமரை மலர்களைத் தமது மூக்கினுல் கொய்து கொண்டுபோய் ஒவ்வொரு நாளும் காலையில் பூஜை செய்வதற்கு முன்னமே தியாகேசனது ஸன்னிதானத்துக்கு எதிரில் வைத்துக்கொண்டு வந்தன. தினந் தோறும் இவ்விதம் அழகிய வெண்டாமரை மலர்களும், செந்தாமரை மலர்களும் பலிபீடத்தின் அருகில் இருக்கக் கண்டு பூசகர்கள் அவைகளை யெடுத்துத் தியாகராஜனது பாதங்களில் வைத்து வந்தார்கள்.

இவ்வண்ணம் அச்சக்கரவாகப் பறவைகள் அநேக வருஷ காலம் வரையில் தியாகராசனுக்குப் பணிவிடை செய்துவருகையில் அப்பறவைகளுக்குச் சந்தானமுண்டாக வில்லை. அதனுல் மனவருத்தத்தை யடைந்த பெண்சக்ர வாகமானது பக்தரின் விருப்பங்களை யெல்லாம் பூர்த்தி செய்துவரும் தியாகராசனைத் துதி செய்தாவது நாம் சந்தானத்தை யடைவோமென்று தனது கணவனுகிய ஆண் பறவையுடன் ஆலோசனை செய்தது. அவ்வண்ணமே அவ்விரு பறவைகளும் தியாகராஜனது திருக்கோயிலை யடைந்து பிரதக்ஷிணம் செய்தும் தியாகராஜன் உலாவச் கூடிய மண்டபங்களை மலர்களாலும், தளிர்களாலும் அலங்கரித்தும் தமது சக்திக்குத் தகுந்தவாறு பணிவிடை செய்து வருகையில், சகல சராசரப் பொருள்களுக்கும், சகல ஜீவராசிகளுக்கும் நாயகனுகிய தியாகேசர் அப்பறவை

களின் பக்தியைக்கண்டு மகிழ்ந்து சில நாட்களுக்குள் சந்தானம் உண்டாகும்படி செய்தார்.

அதனால் மிகவும் மனக்களிப்பை யடைந்த அப் பறவைகள் ஈசனருளால் தமக்கு உண்டாகிய அவ்விளங் குஞ்சுகளைத் தமது உயிர் போலவே விசேஷ அன்புடன் வளர்த்து வருகையில் ஒரு நாள் அந்தப் பறவைகளிரண்டும் அவ்விளங்குஞ்சுகளைத் தமக்கு இருப்பிடமாயும் ஆயிரம் இதழ்களையுடைய ஒரு தாமரை மலரில் தனிமையாய் விட்டு விட்டு இரை தேடும் பொருட்டு வெளியில் சென்றன. அத்தருணத்தில் திடீரென்று ஆகாயத்தில் நீர்கொண்ட மேகங்கள் கிளம்பி மழைத்தாரைகளைப் பொழிந்தன. அதனால் அக்கமலப் பொய்கையில் அதிக வெள்ளப்பெருக்கு உண்டாகவே குஞ்சுகளுடன் கூடிய தாமரைமலர் ஜலத்தில் மூழ்கிவிட்டது. குஞ்சுகளும் நாசத்தை யடைந்தன.

காற்றும் மழையும் நின்றவுடன் அந்தப் பறவைகள் இரண்டும் மிகவும் மனக்கவலையுடன் திரும்பிவந்து பார்க்கும்பொழுது அக்கமலவாவியில் வெள்ளம் பெருகியிருப்பதையும் தமது குஞ்சுகளுடன் கூடிய தாமரை மலரும் தண்ணீரில் மூழ்கி இருப்பதையும் கண்டு நடுங்கி மனக் கொதிப்பை யடைந்து அலறிக்கொண்டும், இறகுகளை உதறிக்கொண்டும் மாலை நேரத்தில் தியாகராஜாவின் திருக் கோயிலை யடைந்து பலவாறு பணிந்து பரம்பொருளே! உமது கருணையினால் எங்களுக்கு உண்டான குஞ்சுகள் அப் பொய்கையில் காணப்படவில்லையே. அக்குஞ்சுகளைநாங்கள் இதுவரையில் கண்டு மகிழ்ந்தது போதும். உமது கருணை யினால் குஞ்சுகள் மறுபடியும் உயிருடன் இருக்குமாயின் அவைகளை நாங்கள் உமது திருக்கோயிற் பறவைகளாகவே அளிப்போமென்று வாக்களித்தன.

அப்பறவைகளின் மனக்கருத்தை யறிந்த தியாகராஜர் தமது திவ்விய சக்தியினால் அக்குஞ்சுகளுக்கு மறுபடியும்

உயிரைக் கொடுத்தார். பிறகு அக்கமலவாவிக்குப்போய் அக்குஞ்சுகளை அடைவீர்களென்று அப்பறவைகளுக்குக் கட்டளையிட்டார். அவ்வண்ணமே அந்தப் பறவைகளும் அங்குச் சென்று நோக்குகையில் உயிருடன் கூடி விளையாடிக் கொண்டிருக்கும் தமது குஞ்சுகளைக்கண்டு மகிழ்ந்து அவைகளைத் தேற்றி உணவு அளித்து மறுநாட் காலையில் அவைகளுக்கு உபதேசம் செய்து நீங்கள் தியாக ராஜனுடைய உடைமை என்று கூறி அக்குஞ்சுகளை தியாக ராஜனது திருக்கோயிலின் முன்பு கொண்டுவிட்டுச் சென்றன. அப்பறவைகளின் குஞ்சுகள் இளங்குஞ்சுகள் அவ்வண்ணம் ஆலய வாசலில் கதியற்றிருப்பதைக் கண்டு பக்தர்கள் அவைகளை மறுபடியும் வாவியில் சேர்த்த போதிலும் அக்குஞ்சுகள் முன்போலவே அவ்வாலய வாசலை யடைந்தன.



## 186. மடை கட்டிய லீலை.

பஞ்சநத க்ஷேத்திரத்தில் விசாகன் என்னும் வேளாளன் இருந்தான். அவனது மூதாதைகள் சம்பாதித்த அநேக வாழைத் தோட்டங்களும், தெங்கம் சோலைகளும், கருப்பஞ் சோலைகளும், வெற்றிலைத் தோட்டங்களும், மற்றுமுள்ள பல மரங்களும் அவனது உடைமையாக இருந்தபடியாலும் அவன் காலமுறை தவறாமல் அவ்வித சோலைகளுக்குரிய பயிர்களைச் செய்து வந்த படியாலும் அவைகளின் மூலமாய் சிறந்த செல்வமுடையவனாக ஆனான் அவ்வித செல்வத்தினால் கர்வமடையாத அந்த வேளாளன் ஈச்வர பக்தியுடன் வாழ்ந்து வருங்காளில் அந்தச் சோழ தேசத்தில் மூன்று வருஷ காலமாக மேகங்கள் மழை பொழியவில்லை.

ஆண்டாகிய துன்பமானது சகல ஜீவராசிகளுக்கும் வருத்

தத்தைக் கொடுத்தது. செடிகளும், கொடிகளும் பழ மரங்களும் உலர்ந்து வாடின. குடிப்பதற்குக் கூட தண்ணீர் கிடைக்கவில்லை. இவ்வண்ணம் நேரிட்ட துன் பத்தைப்போக்க சிலர் வருணனைக் குறித்து ஜபம் செய் தார்கள். சிலர் இந்திரனைக் குறித்துத் துதி செய்தார்கள். சிலர் பரமேசனைத் துதித்தார்கள். அத்தருணத்தில் திருவை யாற்றில் இருக்கும் அக் குடியானவன் உலகத்தாரால் எப்பொழுதும் எவ்விடத்திலும் புகழப்படுகிற தியாகேசனை பணிந்து தமது தோட்டங்கள் வாடுவதை நீக்கலாகாதா வென்று பரிவுடன் வேண்டுகையில், கருணைக் கடலாகிய தியாகராசன் அச் சோழ நாட்டிலுண்டாகிய க்ஷாம காலத்தைப்போக்க நினைந்து காவிரியாற்றில் ஜலம் பெருகச் செய்தார். அதைக் கண்டவரனைவரும் வியப்படைந்தனர்.

மேகமும் மழையுமில்லாமலிருக்கும் பொழுது திடீ ரென்று அவ்வித வெள்ளம் புரளும் பொழுது அந்நாட்டி லுள்ளவரனைவரும் தங்களுடையவயல்களுக்கும் தோட்டக் கால்களுக்கும் குளங்களுக்கும் தண்ணீரைப் பாய்ச்சிக் கொள்ள முயன்று வருகையில் அக்குடியானவனும் அவ் வண்ணமே வாழைத் தோட்டங்களுக்கும், கரும்புத் தோட்டங்களுக்கும் தண்ணீர் பாய்ச்சும்படி தனது வேலைக்காரர்களுக்குக் கட்டளையிட்ட பிறகு வெள்ளம் திடீரென்று நின்றுவிடுமோ என்று பயத்தை யடைந்த வனாய்க்கொண்டு யாராவது வேலைக்காரர் இப்பொழுது இங்குவந்து இத்தண்ணீரை எனது சோலைகளுக்குப்பாய்ச்சு வாருளராகில் அவர்கள் வேண்டும் பொருளை யளிப்பேன் என்று வேலைக்காரர்களைத் தேடினான். அத்தருணத்தில் அந்நாட்டிலுள்ளவரனைவரும் தத்தம் நிலங்களுக்கு நீரைப் பாய்ச்ச முயலுகையில் வேலைக்காரர் ஒருவரும் கிடைக்க வில்லை. அதைக்கண்டு ஆயாஸத்தை யடைந்த அவன் பரமேச! வேலைக்காரர் ஒருவரும் கிடைக்கவில்லையே, எத் தருணத்தில் இவ்வெள்ளம் குன்றிவிடுமோ? என்று சிந்திக்

கையில் ஸோகரக்ஷகனாகிய தியாகராஜன் அப்பொழுது கையில் மண்வெட்டியுடன் ஒரு வேலைக்காரனாய்த் தோன்றி அவனெதிரில் நின்று அவனது உத்திரவையும் பெற்றுக் கொண்டு கரும்பஞ்சோலை வாழைத் தோட்டம் முதலிய வைகளுக்கு வாய்க்கால்களின் வழியாய் ஜலம் பாய்ச்சுவதற்காகப் பற்பல விடங்களில் மடைகளைத் தமது திருக் கையால் வெட்டி விட்டவுடனே நிமிஷ நேரத்துக்குள் அளவற்ற தண்ணீர் பாய்ந்தது.

அதைக்கண்டு சந்தோஷித்த அக் குடியானவன் ஓ வேலைக்காரனே! உனது வேலையின் தன்மையைக்கண்டு மகிழ்ந்தேன். உனக்கு எவ்வித கூலிப்பொருள் வேண்டு மென்று வினவுகையில் பரம்பொருளாகிய கூலிக்காரன் என்னுடன் வருவீராகில் எனது குடும்பத்தாருடன் யோசித்துக் கூலிப்பொருளின் அம்சத்தைச் சொல்லக் கூடுமென்றான். அக்குடியானவன் அதற்கு இசைந்து அவ் வேலைக்காரனுடன் கிழக்குத் திசையாய்ச் சற்று நேரம் செல்லுகையில் அவ்வேலைக்காரன் திடீரென்று மறைந்து விட்டான்.

அவ்வேலைக்காரன் திடீரென்று மறைந்ததைக்கண்டு ஆச்சரியமடைந்த அக் குடியானவன் தனது இருப்பிடத் துக்கு வந்து இவ்வாறு தோற்றியவர் தியாகராஜராகவே யிருக்கவேண்டுமென்று நினைத்து சோலைகளில் உண்டாகும் பலத்தில் நாலில் ஒரு பங்கைத் தியாகராஜனது சன்னி தானத்துக்கே அளிப்பது கடமை யென்று தீர்மானம் செய்துகொண்டு வாசம் செய்துவந்தான்.



## 137. விஷத்தை நீக்கிவைத்த லீலை

சித்திரமேதன் என்னும் பிராமணன் ஒருவன் தனது தோட்டத்தில் இருக்கின்ற கனிகளுள் மிகவும் ருசியுள்ள

தாகிய ஒரு பலாப்பழத்தைத் தனது தலையில் சுமந்து கொண்டு வந்து தியாகராஜனது நைவேத்யத்தில் சேர்க்க வேண்டினன். கோயிலதிகாரிகளும் அவ்வண்ணமே அதற்கிசைந்து அக்கனியை பூஜகர் மூலமாய் அந்தி நேரத்தில் பரமேசனுக்கு நிவேதனம் செய்து வைக்கையில் அவ்வந்தணனால் பக்தியுடன் அளிக்கப்பெற்ற அக்கனியைத் திருக்கண்கொண்ட பிறகு தியாகேசன் ஆகாய வாணியினல் சொன்னதாவது.

'பக்தர்களே! இவ்வேதியன் ஒப்பற்ற அன்புடன் அளித்த இப் பலாப்பழத்தினல் நான் மிகவும் திருப்தியை யடைந்தேன். இக்கனியின் மேல் பாகத்தில் சென்ற பௌர்ணமி தினத்தில் ஒரு ஸர்ப்பமானது விஷத்தைக் கக்கியது. அதனல் இக்கனி முழுவதும் விஷ சம்பந்தத்தை யடைந்திருப்பதை யறியாத இவ்வந்தணரும் பூஜகர்களும் எனக்கு நிவேதனம் செய்தபடியால் நான் எனது விஷாபஹரண சக்தியினல் இப் பலாப்பழத்தின் விஷ சம்பந்தத்தை நீக்கிவிட்டேன். இப்பொழுது இது தேவாமிர்தத்துக்கு ஒப்பாயுள்ளது" என்றுரைத்ததைக்கேட்டு மெய்ம்மறந்த பக்தர்களனைவரும் இவ்வதிசயத்தைச் சோழனுக்கறிவித்தார்கள்.

அதுமுதல் மன்னவனுடைய கட்டளையினல் தியாகராஜாவின் நைவேத்யப் பொருள்களை யெல்லாம் பரீக்ஷை செய்த பிறகே பாகசாலைக்கு அளித்து வரத்தொடங்கினர்கள். இவ்விதமாய் தியாகராசன் பலவகையிலும் ஜீவராசிகளைக் காப்பாற்றிக்கொண்டு வருகையில், அச்சோழநாட்டிலும் மற்ற நாடுகளிலும் வர்ணசிரம தர்மானுஷ்டானங்களும் ஈச்வர பக்தியும் தழைத்து ஓங்கிவருகையில் விண்ணவர் தொழவும் மண்ணவர் களிக்கவும் ஸங்கல்பம் செய்து கொண்டு தியாகேசர் புண்ணியபுரத்தில் விளங்கும் தேவ வேதிகையின் மீது வீற்றிருந்து விளங்கினர்.



## 138. பிசாசை ஸௌந்தரியாய்ச் செய்த லீலை.

தியாகராஜனருளால் பூவுலகும் தழைத்தோங்கி விளங்குகையில் பூர்வ ஜன்மத்தில் அஞ்ஞானத்தினல் வேதியன் சிசுவைக் கொலை செய்த பாபத்தினல் சாரளப் பேயாக உருவம் மாறிய க்ஷத்திரியப் பெண்ணுக்குத் தியாகேசன் செய்தருளிய சிறப்பைச் சொல்லுகிறேன்.

ஜீவராசி ஜன்மங்களில் மிகவும் நீசமாகிய அந்தப் பேயானது தேசங்கள் தோறும் அலைந்து சுழன்று கொடிய பசியினல் வருந்தி மேன்மேலும் பற்பல பாபங்களைச் செய்து உதிரத்தையுண்டு மாமிசத்தை புசித்து, எலும்பைக் கடித்துக்கொண்டு பயத்தை யளித்துப் பலவிதமாய் இன்னல்களை யடைந்து சரீர மெலிவை யடைந்து திரும்பு கையில், ஒரு நாள் அப்பேயானது ஒரு தடாகக் கரையில் விளங்கும் ஆலமரத்தின் கிளையில் உட்கார்ந்து கொண்டது. அத்தடாகத்தில் ஸ்நானம் செய்வதற்காக அப்பொழுது ஒரு யோகி அங்கு வந்தார். அந்த யோகியானவர் முறைப் படி ஸ்நானம் செய்து பிறகு ஆசமனம் செய்வதையும் சுத்த வஸ்திரத்தை யணிந்து கொண்டு ஸந்தியா தேவதையை யுபாசித்துக் காயத்திரியை ஜபம் செய்து அதற்கு அங்க மாயிருக்கும் பிராணயாமம் செய்வதையும் பார்த்துக் கொண்டிருந்த அந்தப்பேயானது இந்தச் சிவயோகியின் அருளாலேயே தான் மேன்மையடைய வேண்டுமென்று

உருத்திராக்ஷ ஜபமாலைகளைக் கண்டும்; அந்தச் சிவ யோகியின் திருமேனிச் சிறப்பைக் கண்டும் வியப்படைந்த அந்தப் பேயானது அவர் கர்மானுஷ்டானங்களை முடித்துக் கொண்டுசெல்லும் சமயத்தில் அவரது எதிரில் நின்று வலஞ்செய்து ஓ மகானுபாவ! பேய்த் தன்மையை யடைந்த நான் வெகுநாளாய் அலைகிறேன், எனக்கு நற்கதியை அளிப்பீரா! என்று பணிந்து நின்றது. அச்சிவயோகி

பேயின் உருவத்தைக் கண்டு முதலில் கொஞ்சம் பயத்தை யடைந்து பிறகு அதன் நல்ல வார்த்தையினால் தைரியத்தை அடைந்து அதன் கருத்தை யறிந்து தென் திசையில் விளங் காநிற்கும் தியாகேசனை நீ சரணமடைந்தால், உனக்கு நன்மை நேரிடலாமென்று சொன்னார். இவ்வாறு அந்தச் சிவயோகியினால் வழியை அறிவிக்கப்பட்ட அப் பேயானது திருவாரூரை யடைந்து கமலாலயக் கரையில் ஐந்து வருஷ காலம் வாசம் செய்த பிறகு தியாகராஜாவின் தேவாலய கோபுரத்தையடைந்து ஐந்துவருஷ காலம் வாசம்செய்தது.

இவ்விதமாய் அப் பேயானது நெடுநாள் வசிக்கும்பொழுது நான்கு திக்குகளிலிருந்தும் தொண்டர்கள் வந்து கூடுவதையும், அவர்கள் பக்தியுடன் சென்று தியாகேசனைப் பணிந்து திரும்புவதையும் தியாகேசனது திருவிழாச் சிறப்புக்களையும் பார்த்துக் கொண்டிருந்து ஒரு நாள் நடு இரவில் தியாகராஜாவின் பலிபீடத்துக் கெதிரில் நின்றுகொண்டு ஓ பரமேச ! உமது திருமேனியைக் கண்டு களிப்பதற்கு எனக்கு மானிட சரீரத்தை யளிக்க லாகாதா ? நான் எவ்வளவு நாட்கள் இந்த நீச சரீரத்தையே யடைந்திருப்பேன் ? உமது கருணை என்மீது விழத்தடை யுண்டோ ? என்று பலவிதமாய்த் துதித்து நிற்கையில் அப்பொழுது தியாகராஜர் கடைக்கண் பார்த்தருள அப் பேயானது ஒரு பெண் வடிவத்தை யடைந்து கூப்பிய கை யுடன் நின்று போற்றுகையில் தியாகேசர் ஆகாயவாணி யினால் அச்சுந்தரியின் பூர்வ ஜன்மத்தையும் பாபம் நேரிட்ட தையும், அதனால் பேய்த் தன்மையை யடைந்ததையும் எடுத்துக்கூறி, அச் சோழவரசன் குமாரனாகிய இளவரசனை மணக்கும்படி சொன்ன விஷயத்தையும் அறிந்துகொண்ட தேவாலய அதிகாரிகள் அன்று இரவிலே ஓடிவந்து கோபுரக் கதவைத் திறந்து பார்ப்பதற்குள் ஆகாய வாணியினால் ஏவப்பட்ட மன்னவனும் பல்லக்குடன் அங்கு வந்தான்.

கதவைத் திறந்துகொண்டு தேவாலயத்தை யடைந்த அரசன் முதலான தொண்டர்கள் தேடி வருகையில் பலி பீடத்துக்கெதிரில் தேவமாதுபோல் விளங்கும் அந்த ராஜ குமாரியைக் கண்டார்கள். எதிரில் நிற்கும் மன்னனை அப்பெண்ணும் பணிந்து ஆசிபெற்ற பிறகு அம் மன்னனது கட்டளையினால் பல்லக்கில் ஏறி அரண்மனையை யடைந்து அன்றிரவைக் கழித்த பிறகு தியாகராஜருடைய கட்டளை யினால் மன்னவன் குமாரனுக்கும் அப் பெண்ணுக்கும் வெகு சிறப்பாக திருமணம் நடந்தேறியது.



## 139. நாதனற்ற பாலனைக்காத்த லீலை.

ஹரகுடன் என்னும் வேதியன் ஒருவன் தனது தர்ம பத்தினியுடன் இல்லற தர்மத்தை நடத்தி வருகையில், அவ் வேதியனுக்கு நெடுநாள் வரையில் மகப்பேறு இல்லாமை யினால் மனவருத்தத்தை யடைந்து தியாகேசனைப் பணிந்து ஸஹஸ்ர நாமங்களையும் பஞ்சாக்ஷரமந்திரத்தையும் நியமத் துடன் ஜபம் செய்து வந்தான். அவ் வேதியனும் அவனது பத்தினியும் இம்மைக்குரிய புதல்வனை யளிக்க வேண்டு மென்று தியாகேசனை முக்காலங்களிலும் இடைவிடாமல் தொழுது வந்தார்கள்.

ஒருநாள் அவ்வேதியன் தனக்குரிய தசாபுக்திகளின் பலனையும், நவக்கிரஹங்களின் கதிசாரகேந்திராதி பலனை யும் விசாரிக்கையில் தனக்குக் குமாரன் ஒருவன் பிறக்கப் போகிறதாகவும் அக் குமாரன் பிறந்த சில தினங்களுக்குள் தானும் தனது தர்மபத்தினியும் பரகதி அடையப் போகிற தாகவும் இவ்வித பலன் அவரது மனதில் தொன்றிற்று. ஜோதிஷ சாஸ்திரமறிந்த அந்த வேதியன் இவ்விதம் தனக்கு நேரிடப்போகிற தசாபுக்தியின் பலனை யறிந்து கொண்டு அதனால், சந்தோஷத்தையும் துக்கத்தையும்

யடைந்தான். இவ்வித விஷயத்தைத் தனது காதலிக்குஞ் சொல்லி சகல ஜீவராசிகளையும் காக்கும் லோக நாயகனே தமக்கு உண்டாகப்போகிற புதல்வனுக்கும் ரக்ஷகனாக மாட்டானா? வென்று கருதி ஈசுவரத் தியானத்துடன் வாழ் நாட்களைக் கழித்துக்கொண்டு வந்தார்கள்.

சில வருஷங்கள் சென்ற பிறகு அவ்வேதியன் மனைவிக் குக்கருப்ப அடையாளங்கள் உண்டாயின. நாளடைவில் பாலசந்திரனைப் போல அவளது கருப்பம் அழகாய் வளர்ந்து வருகையில் பத்து மாதங்களும் சென்றன. சுபக் கிரகங்களின் வீக்ஷணத்தை யடைந்த நன்னாளில் அவ் வேதியன் மனைவி சிறந்ததொரு புத்திரனை யடைந்து அக் குழந்தையை எடுத்துக் கொண்டு மற்றொரு கிராமத்துக்குச் சென்று கொண்டிருக்கையில் நடுவழியில் ஓர் அடர்ந்த காடு குறுக்கிட்டது. அத் தம்பதிகள் அக் குழந்தையை யெடுத்துக்கொண்டே அக் காட்டில் மெதுவாய் நடந்து சென்று கொண்டிருக்கையில் பசியினால் மெலிவெய்திய வேதியன் அங்குள்ள ஒரு தடாகத்தில் நீருண்டு திரும்பு கையில் கண் சுழன்று மயக்கம் உண்டாயிற்று. அதைக் கண்ட அவனது மனைவியும் அழுது துடித்தாள். அத் தருணத்தில் அவர்கள் இருவரும் தமது சென்னியில் கைகளைக் கூப்பிக்கொண்டு தென் திசையை நோக்கி தியாகேச! இப்பாலனை உமது பாதத்திலளித்தோம். இக் குழந்தைக்கு நீரே காவலன். எங்களுக்குப் பரகதி யளிக்க வேண்டுமென்றுரைத்துக் கொண்டே பூமியில் விழுவதற்கு முன் தேவர்கள் ஆகாய விமானத்தில் அவர்களை யேற்றிக் கொண்டு சென்றார்கள்.

அவ்விருவரும் நற்பதவியை யடைந்த பிறகு அக் காட்டில் நாதனற்றுத் தனிமையாய் அழுதுகொண்டிருக் கும் அப்பாலனுக்குத் தியாகராஜரே நாதனாய் விளங்கி முக் காலத்திலும் தமக்கு நைவேத்தியம் செய்யும் பால், சர்க் கரை

பிரமத கணத்தார்ின் மூலமாய் அளித்துவந்தார். அது முதல் தினந்தோறும் நைவேத்தியத்தில் கொஞ்சம் கொஞ்சம் குறைந்திருப்பதைப் பற்றிச் சந்தேகமடைந்து பூஜகர் உற்றுநோக்கி வருகையில் தியாகேசரின் பிரமத கணங்கள் அவ்வித அமுதை எடுத்துக் கொண்டு செல்லும் பொழுது கொஞ்சம் கொஞ்சமாய் அவைகள் கீழே விழுந்து கிடப்பதைக்கண்டு அச் சொட்டுகள் செல்லும் வழியாகவே சென்று பார்க்கையில் அங்கு ஒரு வில்வமரத் தடியில் ஒரு குமாரன் அழுது கொண்டிருப்பதை யறிந்து இவ் விஷயத்தை அமைச்சருக் கறிவித்தார்கள்.

அதைக்கேட்ட மந்திரிமாரும் விரைவில் அவ்விடத் துக்குச்செல்லுகையில் அங்கு ஆகாய வாணியினால் அவ் வந்தண தம்பதிகள் நற்கதியடைந்த விஷயத்தையும் அவர் களின் மீதும், குழந்தையின்மீதும் தியாகராஜர் செய்த கருணையின் சிறப்பையும் அறிந்துகொண்டு அக்குழந் தையைப் புண்ணிய புரத்துக்கு அழைத்துக் கொண்டுவந்து வளர்த்து மேன்மையடையச் செய்தனர். இவ்விதம் தியாகராஜன் அருள் எவ்வுயிர்களின் மீதும் வீழ்ந்து நன் மையையளித்து வருவதால் உலகத்தோர் எவ்வித குறைவு மின்றி வாழ்வெய்தி விளங்கி வந்தார்கள்.

கரையுங் கடலு மலையுங் காலையு மாலையு மெல்லாம்
உரையில் விரவி வருவா னொருவ னுருத்திர லோகன்
வரையின் மடமகள் கேள்வன் வானவர் தானவர்க்கெல்லாம்
அரையற் றிருப்பது மாரூர் அவர் எம்மையு மாள்வரோ
கேளீர் —சுந்தர்.



## 140. கல் யானையை ஓடச்செய்த லீலை.

மார்த்தாண்டன் என்னும் சிற்பியொருவன் கோகர்ண க்ஷேத்திரத்திலிருந்து திருவாரூருக்கு வந்து அப்புரியில்

விளங்கும் பற்பல மண்டபங்களின் சிறப்பையும் சித்திர வேலைகளின் ஒழுங்கையும் கண்டு வியப்படைந்தும் தியாக ராஜனது வடிவழகைக் கண்டு ஆனந்த மடைந்தும் அவ் விடத்திலேயே சில காலம் வாசம் செய்துவந்தான். அந்தச் சிற்பாசாரியானவன் கல் வேலைகளிலும், சித்திர வேலை களிலும் மிகவும் சிறந்தவனென்று கேள்வியுற்ற சோழ மகாராசன் அவனது கல்வித்திறமைக்குத் தக்க வெகு மதியளித்த பிறகு அவனைக்கொண்டு தியாகேசனுக்கு ஏதாவது ஓர் அற்புத வேலையை செய்து முடித்துக்கொள்ள வேண்டுமென்று விருப்பமடையும் பொழுது, அம்மன்ன னது கருத்துக்கிசைந்த அந்தச் சிற்பி ஸ்படிகக் கல்லினால் ஒரு யானையைச் செய்து அதில் தியாகேசனை வீற்றிருக்கச் செய்தல் சிறந்ததென்று உரைத்தான்.

சோழவரசனும் அவ்வித யோசனைக்கு இணங்கி அவ் வண்ணமே செய்யலாமென்று உத்திரவளித்தான். அந்தச் சிற்பியும் கமலாலயத்தில் ஸ்நானம் செய்து வெள்ளை வஸ்திரத்தை யணிந்து யக்ஞோபவீதத்தைத் தரித்து அன்றிரவில் க்ஷீரத்தை மாத்திரம் உட்கொண்டு மறுநாள் உதயத்தில் சூரியன் உதிப்பதற்குச் சமகாலமாக முகூர்த் தத்தை நிர்ணயம் செய்து மகாராசனால் அளிக்கப்பட்ட உத்தம ஸ்படிகக் கற்களினால் யானையைச் செய்ய ஆரம் பித்தான். அன்று முதல் ஒருவருஷ காலம் முடியும் வரையில் அந்தச் சிற்பாசாரியன் சிற்ப சாஸ்திர முறைப் படி பத்திரசாதி யானையின் உருவத்துடன் கூடியதாயும் அழகிய முகமண்டலத்தை யுடையதாயும் தேவேந்திர னுடைய வாகனமாகிய ஐராவதத்தின் சகல இலக்கணங் களையுடையதாயும் யானையைச் செய்து முடித்தான்.

விச்வ கர்மாவின் நிர்மாணத்தைப் பழிக்கக்கூடியதாய் அவ்வளவு சிறந்த லக்ஷணங்களையுடையதாய் அச்சிற்பி செய்து முடித்த ஸ்படிகக்கல் யானையின் மீது பரம்

பொருளை ஏற்றிவைக்கக் கருதிய பூபாலனுடைய விருப்பம் போல் பிரபுவின் திருமேனி குளிர்ச்சி யடையும்படி அபிஷேகம் செய்துவைத்துப் பட்டு வஸ்திரங்களையும் ஆபரணங்களையும் அரியச்செய்து மங்கள வாத்தியங்கள் முழங்கவும் வேதியர் மறையோதவும், தாசிகள் ஆடல் புரியவும், பாடகர் பாடவும் வெகு சிறப்புடன் யாவரும் வியப்படையும் வண்ணம் தியாகராசனை அந்த யானையின் மீது வீற்றிருக்கச் செய்து தொண்டரகளனைவரும் கண்ணுரக்கண்டு களித்தனர்.

அத்தருணத்தில் மலர்மாரி சொரிந்தனர். அரம்பையர் கூத்தாடினர். முனிவர்கள் ஜய ஜயவென்று கூறி ஆனந்தக் கண்ணீர் சொரிந்து மகிழ்வெய்தினர். அத்தருணத்தில் அந்தச் சிற்பியானவன் கற்பூரத் தட்டுக்கொட்டி செஞ் சோறும் கருஞ்சோறுமிட்டு வலஞ்செய்து பணிந்து அந்த யானையின் அளவுக்கும் தியாகராசனது வடிவுக்கும் இசைந்து விளங்கும் அமைப்பு முறையைக்கண்டு தனக்குள் தானே மகிழ்ந்து உற்று நோக்கி இந்த யானைக்கு உயிர் ஒன்றுதான் குறைவு என்று எண்ணுகையில் ஆகாயத்தில் ஒரு அசரீரி உண்டாயிற்று. "கேளிர் பக்தர்களே! இவ் வரசனுடைய ஏவலால் இந்த சிற்பியானவன் ஒப்பற்ற பக்தியுடன் செய்த இந்தக் கல் யானைக்கு எவ்வித லக்ஷணக் குறைவுமில்லை. தியாகேசர் இப்பொழுது பிராணனையு மளித்துவிட்டார். இந்தக் கல் யானையே வெகு அழகாய் இப்பொழுது நடந்து செல்லப்போகிற காக்ஷியைப் பார்ப் பீர்கள்" என்று சொல்லும்பொழுதே அந்த யானையானது ஒவ்வொரு ராஜவீதியிலும் வெகு அழகாய் நடந்துசெல்ல

ார்கள்.

அந்த கள்தோறும் பக்தருக்குத்

சன நகரத்தை

வலமாய் வந்து தனதிருப்பிடம் அடைந்து ஜீவனற்று நிலை பெற்று நின்றது. இவ்விதமாய் ஒரு முகூர்த்த காலம்வரையில் அந்த யானை வெகு அழகாய் நடந்துசென்ற காட்சியைக் கண்டு பக்தர்கள் புகழ்ந்து துதிசெய்த பிறகு ஈசான சிவயோகி முதலிய பக்தர்களும் அந்தச் சிற்பியும் மகாராஜனும் அவ்வாகனத்திலிருந்து தியாகேசனை இறக்கி சிரம பரிகாரத்தைக் செய்துவைத்துப் பின்பு தேவ வேதிகையில் வீற்றிருக்கச் செய்தார்கள். அந்தச் சிற்பியும் சோழவரசனிடமிருந்து ரத்தினங்கள் முதலிய பரிசுகளையும் தியாகேசரிடமிருந்து அருளையும் பெற்றுக்கொண்டு கோகர்ணத்துக்குத் திரும்பினான்.



## 141. பாத நகையைக் கொண்டவனுக்குப் பூமியை யளித்த லீலை.

திருவாரூரில் சாந்திகன் என்னும் பிராமணன் ஒருவன் இருந்தான். அவனது தாயும் தந்தையும் அவனது சிறு வயதிலேயே நற்கதியை யடைந்தபடியால் அவனது செல்வமெல்லாம் அவனைவிட்டு அகன்றது. காப்பாற்றுவார் ஒருவரையும் அடையாமலிருக்கும் அந்தச் சாந்திகன் கல்வியின் மீது விருப்பம் வைக்கவில்லை. நல்லோருடன் சேரவில்லை: நற்குணங்களில் ஒன்றையும் அடையவில்லை.

இவ்விதமாய் நல்லொழுக்கத்தைக் கற்காத அந்தச் சாந்திகனைத் துர்குணங்களும் பாவத் தொழில்களும் வெகு விரைவாய் வந்து அணுகின. அவன் அவ்வாறு துர்க்குணங்களை யடைந்திருந்த போதிலும், நற்குலத்திலுதித்ததாலும் நல்ல க்ஷேத்திரத்தில் வாசம் செய்து வருவதாலும் அவனது புத்தியில் சிற்சில சமயங்களில் தியாகராஜாவின் பக்தி தத்துவங்களும் நற் குணங்களின் சிறப்பும் விளங்கும் அவனது புத்தியை நிமிஷ நேரத்துக்குள் மோகமே சூழ்ந்து

மயக்கிவிடும். அதனால் அவன் சில சமயத்தில் நல்லவனென்றும், சில சமயத்தில் துஷ்டன் என்றும் அபகீர்த்தியை யடைந்து வந்தான். அவன் சில சமயத்தில் நற்புத்தியோடுகூடியிருக்கும் பொழுது தனது துர்குணங்களைப் பற்றி நகரத்தார் இகழ்வதையும் அவன் அறிவான். தியாகராஜபக்தியை யடைந்து பெரியோர்களின் அருகில் வசிக்கவேண்டுமென்று அவன் எவ்வித முயற்சி செய்த போதிலும் அவனது புத்தியானது க்ஷணகாலத்துக்குள் மாறிவிடும்.

இவ்விதமாய் அவ்வேதியன் புத்தி தடுமாற்றத்தை யடைந்து துன்பப்படுவதைக் கண்ட மற்றொரு வேதியன் ஒரு நாள் அவன்மீது கருணைசெய்து அவனது புத்தி மோகத்தினால் மயங்குவதற்கு முன்னமே அவனைக் கூப்பிட்டழைத்து நெடுநேரம் வரையில் அவனுடன் சல்லாபம் செய்து அவனை நல்வழியில் சேர்க்கக் கருதி ஒருவாறு யோசனை செய்து, சாந்திகனே! பூர்வ ஜன்மத்தில் நீ செய்த பாவத்தினால் உன்னுடைய புத்தியானது இவ்விதம் அடிக்கடி தடுமாற்றத்தை யடைகிறது. இனி உன் புத்தி நல்வழியில் நின்று நன்மையையடையாது என்று பெரும்பாலும் தோன்றுகிறது. ஆகையால் இப்படிப்பட்ட நீ உனது புத்தியை துர்மார்க்கத்தில் செலுத்தியே அதனடியாய் நன்மையை யடையவேண்டும். அதற்கு உபாயம் என்னவென்றால் தியாகராஜனது திருப்பாதங்களில் விளங்கும் சிலம்பைச் சோரம் செய்வதற்கு முயற்சி செய்வாயாகில் உனது புத்தியானது சீக்கிரத்தில் மாறுதலை யடையும். அவ்விதமாய் நீ பிரபுவின் பாதநகையை எடுத்துக் கொள்ளும் தருணத்தில் பிறர்கண்டு உன்னைக் கண்டுபிடித்தாலும், நீ தியாகராஜனது சரணங்களை விடாது கைப்பற்றுவாய், அதனால், அவர் உன்மீது கருணை செய்வார், அதனடியாய் நீ மேன்மையை யடையலாம்; இதைத்தவிர உனதுமேன்மைக்கு வேறுகதி கிடையாதென்று சொன்னார்.

அவ்வேதியனும் அவ்வுபதேசத்தை நன்ருய் அறிந்து கொண்டு அதுபோல் செய்வதற்குத் தன் புத்தித் தெளிவை யடையும் சமயத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். ஒரு நாள் மாலை நேரத்தில் அவனது புத்தியானது நல்ல தெளிவையடைந்தது. அப்பொழுது அவ்வேதியன் தேவாலயத்தில் நுழைந்து தியாகராஜாவின் சன்னிதானத்தை யணுகும் பொழுது பிரபுவுக்குத் திபமெடுத்து நைவேத்திய முறையும் முடிந்தபடியால் தொண்டர்கள் தரிசனத்திற்குப் புகும்பொழுது அவர்களில் ஒருவன்போல் அந்தச் சாந்திகனும் உட்சென்று அவ்வேதியனுரைத்தது போலவே தியாகராஜப் பரம்பொருளின் பாதத்தில் விளங்கும் நூபுரத்தையும் கவர்ந்து பாதமலரையும் கையினுல் கெட்டியாய்ப் பற்றிக்கொண்டான். பூசகர் முதலியவர்கள் இஃதென்ன காரியமென்று அவனைத்தடுத்து இழுத்தும் அவனை விலக்க முடியாமல் நின்றனர். பிரபுவின் பாதத்தை ஒப்பற்ற பக்தியாகிய கையினுல் அவன் பிடித்தமையால் அந்தச் சாந்திகனை வெளியில் தள்ள முடியாத பக்தர்கள் திகைத்து நிற்கையில் தியாகராஜர் அத்தருணத்தில் அத்தொண்டன் மீது கண் நோக்கினார்.

அப்பொழுது அவனுக்குச் சிறந்த தத்துவ ஞானமுண்டாயிற்று. கண்களைத் திறந்து பார்த்தான். பரம்பொருள் எதிரில் விளங்கக் கண்டான். தனது ஸ்வரூபத்தையும் உற்று நோக்கி ஹா ஹா என்று அலறிக் கொண்டு வெளியில் வந்து பணிந்து சென்னியில் கைகூப்பிக் கொண்டு துதி செய்தான். ஜாதியினுல் பிராமணனுய்ப் பிறந்து பாபத்தினுல் புத்தி தடுமாறுதலையடைந்த அவ்வேதியன் இவ்விதமாய்ப் புண்ணியபுராதனுடைய பாதச்சிலம்பைத் தொட்டபடியால் தத்துவ ஞானத்தைப் பெற்றுத் துதி செய்து நிற்கையில் தியாகேசர் பூமி முதலிய செல்வங்கள் உண்டாகக் கடவதென்று நினைத்து, அதை அவனுக்கு அறிவித்தார். அச்சாந்திகன் ஈசனருளால் தத்துவஞானத்

தையும், பூர்ணேயும் மறுபடியுமடைந்து பக்தியுடன் சுரந்து [illegible] வசனை. ஷயத்தைக் கேட்ட பெரியார்கள் ஆனந்தக் கண்ணீர் சொரிந்து பரமேசனைத் துதி செய்தார்கள்.

## 142. மூன்றுபிடி அன்னமிட்டவனுக்கு மூர்த்திகாட்டிய லீலை.

காஞ்சி நகரத்தில் சிவபாதசேகரர் என்னும் தீக்ஷிதர் ஒருவர் இருந்தார். அவர் பௌண்டரீகம், வாஜபேயம் முதலான யாகங்களைச் செய்து அவபிருத ஸ்நானம் செய்தவர். சகல வேதங்களையும் வேதாங்கங்களையும், புராண ரகசியங்களையும் கற்றுணர்ந்தவர். மற்ற சாஸ்திரங்களையும் கற்றுணர்ந்த அந்தத் தீக்ஷிதர் கிருஹஸ்தாச்சிரம தர்மானுஷ்டானங்களை முறைப்படி நடத்திக் கொண்டு வருகையில் ஒரு நாள் அவர் ஈசுவர பூஜையிலமர்ந்து ஸங்கல்பம் செய்துகொண்டு பிராணாயாமம் செய்து பரமேசனைத் தன் மனதில் தியானம்செய்ய முயன்றார்.

தினந்தோறும் அவர் அம்மாதிரியாகத் தியானம் செய்யும்பொழுது அவரது இதய கமலத்தில் தோற்றிய கைலாஸநாதன் அத் தினத்தில் அவரது மனதில் தியானத்தில் விளங்கவில்லை. அதனால் அவர் நொந்த மனமுடையவராய் என் செய்வேன் என்று வருத்தத்தையடைந்தார். நித்திரையையும், உணவையும் வெறுத்தார் ஒவ்வொரு புண்ணிய தீர்த்தங்களிலும் ஸ்நானம் செய்து இலிங்க மூர்த்திகளின் தரிசனத்தைச் செய்து ஜபம் செய்தார். ஹோமத்தையும் முறைப்படி முடித்தார். இவ்விதம் செய்தபோதிலும் அவரது மனதில் பரமேசனின் வடிவம் கொஞ்சமும் விளங்கவில்லை. தீக்ஷிதர் செய்துவரும் முயற்சிகளெல்லாம் வீணாகி வருவதைக் கண்ட அவரது

பத்தினியானவள் ஒரு நாள் ஈசனைக் குறித்து ஓ பரமேச! உமது பக்தரான தீக்ஷிதர் மனதில் உமது ஜோதி வடிவு தோன்றாமையால் உணவு உட்கொள்ளாமல் வாடுகிறாரே; அவரைச் சோதிப்பது உமது கருணைக்கு நியாயமாவென்று வேண்டினாள்.

அம்மாதின் புலம்பலைச் செவியிற் கொண்ட தியாகேசர் ஒரு ஸன்யாஸி வேஷத்துடன் அவருடைய இல்லத்திற்கு எதிரில் தோன்றி பவதி பிக்ஷாம் தேஹி என்று கையிலேந்திய கமண்டலுவைக் காட்டி பிக்ஷை யாசித்தார். அந்தச் சன்யாஸி எதிரில் தோன்றி பிக்ஷை யாசிப்பதைக் கேட்ட அம்மாது பக்தியினால் அவரது பாதத்தில் வீழ்ந்து பணிந்து பிக்ஷையை எடுத்து வருகிறேன் என்று சொல்லிவிட்டு வீட்டுக்குள் சென்றாள். சில நாட்கள் துடங்கி அம்மாதின் கணவனாகிய தீக்ஷிதரின் மனதில் பரமேசன் தோன்றாத படியால் அவ் வீட்டில் தீக்ஷிதர் பூஜை செய்யவேயில்லை. பூஜையில்லாமலிருக்கும் பொழுது சமையல் காரியம் ஏது? பாகசாலையில் எப் பொருள்களும் சூன்யமாயிருக்கும் தருணத்தில் பிக்ஷுகர் வந்து பிக்ஷை யாசிக்கிறாரே; இதற்கு என் செய்வேன் என்று மனம் நொந்து வாடி லோகநாத! நான் என்செய்வேன்? என்று ஈசனைத் தியானித்துக் கொண்டே உட்சென்று ஒரு பாண்டத்தில் வைத்திருந்த பழைய அவலைக் கொஞ்சம் எடுத்துத் தயிரில் ஊறவைத்து அதற்குரியவற்றைச் சேர்த்து எடுத்துக் கொண்டுவந்து அந்தச் சன்யாஸியின் பிக்ஷா பாத்திரத்தில் ஒரு பிடி, இரண்டு பிடி மூன்று பிடி என்று முப்பிடியாக அளித்தாள்.

களங்கமற்ற மனதுடன் அவ்வுத்தமி யளித்த பிக்ஷையை யங்கீகரித்த சன்யாஸியாகிய தியாகேசர் அரை நிமிஷத்துக்குள் அவ்வுருவத்தை மாற்றிவிட்டு பிறையணிந்த திருமுடியுடன் கூடிய திவ்விய ஸ்வரூபத்தைக்காண்பித்தார். அப்படிப்பட்ட திவ்விய ஸ்வரூபத்தை அம்மாது தரிசனம் செய்து பரமானந்தமடைந்து தனது பர்த்தாவாகிய

தீக்ஷிதரைக் கூப்பிட்டுத் தாங்கள் ஏன் மனங்கலங்கி வாடுகிறீர்? நமது பூர்வ புண்ணிய மகிமையினால் நமது வாசலில் [illegible] றைதேடியோடும் பரம்பொருள் விளங்கு [illegible] ரஞ்சுடரைத் தரிசிக்க வாருங்கள் என்று உரைக்கையில் அவ்வித உரையைக் கேட்ட தீக்ஷிதரும் விரைவாய் ஓடிவந்து வலஞ்செய்து பராபர வஸ்துக்களின் நாதனை இன்றே நான் கண்ணாரக்கண்டு மகிழ்ந்தேனென்று மகிழ்வெய்தினார். அத் தருணத்தில் ஓர் அசரீரிவாக்கு உண்டாயிற்று.

"கேளீர் தீக்ஷிதோத்தமரே! உமது பத்தினியாகிய இவ் வுத்தமியானவள் முன் ஜன்மத்தில் கேட்டுக்கொண்ட வரப் படியே புண்ணியபுர நாதனாகிய தியாகேசர் இப்பொழுது உங்களிருவருக்கும் தரிசனமளித்து விளங்குகிறார். தனது பர்த்தாவுக்கு எப்பொழுது பரப்பிரம்மத்தின் தோற்றம் உண்டாகாமலிருக்கிறதோ அப்பொழுது தனக்குத் தோன்றவேணும் என்றும் தான் அளிக்கும் அற்ப பிக்ஷை யையும் அங்கிகரிக்க வேண்டுமென்றும் இம்மாது முன் ஜன்மத்தில் கேட்டுக்கொண்ட வரப்படியே இவையெல்லாம் நடந்தது" என்று ஆகாயவாணி சொல்லக்கேட்டு வியப் படைந்து அவ்விருவரும் தியாகேசனைக்கண்டு சகல பாபங் களையும் விலக்கித் தூய்மையை யடைந்தார்கள்.

அப்பரஞ்சுடர் அத்தருணத்தில் திடீரென்று மறைந்த பிறகு தீக்ஷிதர் அந்தத் திவ்விய ஸ்வரூபத்தை நினைத்து நினைத்து ஆனந்தமடைந்தார். அன்று முதல் அவரது இதயகமலத்தில் முன்போலவே பரஞ்சுடர் விளங்கிற்று. அவரும் அவரது மனைவியும் புண்ணியபுரத்தை யடைந்து தியாகேசனது வடிவழகைக் கண்டு தரிசித்து மகிழ் வெய்தினர்.

## 143. சக்கிலியனுக்குக் காலளவு கொடுத்த லீலை.

பெண்ணை நதியின் கரையில் முஞ்ஜலோமன் என்னும் சக்கிலியன் ஒருவன் இருந்தான். அவன் சண்டாள வம்சத்தில் பிறந்தவனாயிருந்த போதிலும் நல்லபுத்தியை யுடையவன். வேதியர்களிடத்திலும் முனிவர்களிடத்திலும் தேவதைகளிடத்திலும் மிகுந்த பக்தியையுடையவன்.

அவன் இவ்வித நற்குணங்களுடன் கூடியவனாய்த் தனது ஜாதிக்குத் தகுந்த வேலையாகிய தோல் பதனிடுதல், பாதரக்ஷை செய்தல் முதலான காரியங்களைச் செய்து கொண்டு எவ்வித பாபத்தொழிலையும் செய்யாமல் தனது வாழ் நாட்களைக் கழித்துக் கொண்டு வந்தான். ஒரு நாள் அவன் தனது குடிசையின் வாசலில் உட்கார்ந்து கொண்டிருக்கையில் நான்கு திசைகளிலிருந்தும் அளவற்ற தொண்டர்கள் தமக்குக் கிடைத்த பொருட்களைக் காணிக்கையாகவும், உபகாரப் பொருளாகவும் தமது சென்னியில் வைத்துக் கொண்டும், தியாகேசனது திவ்விய குணங்களைப் புகழ்ந்து கொண்டும் திருவாரூருக்குச் செல்வதைக் கண்ட அந்த முஞ்ஜலோமன் தியாகராஜ பக்தி நிறைந்த மனமுடையவனாய்க் கொண்டு "ஓ பரஞ்சுடரே! புண்ணியஞ் செய்தோர் மனதில் விளங்கும் தியாகராஜனே! நீசஜாதியில் பிறந்த நான் உமது திருமேனியை எப்பொழுதும் கண்டதில்லை. உமது கழலிணையில் பக்தியும் செய்தவனல்லன். எவ்வித நற்காரியத்துக்கும் யோக்யதையடையாத இச் சண்டாள ஜன்மத்தில் நான் எவ்வாறு நற்கதியையடைவேன்?

மஹரிஷிகளும் புண்ணிய சீலர்களும் நிறைந்து வாழும் உமது திவ்விய நகரில் நாயேனாகிய நான் புகுந்து அசுத்தம் செய்யமாட்டேன். உமது திருமேனியின் ஸ்வரூபத்தையும் உமது கருணையின் மேன்மையையும் இவ்வழியே செல்லும் புண்ணிய சீலர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன். ஓவ்

வேறு பக்தரும் தம்மாலியன்ற பொருளை உமக்கு உபகாரமாக அளித்து நன்மைப் பயனையடைந்து வருகிறார்களே; நீசஜாதியில் பிறந்த நான் உமக்கு எவ்விதப் பொருளையளிக்கக்கூடும்? எனது ஜாதித்தொழிலை மீறாமல் நான் செய்யும் பாதரக்ஷையை நீர் கருணையுடன் பெறுவீராகில் அப்பொழுதுதான் உமது கருணையானது என்னைப் போன்ற பாபிகளிடத்திலும் பரவிப் பாய்கிறதென்பது விளங்கும். உமது கருணையே துணை" என்று இவ்விதமாய் முகூர்த்த நேரம் வரையில் உருகிய மனமுடையவனாய்க் கண்ணீர் விட்டு நின்று பிறகு ஒருவாறு மனதை தேற்றிக் கொண்டு தியாகராஜன் விளங்கும் தென் திசைக்கு நமஸ்காரம் செய்து தியாகேசனுக்குப் பாதரக்ஷை செய்ய நினைத்து நல்ல தோல்களை யெடுத்துத் தைக்க ஆரம்பித்தான்.

அச்சமயத்தில் அவன் "பரஞ்சுடரே! உமது திருமேனியை நான் தரிசனம் செய்தது இல்லையே; ஆகையால், உமது திருவடியின் அளவு தோற்றவில்லையே; தகுந்த அளவு இல்லாமல் செய்யப்பட்ட பாதரக்ஷை உமது திருவடிக்கு எப்படி ஒக்கும்? யான் என் செய்வேன்" என்று வாடுகையில் தயாநிதியாகிய தியாகராஜன் அவன் எண்ணம் நிறைவேற அருள்செய்ய அவனுக்கு திடீரென்று பகற்காலத்தில் தூக்கம் வந்தது. அவன் அவ்வித நித்திரைக்கு ஸ்வாதீனமாய்ச் சற்று நேரம் கண்களை மூடியிருக்கையில் தியாகேசர் அவனது கனவில் தோன்றி "ஓ பக்த! நீ என் மீது வைத்திருக்கும் பக்தியைக் கண்டு களித்தேன். இதோ எனது கால் அளவை எடுத்துக்கொள்" என்று கூறினார்.

தான் விரும்பியவாறே பரமேசன் காலளவு கொடுத்தாரென்று மகிழ்வெய்திய முஞ்ஜலோமன் கண்களைத் திறந்து பார்க்கையில் பரஞ்சுடர் தோன்றவில்லை. அதனால் அவன் சற்று மனம்வாடி நின்ற பிறகு தன் மனதில் ஒரு விதமாய் நிர்ணயம் செய்துகொண்டு மிகவும் மிருதுவாகிய தோலினால் ஈசனுக்குப் பாதரக்ஷையைச் செய்து முடித்து, அதைத்தன்

சென்னியின் மீது வைத்துக் கொண்டு தனது மனைவியையும் அழைத்துக்கொண்டு திருவாரூருக்குச் சென்றான். தனது புத்திக்கு எட்டிய வரையில் ஈசனுடைய குணங்களின் சிறப்பைத் தனது மனைவியிடம் சொல்லிக்கொண்டே காவிரி நதியை யடைந்து அதில் ஸ்நானம் செய்து நல்லாடையையும், விபூதியையும் அணிந்து கொண்டு திருவாரூர் நகரில் கோட்டை வாசலுக்கு வெளியே நின்றுகொண்டு அந்தப் பாதரக்ஷைகளிரண்டையும் அங்குள்ள ஒரு மரத் தடியில் வைத்துவிட்டுப் பணிந்து போற்றி, தியாகேச! உமது பாதங்களையே நம்பினேனென்று சொல்லிக் கொண்டே தனதிருப்பிடம் திரும்பினான்.

இவ்வாறு அந்தச் சக்கிலியன் பக்தியினால் செய்தளித்த அப் பாதரக்ஷைகளிரண்டும் அப்பொழுதே தியாகராசாவின் மண்டபத்தின் அருகில் விளங்கக் கண்டு தொண்டர்களனைவரும் அவ்விதமாய்த் திடீரென்று பாதரக்ஷை தோன்றுவதற்குக் காரணம் யாது என்று வினவுகையில் நடந்த விஷயத்தை அசரீரியினால் அறிவிக்கப்பட்டவர்களாய் மகிழ்வெய்தினர். அத் தம்பதிகளும் இவ்வுலகில் எவ்வித இடருமின்றி நெடுநாள் வாழ்ந்திருந்து முடிவில் தூய்மை யடைந்து பரகதியை யடைந்தார்கள்.



## 144. குரு பத்தினியின் சத்தியத்தை வெளியிட்ட லீலை

ஒரு சமயம் சோழ மண்டலத்தில் கொடியதாகிய சாங்கிராமிக ஜ்வரம் ஒன்று உண்டாயிற்று. அந்த ஜ்வரமானது சில தினங்களுக்குள் கிராமங்களிலும், நகரங்களிலும் பரவி ஸகல மனுஷ்யர்களின் சரீர பலத்தையழித்துக் கொண்டே அம்மண்டல முழுவதும் பரவிவிட்டது. ஔஷதம் முதலியவைகளால் தீர்க்க முடியாததாகிய அக்கொடிய ஜ்வரத்தினால் ஜனங்கள் எல்லோரும் கஷ்டத்தையடைந்து

உருக்கிறார்களென்று அறிந்து கொண்ட அரசன் சாந்தி ஹோமம், ஜபம், தேவதா பூஜை முதலிய காரியங்களை வேதம் வல்லோர்களின் மூலமாய் நிறைவேற்றிய பிறகும் அந்நாட்டில் அக்கொடிய ஜ்வரத்தின் சூழ்ச்சி அடங்க வில்லை.

பாலர்களும், மாதர்களும், மூப்பையடைந்தவர்களும் அந்த ஜ்வரத்தினால் பிடிக்கப்பட்டு உயிரையிழக்கும் நிலை மையில் இருக்கையில், அதைக் கண்டு மனக்கொதிப்பை யடைந்த அரசன் தியாகேசனையே சரணனப்பற்றித் துதி செய்கையில் ஈசனருளால் ஓர் அசரீரி உண்டாயிற்று. அருந்ததிக்கு ஒப்பானவளாய் இம்மண்டலத்தில் விளங்கும் பதிவிரதா மாதின் கைகளால் மந்திரிக்கப்பட்ட ஜலத்தை இந்நாட்டில் தெளித்தால் இந்நோய் தீருமென்றறிந்து கொண்ட அரசன் அவ்வண்ணமே அம்மாது யார்? எங்கே யிருக்கிறாள் என்று தேடுகையில் கண்டபுரத்தில் வசிக்கும் பாலாக்ஷ தீக்ஷிதரின் மனைவியாகிய அம்பிகா தேவியே அப் படிப்பட்ட பதிவிரதையென்று அறிந்து கொண்டு அம் மன்னவன் முதலியோர் அவ்வந்தணரிடம் சென்று பணிந்து தாம் வந்த காரியத்தையறிவித்து வணங்கி நின்றார்கள்.

உலக நன்மையைக்கருதிய அவ்வந்தணரும் தமது தர்ம களத்திரமாகிய அம்பிகா தேவியாரிடம் ஜலம் நிறைந்த ஒரு கலசத்தைக் கொடுத்தார். வேத மந்திரங் களால் மந்திரிக்கப்பட்ட ஜலம் நிறைந்துள்ள அக்கலசத்தை அத்தேவியாரும் பக்தியுடன் தனது கையினல் வாங்கி மறு படியும் திருப்பிக் கொடுக்கப்பெற்ற அக்கலசத்தை அம் மன்னன் ஜ்வரம் பரவிய தேசமெங்கும் தெளிக்கும்படி செய்தான். அம்மாதின் கை பட்ட அந்த ஜலம் வீழ்ந்த இடங்களிலெல்லாம் அக்கொடியவியாதி தணிந்து விட்டது. ஸகல ஜனங்களும் முன்போல் சுகமாய் வாழ்ந்தார்கள் என்று சோழ நாட்டில் நடந்த அற்புதச் செயலை நாரதர் மூலமாய் அறிந்த தேவேந்திரன் அவ்வம்பிகா தேவியாரின்

கற்பையும், ஸத்தியத்தையும் பரீக்ஷிக்க வேணுமென்று நினைத்தான். அத்தருணத்தில் அம்மாதின் கணவனாகிய பாலாக்ஷ தீக்ஷிதர் அக்னி ஹோத்திரங்களை முடித்துவிட்டுத் தமது சிஷ்யக் கூட்டத்துடன் மற்றொரு கிராமத்திற்குச் சென்று அங்கு ஒரு பக்ஷகாலமிருந்து பிறகு திரும்பி வருவதாய் வாக்களித்துவிட்டுப் போனார்.

அத் தருணத்தையே தக்க சமயமென்று கருதிய இந்திரன் அம்மாதின் இல்லத்துக்கு எதிரில் ஓர் அதிதி அந்தணனாகத் தோன்றினான். தனது இல்லத்தை யடைந்து நிற்கும் அவ்வேதியனைக் கண்ட அம்மாதும் தனது தலைவன் சொற்படி சிஷ்யன் மூலமாய் உணவை யருந்துவீரா! என்று கேட்டாள். இந்திரனாகிய அதிதியும் உணவுக்காகவே தான் வந்திருப்பதாய் உரைத்துக் கொண்டே அவ் வேதியனுடைய இல்லத்தை யடைந்து போஜனம் செய்யுமிடத்தில் உட்கார்ந்தான். அம்மாதும் கணவன் சொற்படி சிஷ்யனை அருகில் வைத்துக்கொண்டு அவ்வதிதியின் முன்பு சென்று போஜனத்தை யளித்தாள். அவ்வித போஜனத்தை அதிதியாகிய இந்திரன் தனது மாயையினால் மறையச் செய்துவிட்டு நான் பசியினால் காத்திருக்கிறேனே; ஏன் இன்னும் போஜனமளிக்கவில்லை என்று சொன்னான்.

அவ்வுரையைக் கேட்டு வியப்படைந்த அம்மாது இதோ போஜனமென்று இரண்டாவது தடவையில் அன்னத்தையும் பருப்பு, நெய், பாயஸம் முதலியவைகளையும் அதிதிக்குப் பக்தியுடன் அளித்தாள். அவ்வுணவுகளை அதிதியின் எதிரில் இட்டு அம்மாது நிமிர்வதற்குள் இந்திரன் மாயையினால் அவைகளையும் மறையச் செய்து எங்கே போஜனமென்று கேட்டான். அப்பொழுதும் அதிதி இவ்வாறு உரைப்பதைச் செவியிற்கொண்ட அம்மாது உட்சென்று பார்க்கும்பொழுது சமைத்தவை

யெல்லாம் அசிக்கப்பட்டு விட்டாயின. "என்செய்வோம்? இது என்ன பரீக்ஷை? நமது கணவன் வெளியூர் சென்றிருக்கும் சமயத்தில் இவ்விதமான சம்பவம் தோன்றுகிறதே: இனி சமைத்து அளிப்பதற்கும் காலவிளம்பத்தை இவ்வதிதி பொறுக்கமாட்டாரே. தியாகராஜ! நான் இச் சமயத்திலென்செய்வேன்" என்று சொல்லிக்கொண்டே அம்மாது தனது வலது கையை ஒரு பாத்திரத்தில் வைத்தாள்.

தியாகராஜனருளாலும் அவளது கற்பின் சிறப்பினாலும் அப்பொழுது அப்பாத்திரத்தில் அறுசுவையுடன் கூடிய உணவு இருக்கக்கண்டு உளம் மகிழ்ந்து அவைகளை எடுத்துக்கொண்டு போய் அவ்வதிதியின் முன்பு மறுபடியும் அளித்தாள். அதையும் இந்திரன் மறையச்செய்தான். இவ்விதமாய் நூறுதடவைகளில் இட்ட உணவை இந்திரன் மறையச் செய்வதும் அம்மாதும் அப்பாத்திரத்திலிருந்து வற்றாமல் விளங்கும் உணவையளிப்பதுமாயிருக்கையில் தியாகராஜர் தனது பாதகமலத்தைத் தியானித்துக் கொண்டே உணவையளிக்கும் அம்மாதின் ஸத்தியத்தை வெளியிடக் கருதி இந்திரனால் மறைக்கப்பட்ட அவ்வுணவின் கும்பலை எடுத்து விழுங்கும்படி தனது பிரமதகணங்களுக்கு உத்தரவு அளித்தார்.

அக்கணங்களும் அவ்வாறு இந்திரன் பின் நின்றுகொண்டு அவ்வுணவுகளையெல்லாம் உட்கொண்டார்கள். அதையறிந்துகொள்ளாத இந்திரன் தனது பக்கத்தில் இதுவரையில் குவித்து வைத்த உணவு எவ்வளவு என்று திரும்பிப்பார்க்கையில் குவியல் இல்லாமையைக் கண்டு வியப்படைந்து அம்மாதைக் குறித்து ஓ பதிவிரதாதிலகமே! நீயளித்த உணவு எங்கேயென்று கேட்கையில் ஞானதிருஷ்டியினால் அவைகளையெல்லாம் அறிந்த அம்மாது பரமேசனது ஏவலால் பிரமதகணங்கள் உண்டன என்றாள். அவ்

இந்திரன் தனது நிஜஸ்வரூபத்துடன் அவளது எதிரில் நின்று நான் உனது ஸத்தியத்தைப் பரீக்ஷிப்பதற்காகவே இவ்விதம் அதிதியாய்த் தோன்றி னேன். உத்தமிகளில் சிறந்தவளாகிய நீ உனது கணவன் உரைபோல் அதிதி கேட்கும் வரையில் சலிக்காமல் உணவு அளித்ததைப்பற்றி நான் மிகவும் சந்தோஷமடைகிறேன் என்று சொல்லி மறைந்தான்.



## 115. புத்திரனுக்காகப் பிராணனைத் தடுத்த லீலை

சோமகூடன் என்னும் அந்தணர் பாலாக்ஷ தீக்ஷிதரின் சிஷ்யர்களுக்கு உபதேச குருவாய் விளங்கினர். பாலாக்ஷ தீக்ஷிதரிடத்தில் பிரம்மசாரிகள் கல்வி கற்றுவந்தது போலவே அந்தச் சோமகூட தீக்ஷிதரிடத்திலிருந்தும் ஆயிரக்கணக்கான சிஷ்யர்கள் வேத சாஸ்திர புராணங் களைக் கற்று வந்தார்கள். ஒரு சமயத்தில் அவர் தமது சிஷ்யர்களுடன் திருவாரூருக்கு வந்து சேர்ந்தார். கமலா லயத்தில் சிஷ்யர்களுடன் நீராடி தேவாலயத்தை யடைந்து தியாகராஜனை நேரில் தர்சித்துத் தனது குருவாகிய பாலாக்ஷ தீக்ஷிதருரைத்த மகிமைகள் எல்லாம் இவருக்கே தகுமென்று நினைத்து அந்தச் சிஷ்யர்களுக்குப் புண்ணிய க்ஷேத்திர மகிமையையும், புண்ணிய புரநாதன் மகிமையையும் உபதேசித்தார்.

நமாய் அக் குருவானவர் திருவாரூரிலேயே சில காலம் தங்கியிருக்கையில் தியாகராஜனருளால் அவருக்கு ஒரு புத்திரன் பிறந்தான். பிறந்த அப்பால னுக்குச் செய்யவேண்டிய ஜாதகர்மம், நாமகரணம் முதலிய சடங்குகளைக் காலமுறை தவறாமல் செய்துவந்த ஸோமகூட தீக்ஷிதர் தமது சிஷ்ய வர்க்கத்தாருடன் தன் புத்திரனையும் சேர்த்துக் கல்விப்பயிற்சி செய்து வைத்தார்.

ஈசனருளால் பிறந்த அக் குமாரனும் உபநயன ஸம்ஸ் காரத்தைப் பெற்றுச் சாஸ்திராப்பியாஸம் செய்து வந்தான். அக் குமாரனுடைய மாதுலன் ஒரு சமயம் அவனைத் தனது இருப்பிடத்துக்கு அழைத்துக்கொண்டு போயிருந்தான். அதனால் புத்திரன் பிரிவையடைந்த அவ் வேதியர் புண்ணிய புரத்திலேயே சில காலம் வசித்து வருகையில் அவரது ஆயுள் முடிவடையும் தருணத்தை யடைந்துவிட்டது. எமபடர்கள் தீக்ஷிதரின் எதிரில் தோன்றுவதற்கு முன்னமே அவரது சரீரத்தில் சக்தி குறைந்து நரம்புகள் மெலிவை யடைந்தன.

அப்பொழுது அவர் சரீர சக்தியை யிழந்து பூமியில் படுத்தார். அவர் அத்தருணத்தில் பத்தினியின் உப சாரத்தைப் பெற்றுக்கொண்டு சக்தியற்று இருக்கையில் அவரது ஆயுளைக் கவர்ந்துகொண்டு செல்வதற்காக யம படர்கள் எதிரில் தோன்றினார்கள். அவர்களைக் கண்ட தீக்ஷிதர் இனி தான் உலகில் ஜீவித்து இருக்கமுடியா தென்று நினைத்துத் தியாகேசனை மனதில் தியானித்தார். "ஓ மறைச்சுடரே! மரகத மலையே! நெடுநாள் வரையில் நான் உமது ஸ்வரூபத்தை யறியாதிருக்கையில் எனது குரு என்மீது கருணை செய்து இந்த க்ஷேத்திர மகிமையையும் உமது ஸ்வரூபத்தையும் எனக்கு உபதேசம் செய்தார். அதனால் நான் மகிழ்வு எய்தி கலிதாபத்தை யடையாமல் உமது மஹிமையை இந்தச் சிஷ்யர்களுக்கும் உபதே சித்தேன். ஆகிலும் உமது அருளால் பிறந்த எனது குமாரனுக்கு மாத்திரம் நான் உமது தத்துவத்தை இன்னும் உபதேசிக்கவில்லையே; அவனும் இப்பொழுது என் சமீபத்தி லில்லையே; அவன் வந்து சேருவதற்கு முன் எனதாவி நீங்கு மாயின் பாக்கியத்தை யிழந்த என் குமாரன் மீது யார் கருணைசெய்வார்? ஈசனே நீயே கதி" யென்று மனதில் நினைக்கையில் அத் தீக்ஷிதரின் பிரார்த்தனையை யறிந்து கொண்ட தியாகராஜர் அந்த யமபடர்களுக்கு உத்தரவு

செய்துவிட்டு அவ்விஷயத்தை ஆகாய வாணியினால் அறிவித்ததாவது.

"வேதமோதி சிறந்த பக்தி நிறைந்த ஓ தீக்ஷிதரே! உமது வேண்டுகோளின்படியே நான் அருள் புரிந்தேன். இப்பொழுது நீங்கக்கூடிய உமது ஆவி கொஞ்சநேரம் வரையில் தங்கியிருக்கும்படி யமபடர்களுக்கு உத்தரவு இட்டேன். சீக்கிரத்தில் உமது குமாரனும் உமது சமீபம் வந்துசேரப்போகிறான். உமது விருப்பம் போலவே எனது தத்துவத்தை அவனுக்கு உபதேசம் செய்துவிட்டு

யடைவீர்" என்று மொழிந்தார். அவ்வண்ணமே அக் குமாரனும் சீக்கிரத்தில் தீக்ஷிதரிடம் வந்து சேர்ந்து அவரால் உபதேசிக்கப் பட்டதாகிய தாரக மந்திரத்தையும் பஞ்சாக்ஷர, பீஜாக்ஷர மந்திரங்களையும் பெற்ற பிறகே அவர் உயிரிழந்து கைவல்யத்தில் விளங்கினார். இவ்விதமாய் ஈசன் அசரீரி மூலமாய் அவரது புத்திரன் வருமளவும் அவரது உயிரைத் தடுத்து வைத்திருந்த அதிசயத்தைக்கேட்டு அனைவரும் ஈசனைத் துதித்தார்கள்.



## 146. மொட்டை மரத்தை வடமாக்கிய லீலை

மருதவனமென்னும் க்ஷேத்திரத்தில் நாரத

மென்று ஒரு தடாகமுண்டு. அத்தடாகத்தின் கரையில் அநாதி காலமாய் விளங்கும் ஒரு ககுபமரமிருந்தது. அம்மரமானது ஒவ்வொரு யுகத்திலும் ஒவ்வொரு மரமாய் விளங்கியதாகும். கிருத யுகத்தில் ககுபமரமாயும், திரேதா யுகத்தில் தேவதாரு மரமாயும், துவாபர யுகத்தில் வில்வமரமாயும், கலியுகத்தில் வடமரமாயும் மாறக்கூடிய திவ்விய சக்தியானது கைலாசபதியினால் அம்மரத்துக்கு அளிக்கப் பட்டிருந்தது. அப்படிப்பட்ட அம்மரமானது ஆதிகாலம்

முதல் அநேக தேவர்களாலும் மகரிஷிகளாலும் ஸத்கரிக்கப் பட்டதாய்ச் சிறப்புடன் விளங்கியது. அப்படிப்பட்ட அம் மரத்திற்குச் சமீபமான தடாகத்தின் முடிவில் ஒரு பாபி ராக்ஷஸ னுடைய [illegible] வெட்டப்பட்டபடியால் அம்மரத்தின் கிளை கள் எல்லாம் உலர்ந்து மொட்டை மரமாய் நின்றது. ஆகி லும் அம்மரத்தின் மகிமையைப் பூர்வகால மகரிஷிகளும் பெரியோர்களும் சொல்லக்கேட்டு அநேக வேதியர்கள் அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து ஜபாதிகளை முடித்துக்கொண்டு அம்மொட்டை மரத்தை வலம் வந்து கொண்டிருந்தார்கள்.

ஒருநாள் புத்தமதத்தோனும், ஜைந மதத்தோனும் தம்முடைய சிஷ்யருடன் தேச சஞ்சாரம் செய்துகொண்டே அத்தடாகத்தின் கரைக்கு வந்து சேர்ந்தார்கள். அத் தருணத்தில் அங்குள்ள வேதியர்களும் பிரம்மஞானிகளும் சிறந்த பக்தியுடன் அம்மொட்டைமரத்தைப் பிரதக்ஷிணம் செய்வதைப் பார்த்து நகைத்து "ஓ பிராமணர்களே! நீங் கள் பலனையளிக்கும் சக்தியை யிழந்திருக்கும் ஈசனை நம்பி வீணாகிய பக்தியையடைந்து இம்மொட்டை மரத்தை ஏன் பிரதக்ஷிணம் செய்கிறீர்கள்? நீங்களே கானலைத் தண்ணீ ராக நினைத்த மான்களாக ஆகுவீர்கள்" என்று பரிகாசம் செய்தார்கள்.

இவ்வித வார்த்தைகளைச் செவியினால் கேட்ட ஒரு வேதியன் "ஓ பொய்மதத்தோர்களே! நாங்கள் தத்துவ மதத்தை யடைந்திருக்கிறோம். நீங்களே கானலைத்தண்ணீர் என்று எண்ணுகின்ற மிருகங்கள் ஆகுவீர்கள். இன்னும் சில முகூர்த்தங்கள் வரையில் நீங்கள் இவ்விடமிருப்பீராகில் இம்மொட்டை மரத்தின் சிறப்பைக் காண்பீர்கள். அப் பொழுது தான் எங்கள் மதத்தின் மேன்மை விளங்கும்" என்று சொல்லும் பொழுது அங்கு வேதியர்கள் கூட்டமாய் வந்து கூடினர்.

இவ்விதமாய் அந்த மருதவனத்தின் மேற்குப் பாகத்தில் விளங்கும் ஸாரஸ தீர்த்தத்தின் கரையில் தொண்டர்கள் கூடியபொழுது அம்மொட்டை மரமானது அழகிய வட விருக்ஷமாக மாறியது. அதே சமயத்தில் ஈசனும் அம்மரத்தின் கீழ் ஞானமுத்திரையுடன் கூடிய தக்ஷிணாமூர்த்தி ரூபியாய்த் தோன்றித் தொண்டர்களுக்குக் காட்சியளித்தார்.

அவ்விதமாய் அம்மொட்டை மரமானது ஆலமரமாய் மாறியதையும், அதன் கீழ் ஆதிகுருவாய் விளங்கும் தக்ஷிணாமூர்த்தி வீற்றிருப்பதையும் கண்டு அனைவரும் பணிந்து அவரால் உபதேசிக்கப்பட்ட சாஸ்திரார்த்தங்களையும் வேதாந்த தத்துவங்களையும் அறிந்து கொண்டு பரமானந்தமடைந்தார்கள். அவ்வதிசயத்தைக்கண்ட அப்புறச்சமயத்தோரும் சற்று நேரம் திகைத்துப் பெருமையினால் கவரப்பட்ட மனமுடையவர்களாய் வெளியில் ஒன்றும் சொல்லாமல் தனது மனதுக்குள் மகிழ்ந்தும், தியாகேசனது அற்புத சக்தியைப் புகழ்ந்தும் வேறிடம் சென்றனர். பரமேச பக்தர்கள் எல்லோரும் அம்மரத்தின் கீழ்த்தோன்றி விளங்கும் ஈசனுக்கு திவ்வியாபிஷேகம் செய்துவைத்து அவரது உபதேசத்தால் சிறப்பையடைந்துவிளங்கிறார்கள்.



## 147. அக்னியில்லாமல் சோறு சமைப்பித்த லீலை.

அக்னிதேவன் ஒரு ஸன்யாசி ரூபத்தையடைந்து கையில் பிக்ஷா பாத்திரத்தை ஏந்திக்கொண்டு காஷாய ருத்ராக்ஷங்களின் அற்புதத்தோற்றத்தினால் காண்பவரின் மனதைக் கவர்ந்து கொண்டே ஒரு கிராமத்தின் வீதியில் சஞ்சரித்தான். அவ்விடத்திலுள்ள வேதியர்கள் அந்தச் சன்யாசியைக்கண்டு பணிந்து தமது இல்லத்தில் பிக்ஷையைப்பெற வேண்டுமென்று வேண்டினர்.

அக்னிதேவனாகிய அத்துறவி அவ்வந்தணர் சொல்லைக் கேட்டு "உங்களுடைய வீட்டில் உங்கள் பத்தினிமார்கள் என் எதிரில் அக்னியில்லாமலே சோறு சமைப்பார்களாகில் அப்படிப்பட்ட போஜனத்தை நான் யதி பிக்ஷையாகப் பெற்றுக் கொள்வேன்" என்று சொன்னார். அத்துறவி இவ்விதமாய் உரைப்பதைக்கேட்ட வேதியரில் சிலர் அக்னி யில்லாமல் சோறு சமைப்பது எக்காலத்திலும் எவ்விடத் திலும் நடைபெறாத காரியமென்று கூறினர். சிலர் அருந் ததிக்குச்சமமான கற்பு வாய்ந்து அக்னியில்லாமல் சமைக் கும் திவ்விய சக்தியையடைந்த பெண்கள் எங்கள் பத்தினி கள் அல்லவென்று உரைத்தனர். சிலர் யதி விரும்புவது வஞ்சனை போல் தோன்றுகிறது என்று கூறினர். மற்றும் சிலர் இவருக்கு இவ்வுலகில் இவர் சொல்லும் வண்ணம் யாரும் பிக்ஷையளிக்கப் போகிறதில்லை என்று சொன்னார் கள். மற்றும் சில தத்துவஞானிகள் இவர் சொல்லுவது போல் சமைத்து இந்த யதியின் மூலமாய்ப்புகழ் அடையத் தகுந்த உத்தமி எத்தேசத்தில் யார் இருக்கிறாளோ? என்று உரைத்தார்கள்.

இவ்விதமாய் ஒவ்வொரு அக்கிரஹாரங்களிலும் ஒவ் வொரு நகரங்களிலும் அந்த ஸன்யாஸியின் வசனத்தைக் கேட்ட வேதியர் தம்மால் அவ்வித பிக்ஷையளிக்கமுடியா தென்று சொன்னபடியால் மனம் வாடிய அக்னிதேவன் தான் நினைத்தபடி எவ்விடத்தில் நேரிடக்கூடுமென்று இரவும் பகலும் இடைவிடாது பூமி முழுவதும் சஞ்சாரம் செய்து வருகையில், திருவாரூர் நகரில் உஞ்சவிருத்தி செய்து வரும் பிராமணர் ஒருவர் இருந்தார். அவரது ஞானத்தை யும், கர்மானுஷ்டானத்தையும் கண்டு மகிழ்ந்த மகா ராஜன் அளவற்ற செல்வத்தை யளிப்பதாகக் கூறியபோதி லும் அவ்வேதியர் அச்செல்வத்தை விரும்பாமல் வைராக் கியத்தையும் பரமேசபக்தியையும் ஆபரணமாக அணிந்து அத்திருவாரூர் நகரில் வாஸம் செய்து வந்தார். அவ்வேதிய

டைய வீட்டையடைந்த அச்சன்யாசி "ஓவேதியரே! நான் அநேக நாட்களாய்த் தேசங்கள் தோறும் சஞ்சரித்து வருகிறேன். நான் விரும்புவது போல் என் முன்பு அக்னி யில்லாமல் சமைத்து பிக்ஷையளிக்கவல்ல உத்தமி மாதை நான் இதுவரையில் எங்கும் கண்டதில்லை. இப்பொழுது கடைசியாய் உமது வீட்டையடைந்தேன். நீராவது எனது விருப்பம் போல் உமது தர்மபத்தினியைக் கொண்டு அக்னி யில்லாமல் சமைத்து அளிப்பிராகில் எனது உயிர் தங்கும்" என்றுரைத்தார்.

அதைக்கேட்ட அவ்வேதியரும் அவ்வுரைக்குச் சற்று வியப்படைந்து பிறகு தியாகராஜரிடத்தில் வைக்கப்பட்ட பக்தியினால் தைரியத்தை யடைந்து அந்தச் சன்யாஸியின் பாதங்களுக்கு ஜலம் விட்டுக் கைகளுக்கும் அர்க்கியம் கொடுத்துப் பணிந்து ஆஸனமளித்து உபசரித்துவிட்டுத் தனது தர்மபத்தினியை யணுகி "அருந்ததி போல் கற்பிற் சிறந்தவளே! நீ தியாகராஜரது பாதகமலத்தை மனதில் தியானித்துக்கொண்டு இந்த யதியின் முன்வந்து பணிந்து அக்னியில்லாமல் விரைவில் சமைத்து இவருக்குப் பிக்ஷை யளிப்பாய்" என்று சொன்னார். கணவனையே தெய்வ மென்று நினைத்தவளாயும், கற்பில் சிறந்தவளாயுமுள்ள அம்மாது கணவனின் கட்டளையைச் சென்னிமேல் தரித்துக் கொண்டும் தியாகராஜ பாதத்தை மனதில் தியானித்துக் கொண்டும் அந்த யதியின் முன் சென்று பணிந்த பிறகு ஓர் அடுப்பில் பாத்திரத்தை வைத்து அதில் அரிசியைப் போட்டுத் தனது கையினால் அவ்வரிசியைத் தொட்டாள்.

அம்மாதின் பக்தி விசேஷத்தைக் கண்ட தியாகராஜர் அப்பொழுது கருணைபுரியவே அவ்வரிசியும் அடிசிலாக மாறிவிட்டது. அவளது பக்கத்தில் பற்பல பாண்டங் களில் பூரித்திருந்த பொருள்களும் குழம்பாகவும் பாயஸ மாகவும் மாறி விளங்கின. இவ்வதிசயத்தைக் கண்ட

அக்னிதேவன் திடீரென்று மறைந்து ஆகாயத்தில் ஸ்வாஹா தேவியுடன் தனது சுயரூபத்தைக் காண்பித்து நான் உங்களைப் பரீக்ஷை செய்யவந்த அக்னிதேவன். தியாகராஜரிடத்தில் வைக்கப்பட்ட பக்தியாலும், கற்பின் மேன்மையாலும் அக்னியில்லாமலே இவ்வாறு அடிசில் செய்ததைக் கண்டு நான் மகிழ்ந்தேன். எனது அருளால் உங்களுக்கு அக்னிஹோத்திரியாயுள்ள ஒரு புத்திரன் உண்டாகப் போகிறான் என்று ஆசிகூறி மறைந்தான். அவ்வண்ணமே அவ்விருவர்களும் நற்புத்திரனை யடைந்து வெகுநாள் சிறப்புடன் வாழ்ந்தார்கள். இவ்வதிசயத்தைக் கேட்டவரனைவரும் தியாகேசனைத் தர்சிப்பதற்காகத் திருவாரூர் வரும்பொழுது அத்தேவியைக் கண்டுமகிழ்ந்து உசித உபசாரங்களால் அவளைப் பூஜித்துச் செல்லலாயினர்

அக்குலாமரையினன்காண் அடியார்க்கென்றும்
ஆரமுதாயண்ணிக்கு மையாற்றன்காண்
கொக்குவாம்பலியொடு கொன்றைமாலை
குளிர்மதியுங்கூரரவும் நீரும்சென்னித்
தொக்குலாம்சடையினன்காண் தொண்டர்செல்லும்
தூநெறிகாண் வானவர்கள் துதிசெய்தேத்தும்
திக்கெலாம்நிறைந்த புகழ்த்திருவாரூரில்
திருமூலட்டானத் தெஞ்செல்வன்றானே

தாண்டகம்.

## 148. மரத்துக்கு இட்ட விஷத்தை நீக்கிய லீலை.

புத்தமத குருவும், கறுத மதகுருவும் சோழவரசனுல் உபசரிக்கப் பட்டவர்களாய்த் தமது மதத்தின் சிறப்பைப் பற்றிப் பலதடவை அவ்வரசனுடைய சமீபத்தில் புகழ்ந்து கூறிய போதிலும், அவ்வரசனது மனம் தமது மதத்தில் பதியாமல் தியாகராஜ பக்தியிலேயே ஆழ்ந்திருப்பக்கண்டு பெருமூச்சுவிட்டு அச்சோழநாட்டில் தங்களுடைய

மதத்தை எவ்வழியிலும் கிலைநாட்ட சக்தியற்றவர்களாய்ப் பொறாமை கொண்டு அவ்வரசனது அரண்மனைவாயிலில் அலங்கார பதாகைபோல் விளங்கும் இரண்டு சர்ஜக மரங்களின் அடியில் விஷத்தை வைத்துவிட்டு வெளியில் சென்றார்கள்.

பசுமையான மரங்களுக்கு விஷத்தை யளித்த அப் பாவிகள் சென்றபிறகு அவ்விஷத்தின் வேகத்தினால் அம்மரங்களிரண்டும் நெருப்புப்பற்றி எரிவதுபோல் பசபச வென்று எரிந்து துர்நாற்றத்தை வெளியில் கக்கிக்கொண்டு இலைகள் எரியவும், பட்டைகள் வேகவும், புஷ்பங்களும் கனிகளும் வாடவும் ஒரு மூகூர்த்த நேரத்துக்குள் இவ்வாறு சோபையை யிழந்தும் மொட்டைமரமாயும் கருகியும் தோன்றின. அவ்விதமாய் அவ்விரண்டு மரங்களுக்கும் நேரிட்ட துன்பத்தைக்கண்டு மனவருத்தமடைந்த அம்மன்னவன் மந்திரிகளுடன் ஆலோசித்து, இவ்வித கொடுஞ்செயலைச் செய்தவர்கள் அப்பொய் மதப்பாவிகளாகவே யிருக்கவேண்டுமென்று நிர்ணயம் செய்து அவர்களை அக்கணத்திலேயே சோழ மண்டலத்தை விட்டோடிப் போகும்படி உத்தரவை யனுப்பிவிட்டு விஷவைத்தியர்களை வரவழைத்து அவர்கள் மூலமாய் அவ்விரண்டு மரங்களுக்கும் உண்டான நிலைமையைப் போக்கப் பலவித முயற்சி செய்தான்.

அவ்விஷ வைத்தியர்களின் மருந்து வகைகள் ஒன்றும் அத்தருணத்தில் பலிக்கவில்லை. அதைக்கண்டு வியப்புற்ற நகரத்தார் எல்லோரும் அம்மஹாராஜனது அரண்மனை வாசலில் பெரிய கூட்டமாய் கூடியிருக்கையில் தியாகேசர் தனது பிரமதகணங்களில் ஒருவராகிய வேசந்தன் என்பவரை அனுப்ப வில்வமாலையைச் சென்னியில் சூடிவிளங்கும் அவ்வேசந்தனும் விரைவாய் அங்குவந்து அம்மரத்தின் அடிவேர்களில் தியாகேசன் கொடுத்த ஒரு பச்சிலையை வைத்துக் கட்டிவிட்டு அங்கு வந்து கூடியிருக்கும் தொண்டர்களையும்,

அரசனையும் அருகில் அழைத்து, அப்பொய்ம்மதப் பாவி களை இவ்வாறு இம்மரங்களுக்கு விஷம் வைத்துச் சென்ற னர் என்று சொன்ஞன். "இன்று முதல் இந்நாட்டில் அவர் களின் தீச்செயல்கள் ஒன்றும் பலிக்காமல் போகக்கடவது என்று பரமேசனே அவர்களுக்குச் சாபமளித்து விட்டு என்னை இங்கு அனுப்பினூர். இன்னும் அரைமுகூர்த்தகாலம் செல்வதற்குள் இம்மரங்களிரண்டும் பூர்வ சோபையைப் பெற்று விளங்கும். நீங்கள் தியாகராஜ பாதத்திலேயே மனதை இடைவிடாமல் வைக்கவேண்டும். இத்தியாகே சனே எனக்கும் மற்றுமுள்ள பிரமதகணங்களுக்கும் திக் பாலர்களுக்கும் நாயகன். இவரே வேதநாயகன். இவரே ஞானஸ்வரூபி" என்று இவ்விதமாய் ஈசன் மகிமையைப் புகழ்ந்து கொண்டிருக்கையில் அப்பச்சிலையின் சக்தியினுல் அம்மரங்களிரண்டின் கிளைகளில் தளிரும், இலைகளும், மலர் களும், கனிகளும் உண்டாகி முன் போலவே அழகிய சோபையை யடைந்தன.

சகல ஜனங்களும் பார்த்துக் கொண்டிருக்கையில் போர்வையை நீக்கிப் புதுவஸ்திரத்தையணிவது போல் அம் மரங்களுக்குண்டான சோபையைக் கண்டு மன்னவன் முதலியோர் மகிழ்வை யடைந்தனர். அவ்வேசந்தனும் அப் பொழுது மறைந்து விட்டான். அது முதல் அந்நாட்டில் வாழும் சகல தொண்டர்களும் இரவிலும் பகலிலும் கன விலும் இன்பத்திலும், துன்பத்திலும், தியாகராஜனே சரண்! தியாகராஜனே சரண்! என்றுரைத்துக்கொண்டே அவரது பாதத்தில் பக்தி வைக்கப்பட்டவர்களாய்ச் சிறப் புடன் வாழ்ந்திருந்தார்கள்.



## 149. தேரை ஓடச்செய்த லீலை.

சோழவரசன் தனது அரண்மனை வாசலில் விளங்கும் மரங்களுக்கு உயிரையளித்த தியாகராஜனது திருமேனி குளிரும்படி திவ்வியாபிஷேகம் செய்துவைத்துத் திரும்புகையில் அவ்வரசனுடைய சபைக்கு ஒரு தக்ஷச்ரேஷ்டன் வந்தான். அவனிடத்தில் விளங்கும் சிற்ப ஞானத்தைக் கேட்டு மகிழ்வெய்திய சோழன் அவன் மூலமாய்ப் பரமேசனுக்குத் திவ்விய ரதம் செய்து வைப்பதாய்த் தீர்மானம் செய்து கொண்டு பண்டாரசாலையைத் திறந்து அதற்காக அளவற்ற பொருளையளித்துச் சாரமரங்களையும், சந்தன மரங்களையும், செம்புளி மரங்களையும் கொடுத்து அவன் மூலமாய் ரதத்தைச் செய்து முடித்தான்.

ரவி சங்கியாகமென்னும் பன்னிரண்டு சக்கிரங்களுடனும், பன்னிரண்டு குதிரைகளுடனும் கூடியதாய் விளங்கும் அந்த ரதத்தின் தூண்கள் நவரத்தினங்களிழைக்கப் பட்டதாயும், பலவித பதாகைகளினால் அலங்கரிக்கப்பட்டதாயும் சந்திர மண்டலம்போல் அழகிய குடையுடன் கூடியதாயும் விளங்கும். அந்த ரதத்தில் சுபமுகூர்த்தத்தில் தியாகராஜனை எழுந்தருளச்செய்து அரசன் முதலிய தொண்டர்கள் அத்தேரின் நடுவில் விளங்கும் தியாகபதியைக் கண்டு மகிழ்வெய்தினர்.

அப்பொழுது அத்தக்ஷன் புதியதாய்ச் செய்யப்பட்டு முடிந்த அந்த ரதத்தின் சக்கிர தேவதையாகிய ஆபனுக்கும், ஆபவத்ஸனுக்கும் ரக்தான்னத்தைப் பலியிட்டான். ஒவ்வொரு திக்குக்கும் அதிபதிகளாகிய சோமனுக்கு மஞ்சள் சோற்றையும், பல்லாடனுக்குப் பால்சோற்றையும், ராக்ஷஸனுக்கு ரக்தத்தையும், ருத்திரனுக்கு எள்ளன்னத்தையும், ருத்ர ஜயனுக்குப் பயற்றம் சோற்றையும் ஜயந்தனுக்கு மீன் சோற்றையும், பூதனுக்குக் கள்ளையும் பிருங்கனுக்கு மேஷ மாம்சத்தையும் அளித்து ஆகாய தேவனுக்குப் பாய

சத்தையும், பூமி தேவதைக்கு நெய்யன்னத்தையும் பலியாக அளித்து நகராதிதேவதைக்கும் ரததேவதைக்கும் அஜபலி யிட்டுத்தானும் வெண்மை வஸ்திர மணிந்து மாலை தரித்து வடக்கயிற்றுடன் கூடிய ரதத்தைப் பிரதக்ஷிணம் செய்து மங்கள வாத்தியம் முழங்கும் பொழுது தியாகராஜனுக்குப் பற்பல தோஷ நிவாரணங்களைச் செய்து அத்தேரை இழுக் கலாமென்று கட்டளையிட்டான்.

தியாகராஜனுக்கு நூதனமாய்த் திவ்விய ரதோற்சவம் நடப்பதாகக் கேள்வியுற்ற ஜனங்கள் திரள்திரளாய் ஆரூரில் வந்து கூடினர். அத்தருணத்தில் சிற்பாசாரியனால் வடக்கயிற்றைப்பற்றி யிழுக்கலாமென்று உத்தரவு அளிக்கப்பட்ட ஜனங்களெல்லோரும் பரமானந்தமடைந்து அரசனைப் பணிந்து வடக்கயிற்றைப் பலதடவைப் பற்றி யிழுத்தும் அந்தத்தேர் நிலையிலிருந்து கொஞ்சமேனும் அசையவில்லை. அதைக்கண்டு திகிலையடைந்த சோழ பூபதி யும் அந்தச் சிற்பாச்சாரியும் வாடிய முகத்துடன் ஈசனைத் துதி செய்கையில் அதைக்கண்ட லக்ஷக்கணக்குள்ள தொண்டரும் ஒரே காலத்தில் தியாகேச! அருள்புரிவாய் என்று கதறினார்கள். அப்பொழுதும் அத்தேரின் சக்கிரங் கள் அசையவேயில்லை.

அதற்குக் காரணத்தையறியாத சிற்பாசாரியன் மிக வும் மனம் நொந்து இத்தேரானது ஓடாவிடில் இப்படிப் பட்ட ரதத்தை நிர்மாணம் செய்த தனக்கு அபகீர்த்தி யுண்டாகும். அபகீர்த்தியை யணிந்துகொண்டு உயிருடன் இருப்பதைக் காட்டிலும் உயிரை மாய்ப்பதே நலமென்று நினைத்துத் தனது உயிரை விடத்துணிகையில் தயாநிதி யாகிய தியாகேசர் உரைத்ததாவது;—கேளீர் பக்தர்களே! ஒப்பற்ற பக்தியுடன் இந்தச் சிற்பாசாரியன் பிரமாணங் களும் லக்ஷணங்களும் வழுவாமல் முறைப்படி அழகாகச் செய்து முடித்த இந்த ரதம் ஓடாமல் இருப்பதற்குக்

காரணம் என்னவென்றால் அப்பொய்மத குருவின் ஏவலால் அவனது சிஷ்யரில் ஒருவனாகிய ஆர்ஹன் என்பவன் இந்த ரதோற்சவம் நிறைவேறும் பெருமையைக் கண்டு ஆற்ற மனமுடையவனாய் இந்தத்தேரின் சக்கிரங்கள் அசையாமல் நிற்கக் கடவதென்று மாயாமந்திரத்தினால் கட்டியிருக்கிறான். அவ்வித மந்திரத்தை நான் இப்பொழுது அழித்துவிட்டேன். நீங்கள் விசனப்படவேண்டாமென்றுரைக்கக் கேட்டு அனைவரும் கைகூப்பிப் பணிந்து பிறகு வடக்கயிற்றை இழுக்கும் பொழுது அந்த ரதமானது திருவாரூர் ராஜவீதிகளில் அழகாய் ஓடிச்செல்ல ஆரம்பித்தது.

அத்தருணத்தில் தியாகராஜரைத் தரிசித்த பக்தர்கள் நாம் செய்த பாக்கியத்தினாலல்லவா இந்தத் தியாகராஜர் தேரில் வீற்றிருக்க நாம் கண்டோமென்று துதிக்கையில் சில தொண்டர்கள் அப்பொழுது வீதி விடங்கன் என்னும் பெயரிட்டுத் துதி செய்தார்கள்.

## 150. வாத்தியத்தை ஒலிக்கச்செய்த லீலை

ஒரு சமயம் கமலநாயகி தேவியாருக்கும், தியாகராஜனுக்கும் திருக்கலியாணத் திருவிழாவை வெகு சிறப்பாய் அந்தச் சோழவரசன் நடத்தி வைக்கையில் மதத்துவேஷத்தையடைந்த புத்தமத மந்திரவாதியொருவன் பக்தர் குழாத்துடன் கலந்து மறைந்திருந்து தனது சூன்ய மந்திர சக்தியினால் தேவாலய வாத்தியங்கள் ஒலிக்காவண்ணம் செய்தான்.

அவ்வித கபடமார்க்கத்தையறிந்து கொள்ளாத பூபாலன் முதலியவர்கள் ஈசனுக்கும் தேவியாருக்கும் விவாஹ உற்சவத்தை நடத்தி வருகையில் திடீரென்று நற்சமயத்தில் எவ்வித வாத்தியங்களும் ஒலிக்கவேயில்லை. அந்தந்த

வாத்தியக்காரர்கள் பலவாறு முயற்சி செய்தபோது தமது வாத்தியங்கள் முழங்காமல் இருக்கக் கண்டு வியப் படைந்து அரசனுக்கறிவித்தார்கள். அதையறிந்த அரச னும் அடிக்கடி இப்பேர்ப்பட்ட துன்பங்களை விளைவிக்கும் பாபிகளை தியாகேசனே அழிக்க வேண்டுமென்று துக்கத் தினால் தழைத்த குரலுடன் ஈசனை வேண்டி நிற்கையில் சகல ஜனங்களும் இதென்ன மாயமென்று பிரமித்து நிற்கையில் அப்புத்தமத மந்திரவாதியானவன் வெகு தூரம் ஓடிச் சென்றான்.

அத்தருணத்தில் தியாகராஜர் தனது சக்தி பேரிகை, மத்தளம், வீணை முதலிய வாத்தியங்களை மிகவும் இனிமையாய் ஒலிக்கச் செய்ததுமன்றி அந்தச் சூன்ய வாதியைத் தண்டிப்பதற்காக அவனுக்கு வயிற்று வலியை உண்டாக்கி, அதனால் மூச்சுக்காற்றை வெளியில் விடமுடியாமல் துன்பத்தையடைந்து அலறிக்கொண்டு தன்னுடைய சன்னிதானத்திற்கு வரும்படி செய்தார்.

அம்மந்திரவாதியானவன் மந்திர சக்தியை யிழந்து வயிற்று வலியுடன் பூமியில் வீழ்ந்து அழுது துடிப்பதைக் கண்டவர் எல்லோரும் இவனே பிரபுவின் வாத்தியங்கள் ஒலிக்காமல் செய்தவனாயிருக்க வேண்டும். ஆகிலும் பரமே சனது திவ்விய சக்தியினால் தண்டனையை அடைவிக்கப் பட்ட இவன் இப்பொழுது விஷமற்ற சர்ப்பம்போல் இங்கு வந்து அழுவதால் நாமிவனைப் பிரபுவின் எதிரில் கொண்டு சேர்ப்போமென்று நினைத்துச் சிலர் அம்மந்திரவாதியின் மீது கருணை கூர்ந்து பிரபுவின் கலியாணம் நன்றாக முடிந்த பிறகு அரசனது கட்டளையை யடைந்து அப்பாவியைத் தியாகராஜனது எதிரில் கொண்டு போய் விட்டார்கள்.

அப்பாவியின் மீது அப்பொழுது பிரபுவின் கருணா கடாக்ஷம் பரவியபடியால் வயிற்றுவலி முதலிய துன்பங் களால் விடப்பட்ட அவன் ஈசனைப்பணிந்து தான் செய்த

குற்றத்தைப்பற்றி மன்னிப்புக் கேட்டுக்கொண்டு அது முதல் தியாகராஜனை மனதில் நினைத்துக்கொண்டு, அப் பொய்மதத்தை யிகழ்ந்து வேதியர்களிடமிருந்து நல்ல திரவியத்தைச் சேகரித்துத் தியாகேசருக்குப் பலவாறு கைங்கர்யங்களைச் செய்து சிறப்புடன் விளங்கி சரீர முடிவில் ஈசுவர பதவியை யடைந்தான்.

## 151. தீபத்தை யெரியச்செய்த லீலை.

அம்மநதிரவாதியின் தம்பியானவன் ஒப்பற்ற தனது மந்திரசக்தியினால் அந்தத் தியாகராஜருக்காவது அவரது பக்தர்களுக்காவது துன்பத்தைச் செய்து தனது கோபத்தைத் தணித்துக் கொள்வதென்று நிர்ணயம் செய்து விரைவாய்த் திருவாரூரையடைந்து அந்நகரின் சிறப்பையும் ஆலயத்தின் மேன்மையையும் கண்டு ஆற்றா மனமுடையவனாய்ப் பெரு மூச்சுவிட்டுத் தலையை அசையச் செய்து சிரித்துக் கனைத்துப் பற்களைக் கடகடவென்று கடித்துக் கொண்டே தேவாலயத்தினுட்புகுந்து அங்குள்ள விசித்திரங்களை நோக்குகையில் அவனது புத்திக்கு யாது செய்வது என்னும் விஷயம் தோன்றவில்லை.

அவ்விதம் சற்று நேரம் திகைப்பை யடைந்திருந்து மனதில் ஒருவாறு ஆறுதலை யடைந்து பயந்து பிரபுவின் ஆலயத்தை முழுமையும் உற்று நோக்கினான். அப்பொழுது மாலை நேரமாக இருந்தபடியால் அங்கங்கு ஈராயிரதீபங்களும், குத்து விளக்குகளும், ரத்தின தீபங்களும், பிரகாசிப்பதைக்கண்டு அவன் தனது மந்திர சக்தியினால் அந்தத் தீபங்களெல்லாம் எரியாமல் போகக்கடவதென்று திரோதானம் செய்தான். அப்பொழுதே அவ்வாலயத்திலுள்ள தீபங்களெல்லாம் ஒளியை இழந்தன. அதனால் எங்கும்

இருள் மூடிக்கொண்டது. இவை கோபுரங்கள், இவை மண்டபங்கள், இவை படிகள், இவை பிராகாரங்கள் என்று ஒன்றும் தெரியவில்லை.

இவ்விதம் ஏற்பட்டதற்குக் காரணம் யாது என்று அறிந்துகொள்ள முடியாத தேவாலய அதிகாரிகள் அரசனிடம் அறிவித்தார்கள். அவ்வரசனும் மந்திரியுடன் விரைவாய் ஆலயத்துக்குவந்து பார்க்கும்பொழுது தீபங்கள் இல்லாமையால் பிரபுவின் பூஜையை எவ்வாறு செய்து முடிப்பதென்று மனங்கலங்கி தீவட்டிகளை எரிக்கும்படி உத்தரவு அளித்தான். அவ்வண்ணமே தீவட்டிகள் கொளுத்தப்பட்ட போதிலும் அத்தேவாலயம் முழுமையிலும் அம்மந்திரசக்தி சூழ்ந்து கொண்டிருப்பதினுல் அவ்வித தீவட்டிகளும் எரியவில்லை.

இப்படிப்பட்ட நிலைமையைக் கண்டவரனைவரும் அங்கங்குக் காவலாளிகளை நிற்கச் செய்துவிட்டு கோபுர வாசலிலேயே பெருங்கூட்டமாய் நின்றுகொண்டு தியாகேசரைப் பணிந்து துதி செய்தார்கள். "தியாகராஜப்பரஞ் சுடரே! முனிவர் மனதில் விளங்கும் தீபமே! சூரியன், சந்திரன், அக்னி என்னும் முச்சுடரையும் படைத்த பெருஞ் சுடரே! உமது திவ்யாலயத்தில் தீபங்களெல்லாம் மங்கி விட்டனவே; அசுர மாயையோ? ராக்ஷஸ மாயையோ? புறச்சமயவாதிகளின் மந்திரசக்தியோ? நாங்கள் அறியோம். இவ்வழகிய மாலை நேரத்தில் உமக்கு அளிக்க வேண்டிய பூஜைகளும் தடைப்படுகின்றனவே; என் செய்வோம்; உம்மையே சரணைப்பற்றினேம்" என்றுரைக்கையில் தியாகராஜர் அவர்களின் துதியைக் கேட்டு கடைக்கண் பார்த்தருள எண்ணினர்.

அந்த க்ஷணத்திலேயே தேவாலயத்திலுள்ள தீபங்கள் எல்லாம் விசேஷமாய் எரியலாயின. அம்மந்திரவாதியின் வாயிலிருந்தும் நாபியிலிருந்தும், அக்னி ஜ்வாலைகள் விழத்

தொடங்கின. அதனால் அவன் சகிக்க முடியாத தாபத்தை யடைந்தவனாய் வாயைத் திறந்து அக்னியைக் கக்கித் தொண்டை வெப்பத்தையடைந்து கண்கள் சிதறி உயிரை யிழந்தான். மறுநாட்காலையில் அந்நகரவீதியின் ஓரிடத்தில் அம்மந்திரவாதி வாயைத் திறந்துகொண்டு மாண்டிருப் பதைக்கண்டவர்கள் வியப்படைந்து அவனது சரீரத்தை யடக்கம் செய்தார்கள்.



## 152. சுரங்கத்தில் புகுந்தவரை யழித்த லீலை.

மலைப்பிரதேசங்களில் திரியும் சில திருடர்கள் தியாக ராஜரது தேவாலயத்தில் அளவற்ற திரவியங்கள் இருப் பதை யறிந்துகொண்டு அவ்வித செல்வங்களை அபகரிக்க வேண்டும் என்று எண்ணி அச்சோழநாட்டை யடைந்து திருவாரூருக்கு அநேக யோஜனை தூரத்திலேயே தென்திசை துடங்கி வடதிசை முகமாய்த் தேவாலயம் வரையில் பூமி யில் சுரங்கங்களைச் செய்து வந்தார்கள்.

அந்த வஞ்சகர்கள் இவ்விதமாய்ச் சுரங்கம் செய்து கொண்டு நாளடைவில் தியாகராஜரது தேவாலயத்தின் கீழ்வந்து ஒருநாள் நடு இரவில் நகரத்தார் உறங்கும் தருணத்தில் ஆலயத்திலுள்ள பொருள்களை எடுத்துப் போவதற்குத் தீர்மானம் செய்திருந்தார்கள். அத்தருணத் தில் சகல சராசரங்களுக்கும் நாதனாகிய தியாகராஜர் அவர்கள் விருப்பத்தை யழித்து அவர்களையும் மாய்க்கக் கருதினார். அதனால் அந்தச் சோரர்கள் அந்தச் சுரங்கத்தில் நின்றுகொண்டு மேன் மேலும் வழியைத் தோண்டிக் கொண்டு இருக்கையில் அந்தச் சுரங்கமுள்ள பூமியானது இடிந்து வீழ்ந்தது. அவ்வஞ்சகரெல்லோரும் அச்சுரங்கத்தி லேயே சிக்கிக்கொண்டு உயிரை யிழந்தார்கள்.

மறுநாட்காலையில் தியாகேசர் ஆலயம் முதல் தெ திசையாய் வெகுதூரம் வரையில் பூமி பிளந்து இடிந் வீழ்ந்திருப்பதைக் கண்ட ஜனங்கள் அவ்விஷயத்தை அ னுக்கு அறிவித்தார்கள். சோழவரசனும் அமைச்சருட ஆலோசனை செய்து வீரர்களை ஏவி அவ்வழியைப் சோதித்துப் பார்க்கையில் சுரங்கவழி செல்வதைக்கண்டு அவ்வழியில் வஞ்சகர் பலர் மாண்டிருப்பதையும் கண் வியப்படைந்து அவர்களை அவ்விடத்திலேயே புதைத் விடும்படி செய்து அது முதல் நகரக் காவலாளிகளை எ திசைகளிலும் ஏற்படுத்தி விட்டுப் பரம்பொருளாகிய தி கேசனே அவர்களை அழிக்காவிடில் ஆலயத்திலுள் பொருள்களையெல்லாம் அவர்கள் கைப்பற்றியிருப்பா கள். அவர்களின் தீச்செயலைக் கண்டு பலவாறு தியாே சரைத் துதிசெய்து தியாகேசர் முதலாக அந்நகரத்திலுள் ஸகல தேவதைகளுக்கும் அபிஷேகம் செய்து வைத்து பிராமணர்களுக்கு அன்னமளித்து, மங்கள வாத்தியங்க முழங்கச்செய்து ஜனங்களுக்குத் தைரியமுரைத்துச் சிற புடன் ஸிம்மாஸனத்தில் இருந்து உலகைக் காத்துவந்தா இவ்விதம் சோழ அரசனும் தியாகேசரும் ஜீவராசிகளை காக்க முயன்றபோது பிரஜைகளுக்குத் துன்பம் ஏ உண்டாகும்?



## 153. பாபபுத்தியை யொழித்த லீலை.

பாரத்வாஜ கோத்திரத்தில் உதித்த திவிதாஸ என்னும் வேதியர் ஒருவர் சாஸ்திரமறிந்தவராய்த் தா பத்தினியுடன்கூடி இல்லறத்தை முறைப்படி அனுஷ்டித் வருகையில் பூர்வஜன்ம பாபத்தினால் விசேஷ வறுமை உண்டாயிற்று. அவருக்கு ஏழு புத்திரர்கள் உண்டாயினா அக்குழந்தைகளைக் காப்பாற்றவும், தமது பூஜையை நிை

வேற்றவும் பொருளை யடையாத அவ்வந்தணர் அங்கங்கு உள்ள அக்கிரஹாரங்களில் சென்று யாசகம் செய்து தமது குடும்பத்தைக் காப்பாற்றி வந்தார்.

குடும்பத்தைக் காப்பா[illegible] [illegible] நா[illegible] [illegible]றும் அதிகச் செலவு ஏற்படவே அதை நிவர்த்திக்கச் சக்தியற்று இருந்த திவிதாஸர் மிகவும் மனம் நொந்து வாடிய போதிலும், நியாய மார்க்கத்தை விட்டு விலகாமல் காலம் கழித்து வந்தார். ஸகல தொண்டர்களுக்கும் விருப்பங்களை யளிக்கும் தியாகராஜரது ஸந்நிதானத்திலாவது தமது குடும்பவிஷயத்தை முறையிடுவோமென்று நினைத்து அவ் வந்தணர் தன் மனைவி மக்களுடன் ஒருநாள் புண்ணிய புரத்தைநாடி தியாகராஜாவின் ஸந்நிதானத்தில் பணிந்து அவரைத்தர்சித்து அவரது பாதகமலத்தில் தான் வைத் திருக்கும் பக்தி மாறாமல் விளங்க வேண்டுமென்றும் முடிவில் கைவல்யமளிக்க வேண்டுமென்றும், இவ்வுலகில் குடும்பத்தைக் காப்பாற்றுவதற்காக வேண்டிய செல்வத் தையுமளிக்க வேண்டுமென்றும் இவ்வாறு மூன்று வித மாகத் தனது விருப்பங்களைத் தியாகேசனே நிறைவேற்றி வைக்க வேண்டுமென்று நினைத்துக்கொண்டு துதிசெய்து திரும்பினர்.

அவ்வேதியர் ஒப்பற்ற பக்தியுடன் இவ்வண்ணம் வேண்டிக்கொண்டதை யறிந்த தியாகேசர் அவ்வாறே அவர் விருப்பங்கள் நிறைவேறக்கடவது என்று ஸங்கல் பித்துவிட்டு ஆகிலும் அவரது மனதைப் பரீக்ஷை செய்து பார்ப்போமென்று ஒரு தனிகன் போல் வடிவமெடுத்துக் கொண்டு அவ்வேதியர் திருவாரூரிலிருந்து தனது ஊருக்குத் திரும்பிப்போகும் வழியில் ஓரிடத்தில் தங்கியிருந்தார். பக்தர் விருப்பங்களை நிறைவேற்றுவதற்காகவே புண்ணிய புரத்தில் விளங்கும் தியாகராஜரது எதிரில் நாம் பிரார்த் தித்து விட்டோமே; இனி ஈசுவரன் அவ்வாறே நிறை

பேற்றுவார் என்று எண்ணிக்கொண்டே அவ்வேதியர் திருவாரூரில் நாலைந்து நாட்கள் தங்கியிருந்து பார்த்தார், ஈசன் செல்வத்தை அளிக்கவில்லை.

அதனால் அந்தத் திவிதாஸர் என்னும் அந்தணர் மிகவும் மனம் நொந்து இப்பிறப்பில் தமக்குச் செல்வம் உண்டாகப்போகிறதேயில்லை. ஏனெனில், ஸத்தியதெய்வமாகிய தியாகராஜர் முன்பு பிரார்த்தனை செய்தும், எவ்வித நன்மையும் உண்டாகவில்லை. அதற்குக் காரணம் தனது பாபராசியேயாகும் என்று நினைத்து, இனி இப்புண்ணிய புரத்திலிருந்தாலும் பயன் உண்டாகாதென்று நிர்ணயம் செய்து அந்நகரைவிட்டுத் தன திருப்பிடமே செல்ல வெண்ணித் தனது குடும்பத்துடன் வழியில் சென்று கொண்டிருக்கையில் தியாகேசர் தனிகன் உருவத்துடன் அவரெதிரில் தோன்றினர். தோன்றிய தனிகன் அவ்வந்தணரின் வரவைக்கண்டு மகிழ்ந்து மரியாதை செய்து "ஓ வேதியரே! நீர் உமது புத்திரர்களில் ஒருவனை எனக்கு விற்பீராகில் நீர் வேண்டும் செல்வத்தை அளிப்பேன்" என்று சொன்னன்.

அதைக்கேட்ட அவ்வேதியர் தன் தரித்திரத்தை யொழிக்கக்கருதி முதலில் தனது மகனை விற்கவும் துணிந்தார். சற்றுநேரத்துக்குள் மகனை விற்கத்துணியாமல் அவனுக்கும் மறுமொழியளிக்காமல் பரிதபித்தார். அதைக் கண்ட அந்தத் தனிகன் ஓ அந்தணரே! நீர் மகனை விற்க மனம் துணியாவிட்டால் நான் செய்யும் இந்தத் திலதானத்தைப் பெறுவீராகில் உமது ஏழ்மை நீங்குமென்று சொன்னர். அதைக் கேட்ட வேதியர் சற்று நேரம் யோசித்துப்பார்த்து இது வரையில் நாம் இவ்வித பாபத் தொழிலைச் செய்யவில்லையே; தியாகபதியைத் துதித்தும் செல்வம் கிடைக்கவில்லையே. ஆகையால் இந்தப் பாப காரியத்தைச் செய்தாவது செல்வத்தைப் பெறலாமென்று

நினைத்தார். அவருக்கு அப்பொழுது அவ்வித தானத்தை வாங்கவும் கைநீட்டவும் தைரியம் உண்டாகவில்லை. ஈச! என் செய்வேன்? என்றார்; பெருமூச்சு விட்டார்; எழுந்து ஓடமுயன்றார். வறுமையை நினைத்து நினைத்து அந்தத்தில தானத்தை வாங்கக் கைநீட்டும்பொழுது கண்ணீர் விட்டு அழுதார். அவ்விதமாய் அவ்வேதியர் பரிதபிக்கும்பொழுது தியாகேசர் அவ்வுருவத்தை மாற்றித்தனது ஸ்வரூபத்தைக் காட்டி உமது மனோரதம் நிறைவேறிவிடும் என்று உரைத்து மறைந்தார்.



## 154. வேதியனுக்காகச் சூரியனைத் தடுத்த லீலை.

பாரத்வாஜ கோத்திரத்தில் பிறந்த திவிதாஸர் என்னும் அவ்வேதியர் மீது கருணை செலுத்திய தியாகராஜர் அவ்வாறு அவரெதிரில் தோன்றி தரிசனமளித்து மறைந்த பிறகு அவ்வேதியர் அஞ்சலி செய்துகொண்டு அச்சுடர் மறைந்த திசைக்குத் தெண்டனிட்டுக் கண்களைத் திறந்து பார்த்தார். அவரும் அவரது மனைவி மக்களும் பெற்று நின்றவிடமெல்லாம் தங்கக்கட்டிகளும் நவரத்தினத்திரளும் நிறைந்திருக்கக் கண்டு "ஆ! ஆ! இஃதென்ன ஆச்சரியம்! சில நிமிஷங்களுக்கு முன் தரையாயிருந்த பூமியானது இப்பொழுது ஆடகக்கட்டிகளும், நன்மணிகளும் நிறைந்ததாய்க் காண்கின்றனவே; நமது வேண்டுகோளின்படி நமது குடும்ப வறுமையை நீக்குவதற்காகப் பரமேசனே இவ்விதம் செய்தார் போலும். இப்படிப்பட்ட பரமேசனிடத்தில் நாம் ஏன் அற்பப் பொருளை யாசித்தோம்? விலையற்ற நன்மணியென விளங்கும் ஈசனது ஐக்கியச்செல்வமல்லவா சிறந்ததாகும்" என்று பலவாறு ஈசனைத் துதித்தார்.

நெடுநாளாய்த் தக்கவுணவின்றி வறுமையினால் வாடிய அவ்வேதியரது மனைவியும் மக்களும் பரமேசனே இவ்வித காரியத்தைச் செய்திருக்க வேண்டுமென்று நினைத்து வெய்யிலினால் களைப்படைந்தவன் தடாகத்தையடைவது போலவும், பட்டினியை யடைந்தவன் அமுதை விரும்புவது போலவும் கனகராசிகளை விரும்பித் தங்களால் சுமக்கக் கூடிய வரையில் எடுத்துக்கொண்டார்கள். இவ்விதமாய் அவ்வேதியரது குடும்பத்தார்கள் ஈசனருளால் கிடைத்த பொன்மாரியை வாரியெடுத்துக்கொண்டும் ஒவ்வொரு அடி வைப்புக்களிலும் பரமேசனது திவ்விய கருணையைப் புகழ்ந்து கொண்டும் மனக்களிப்புடன் விரைவாய் நடந்து செல்லுகையில் கதிரவனும் மேற்கு மலையின் சிகரத்தில் விளங்கலானான். அவ்வேதியர் தான் செல்ல வேண்டிய வழியில் சிக்கிரமாய் இருள் மூடுவது போல் விளங்கும் அடையாளங்களைக் கண்டு மனம் கலங்கலானார்.

"வேதக்கடலில் திங்களென உதித்த தியாகேச! உமது அருளால் கிடைத்த இப்பொற்குவியல்களை நாங்கள் எடுத்துச் செல்லுகையில் இவ்வழியில் இவ்விதமாய் இரவு நேரம் தோன்றி விட்டதே; இவ்வனத்தில் திரியும் சோரர்களிடமிருந்தும் துஷ்டஜந்துக்களிடமிருந்தும் எவ்வாறு பிழைத்து எமதிடமடைவோம். வறுமையால் வாடிய எங்களுக்குச் செல்வமளித்த நீரே இன்றிரவில் நாங்கள் இச் செல்வத்தை யிழக்காவண்ணம் அருள் புரிவீர். இவ்வந்தி நேரத்திலிருள் மூடுவதைக்கண்டு இத்தனத்தைக் காப்பாற்றுவதற்காக நாங்கள் அலைபோல் அலைகிறோம். உமது பாதகமலத்தையே சரணெனப்பற்றினோம்." என்று இவ்விதமாய் அவ்வேதியரும் அவரது குடும்பமும், களிப்பையும் துக்கத்தையும் அடைந்து சென்றுகொண்டிருக்கையில் அவ்வழியில் ஓர் அசரீரி உண்டாயிற்று.

"ஓ வேதியரே! உமது மனதின் சுத்தியையும் உமது வறுமையையுங் கண்டு கருணைகூர்ந்த தியாகராஜர் இவ்

வந்திநேரத்தில் நீர் எதிரில் தோன்றும் ஒரு நகரத்தை யடையும் வரையில் கதிரவன் பாதாள லோகத்தில் செல்லாமல் அம்மலையின் முகட்டிலேயே கொஞ்ச காலம் தங்கியிருக்கும்படி கட்டளையிட்டிருக்கிறார். ஆதையால் நீர் விரைவாய் நடந்து சென்று எதிரில் தோன்றும் சிந்தா நகரை யடைவீர்" என்ற ஆகாயவாணியின் ஒலியைக் கேட்டு மனமகிழ்ந்த அவ்வேதியர் அவ்வாறே தனது குடும்பத்தாருடன் விரைவாய் அப்புரியை யடைந்து அன்றிரவை அங்குள்ள ஒரு வேதியரின் வீட்டில் கழித்து வருகையில் திவிதாஸர் என்னும் வேதியர் அந்த வீட்டுக்காரருடன் பேசிக்கொண்டிருக்கும்பொழுது தியாகேசரது குணங்களைப் பற்றிப் பலவாறு புகழ்ந்துவிட்டு மறுநாட் காலையில் தனது இருப்பிடமடைந்து துர்க்குணங்களை யடையாமல் ஈசுவர பக்தியுடன் சுகமாய்க் கழித்துவந்தார்.

அவ்வேதியரது உரையில் சிற்சில சந்தேகங்களை யடைந்த அந்த வீட்டுக்காரன் மறுநாட்காலையில் அந் நகரின் வெளி யெல்லையில் சென்று வெகுதூரம் வரையில் நான்கு திசைகளிலும் தேடிப்பார்த்து அவ்வித பொற் குவியல்களைக் காணுமல் மனம் வாடிய பிறகு தேறுதலை யுடைந்து தமது பாதாரவிந்தத்தில் ஒப்பற்ற பக்தி செய்தவர்களுக்கே கருணையினால் பரமேசன் செல்வமளிப்பாரே யல்லது, பக்தியற்ற மனமுடையாருக்கும் கர்மானுஷ்டானங்களைச் செய்யாதவர்களுக்கும் நற்பயனை யளிக்கமாட்டாரென்று உணர்ந்துகொண்டு அதுமுதல் அவ்வேதியன் மற்றுமுள்ள வேதியர்களை அழைத்துத் திவிதாஸர் என்னும் பக்தருக்குத் தியாகேசர் கொடுத்ததைச் சொல்லிப் பலவாறு துதித்து மற்றவர்களுக்கும் பக்தியை யுண்டுபண்ணி பரமேசன் அருள் பெற்று வெகு காலம் சிறப்புடன் விளங்கினான்.

## 155. தங்கக்கிளி பெற்ற லீலை.

திருவாரூர் நகரில் தனஞ்ஜயன் என்னும் ஸ்வர்ண காரன் ஒருவன் தேவ பவனத்துக்கும், ராஜ பவனத்துக்கும் தனிகர்களின் பவனத்துக்கும் உரியதாய் நாநாவித சித்திர விசேஷங்களால் சிறந்ததாயுள்ள ரத்நாபரணங்களைச் செய்து கொடுக்கும் தொழிலையுடையவன் இருந்தான்.

தேவ கிரீடம், முக திலகம், கர்ணபத்திரம், முத்து மாலை முதலான ஸகல ஆபரணங்களையும் வெகு விநோதமாய் வேலை செய்வதில் தேர்ந்தவனாயும் தட்டார் வேலையில் சிறந்து விளங்கும் அந்தத் தனஞ்ஜயன் தேவாலய ஆபரணங்களையும், ராஜபவந ஆபரணங்களையும், செய்துவரும் நாளில் அவனுக்கு நாளடைவில் அளவற்ற செல்வமுண்டாயிற்று. அவன் அவ்வித செல்வத்தினால் திருப்தியடையாமல் மேன் மேலும் செல்வத்தைச் சம்பாதிக்கவேண்டும் என்று கருதி தான் செய்துவரும் தட்டார் வேலையில் ஸ்வர்ணாபஹாரம் செய்து ஜனங்களை வஞ்சித்து வந்தான்.

சிற்சில சமயங்களில் தனஞ்ஜயன் என்னும் அந்தத் தட்டானுடைய வஞ்சனையைத் தியாகேசர் மாற்ற முயன்ற போதிலும், அவனது துர்புத்தி மாறவேயில்லை. அவன் ஜனங்களை வஞ்சனை செய்தும் பஞ்ச லோஹங்களைத் திருடியும் செல்வம் சம்பாதித்துவரும் நாளில் அவனது வேலையின் மேன்மையைக் கண்டு வியப்படைந்த தியாகேசர் எவ்விதத்திலாவது அவனது புத்தியை மாற்றி நன்மையை யடைவிக்க வேண்டுமென்று நினைத்தார். அவ்வித எண்ணத்துக்கு அனுகூலமாகவே ஜடாதாரியென்னும் யோகி ஒருவர் பற்பல ஆஸ்திகர்களிடமிருந்தும் பக்தர்களிடத்திலிருந்தும் நாநாவித பொருள்களையும் சம்பாதித்துக் கொண்டு தியாகேசருக்கு அழகாய் ஒரு தங்கக்கிளி செய்து அளிக்கக் கருதி அதற்குரிய ஸ்வர்ணத்தைப் பல ஆஸ்திகரிடமிருந்து யாசனை செய்து அந்தத் தனஞ்ஜயனிடத்தில் கொடுத்துக் கிளி செய்யும்படி சொன்னார்.

அவ்வேலையை ஒரு பக்ஷ காலத்துக்குள் நிறைவேற்றித் தருவதாய் ஒத்துக்கொண்ட தனஞ்ஜயனும் அந்த யோகி கொடுத்த ஸ்வர்ணத்தில் வழக்கம்போல் கொஞ்சம் திரவியத்தைத் திருடி வைத்துக்கொண்டு மற்ற ஸ்வர்ணத்தினால் அவ்வாறே அழகிய கிளியைச் செய்து முடித்தான். குறிப்பிட்ட நாளில் அக்கிளியைப் பெறுவதற்காக அந்த யோகி அவனிடம் வந்தார். அந்தத் தனஞ்ஜயன் வெகு சிறப்புடன் வேலைசெய்து முடித்திருந்த அக்கிளியைத் தராசில் ஏற்றி நிறை போடும்பொழுது அந்த யோகி கொடுத்த பொன்னளவுக்கும் அந்தத் தங்கக்கிளியின் நிறைக்கும் கொஞ்சம் குறைவு நேரிட்டது. அவ்விதம் குறைந்த சுவர்ணத்தைத் தானே அளிப்பதாய் அத் தனஞ்ஜயன் கொஞ்சம் சுவர்ணத்தை எடுத்து வைத்தான். அத்தருணத்தில் தியாகேசர் அத் தனஞ்ஜயனுக்கு நற்புத்தியை யுண்டுபண்ணக் கருதி தனது திவ்விய சக்தியினால் அந்தச் சுவர்ணத்தின் இடை குறையும்படி செய்தார்.

அவ்வித மாயையை யறியாத தனஞ்சயன் அப்பொழுதும் அளவு பொன் குறைந்திருக்கவே மறுபடியும் தராசில் கொஞ்சம் சுவர்ணத்தை எடுத்து வைத்தான். அப்பொழுதும் குறிப்பிட்ட அளவு பொன் குறைந்தே காணப்பட்டது. அதைக்கண்டு வியப்படைந்த தனஞ்சயன் கொஞ்சம் கொஞ்சமாய் தன்னிடத்திலிருக்கும் சுவர்ணக்கட்டிகளையெல்லாம் எடுத்து தராசில் வைத்தும்கூட குறைந்து இருக்கக்கண்டு முதலில் இது என்ன மாயமென்று திகைத்தான். பிறகு இவ்வாறு சிந்திக்கலானான். "தியாகராஜரது ஆபரணமாகிய இந்தத் தங்கக்கிளியில் நான் திருடிய பொன்னைக் காட்டிலும் பதினாயிரம் பங்கு அதிகமாக சுவர்ணத்தையளித்தபோதிலும், இடை சரியாய் இல்லையே; நான் என் செய்வேன் தியாகேச! நான் வழக்கம்போல் செய்துவந்த சுவர்ணாபஹாரத்தை உமது விஷயத்திலும் செய்தபடியால் இவ்வித கஷ்டம் நேரிட்டது. நான் என்

செய்வேன். இதுமுதல் இனி யாரையும் வஞ்சிப்பதில்லை; இதுவே சத்தியம். எனக்கு இதுவே தக்க தண்டனை; இதுவே எனக்கு நரகவேதனைக்கு ஒப்பாகும். தியாகேசா! உமது பாதமே துணை" என்று மனம் வாடி நின்றான்.

அத்தருணத்தில் புண்ணியபுராநாதனாகிய தியாகேசர் தான் நினைத்தபடியே அவனுக்கு நற்புத்தி உண்டாகி விட்டதென்று அறிந்து கொண்டு தனது திவ்விய சக்தியினால் சரியாக நிற்கும்படி செய்தார். அதனால் சந்தோஷத்தை யடைந்த அத்தனஞ்சயன் அந்த யோகியிடம் வாங்கியது போலவே சுவர்ணத்தையும் கிளியையும் அளித்து, அதற்குக் கூலியையும் பெற்றுக்கொள்ள மாட்டேனென்றுரைத்து விட்டுத் தன்னைத் தியாகேசர் இவ்விதமாய்ப் பரீக்ஷை செய்து நற்புத்தியை யளித்ததற்குப் பலவாறு புகழ்ந்தான்.

## 156. மாயப்புரவியை மாய்த்த லீலை.

ஒரு பௌத்தமத மந்திரவாதியானவன் தியாகராஜருக்காவது அச்சோழவரசனுக்காவது துன்பத்தை விளைவிக்கக் [illegible] ரையை [illegible] கெட்ட மந்திரங்களை உபதேசித்து, கெட்ட காரியங்களையும் வஞ்சனைகளையும், பாய்தல், [illegible], முறித்தல், கனைத்தல் உதைத்தல் முதலிய கெட்ட குணங்களையும் கற்பித்து அக்குதிரையைத் தான் தியாகராஜரது ஆலயத்துக்கு அளிக்கப் போவதாய் ஓட்டிக் கொண்டு வந்தான்.

இவ்விதமாய் அந்தப் பௌத்தமத மந்திரவாதியானவன் துன்பம் விளைவிக்கக் கருதி ஒரு சிவபக்தன் போல் வேடம் பூண்டுகொண்டு விபூதியையும் ருத்திராக்ஷமாலையையும் அணிந்து கொண்டு மஹா சிவபக்தியுடையவன் போல் பிரகடனம் செய்துகொண்டு அக்குதிரையைத் திருவாரூ

ராஜவீதி வழியாய் ஓட்டிக்கொண்டு வந்து தேவாலயத்தைப் பிரதக்ஷிணம் செய்து அக்குதிரையைத் தியாகராஜருக்கு அளித்துவிட்டதாய் மஹாராஜனுக்கு அறிவித்தான். அந்த சிவபக்தனைப் பௌத்தமத மந்திரவாதியென்று அறியாதவர்களாயும், அக்குதிரையைக் கெட்டகுணமுடைய தென்று அறியாதவர்களாயுமிருக்கும் தொண்டர்களும் மகாராஜனும் அவன் அவ்வளவு பக்தியுடனளித்த அவ் வுத்தம ஜாதிக் குதிரையைத் தியாகராஜாவின் தேவா லயத்தில் மற்ற குதிரைகளுடன் கட்டி வைத்து ஆகாரமிடு தல் முதலியவைகளால் சிறப்புடன் வளர்த்துவரத் தொடங்கினார்கள்.

அம்மாயாவாதியாகிய புத்தமதத்தோனும் அடிக்கடி அக்குதிரையின் சமீபம் வந்து பார்த்துக்கொண்டு போவ தும் வருவதுமாயிருந்து சிற்சில ஜாடைகள் செய்து கொண் டிருந்தான். அவ்வித கெட்ட ஜாடைகளை யெல்லாம் தொண்டர்கள் அன்பு என்று நினைத்து அவனையும் அக் குதிரையையும் மரியாதையுடன் பூஜித்து வருகையில் ஒரு நாள் விடியற்காலத்தில் தேவாலயத் தொழுவத்தில் அக் குதிரை உயிரை யிழந்திருப்பதைக் கண்ட பக்தர்கள் நடுக்க மடைந்து அலறினார்கள். அந்தச் சிவபக்தன் ஒப்பற்ற பக்தியுடன் ஈசனுக்கு அளித்த இக்குதிரை கட்டிய இடத்தி லேயே மாய்ந்திருப்பதற்குக் காரணம் யாது என்று கலங்கி மனம் வாடுகையில் சிவபக்தன் என்று வேஷம் பூண்டு வந் திருக்கும் அந்தப் புத்தமதத்தோனை மற்றொரு யோகி கட்டி யிழுத்துக்கொண்டு தேவாலய வாசலில் அவனை நிற்கச் செய்து அகோரபயங்கர மகாமந்திரங்களை உச்சரித்து அவனது கண்களும் நாவும் எரியும்படி செய்தார்.

அந்த யோகி இவ்வாறு செய்வதைக் கண்டவரெல்லோ ரும் இஃதென்னவென்று வினவுகையில் அந்த யோகியான வர் அம்மாயப்புரவியின் துஷ்டப்பயிற்சியையும் அவனது

தியாகராஜர் நேற்று இர

தனது சக்தியினுல் அப்புரவியைக் கட்டிய இடத்திலேயே மாய்த்தார். அப்பொழுதே என்னுடைய கனவில் தோன்றி விஷயத்தைச் சொல்ல நானும் அவ்வாறே இவனை ஒரு தடாகக்கரையில் கண்டு இவன் உச்சரிக்கும் துர்மந்திரங் களை அழிக்கவெண்ணி நான் இவனை இவ்வண்ணம் இழுத்து வந்து எனது மந்திரத்தினுல் தண்டனையடைவிக்கிறேன் என்று உரைத்தார். இவ்வித சம்பவங்களை எல்லாம் அறிந்து திருவாரூர்த் தொண்டர்கள் வியப்படைந்தார்கள்.



## 157 ஹம்ஸ தீர்த்தத்தை வற்றச்செய்த லீலை.

புத்தமதத்தோர்கள் ஒன்றுசேர்ந்து எவ்விதத்திலாவது திருவாரூரின் சிறப்பை அழிக்க வேண்டுமென்று எண்ணங் கொண்டார்கள். ஸத்தியமதத்தின் மீது வைத்திருந்த துவேஷத்தினுலும், பூர்வஜன்ம பாபத்திரளாலும், வஞ் சனைத் தொழிலில் பிரவேசித்த அனைவரும் தமக்குக் கட்டுப்பட்ட சில சண்டாளர்கள் மூலமாயும், மிலேச்சர்கள் மூலமாயும் நூறு கபிலைப் பசுக்களை விலைக்கு வாங்கி அப் பசுக்களைச் செலுத்திக் கொண்டுபோய் புண்ணியபுர க்ஷேத்திரத்தில் விளங்கும் ஹம்ஸ தீர்த்தக் கரையில் வதைக்கும்படி கட்டளையிட்டார்கள்.

அப்பாபிகளின் பேச்சுக்குட்பட்ட அந்த மிலேச்சர்க ளும் அவ்வித கோஹிம்சையைச் செய்வதற்கு இசைந்து அவ் வண்ணமே அப் பசுக்களை ஹம்ஸ தீர்த்தக் கரையில் காலை நேரத்தில் வதைக்கத் தொடங்கினுர்கள். அத்தருணத்தில் அப்புண்ணிய தீர்த்தத்தில் உதயகால அனுஷ்டானஞ் செய்துகொண்டிருக்கும் மகரிஷிகளும் வேதியர்களும், பக்தர்களும், அப் பாபிகள் தயையற்றவர்களாய்க் கோ வதை செய்து வருவதைக் கண்டு மனம் நடுங்கித் தமது அனுஷ்டானத்தை முடிக்காமலே “ஹர ஹர! பரமேச!

ஸத்தியப் பிரதிக்ஞ! உமது தவ்வய க்ஷேத்திரமாகிய இந்தப் புண்ணியபுரத்தில், இந்த ஹம்ஸ தீர்த்தத்தில் இவ்வாறு கோவதை செய்யும் பாபிகளை அழிக்கக்கூடாதா. இப் பசுக்களின் உதிரத்தினுல் இந்தப் புண்ணிய தீர்த்தத்தை அசுத்தமாக்கி விட்டார்களே; இப் பசுக்களுக்கு நன்மையளிப்பது உமது கடமை; எங்களைக் காப்பதும் உமது கடமை" என்று தியாகேசரைத் துதி செய்துகொண்டே திசைகள் தோறும் ஓடலாயினர்.

அவ்விதம் ஓடுவதைக் கண்ட தியாகேசர் தனது மனதில் அவைகளைக் காப்பாற்றவேண்டும் என்று நினைத்தார். அதனுல் அத்தருணத்தில் வதைக்கப்பட்ட பசுக்கள் எல்லாம் திவ்விய சரீரத்தை யடைந்து ஆகாயத்தில் விளங்கும் விமானங்களில் ஏறி சுவர்க்க லோகத்தை யடைந்தன. வதை செய்வதற்காக நின்ற பசுக்கள் அச் சமயத்தில் ஒரு ஹுங்காரம் செய்தன. அவ்வித ஹுங்காரத்தினுல் அந்த மிலேச்சர்கள் எல்லோரும் மூர்ச்சையை யடைந்து பூமியில் விழுந்து தலை சிதறி உயிரைத் துறந்தனர்.

அவ்விதம் வதைக்கப்பட்ட பசுக்களின் சரீர ரத்தம் அந்த ஹம்ஸ தீர்த்தத்தில் கலந்தபடியால், அத் தருணத்திலேயே அந்த ஹம்ஸ தீர்த்தத்திலுள்ள ஜலம் முழுவதும் வற்றிப்போய்விட்டது. இவ்வித அதிசயங்களை எல்லாம் கண்ட மகரிஷி முதலானவர்கள் தியாகேசரைத் துதிக்கும் பொழுது ஓர் அசரீரி உண்டாயிற்று. அதனுல் அப்புத்த மதத்தோரின் ஏவலால் அச் சண்டாளர்கள் கோவதை செய்ததாயும் அவ்வித கோக்களுக்குப் பரமேசனே நன்மை அடைவித்ததாயும், ஹம்ஸ தீர்த்த ஜலத்தை வற்றச் செய்து அந்தத் தீர்த்தமானது கமலாலய தீர்த்தத்துடன் கலந்துவிடும்படி செய்ததாயும் அறிந்துகொண்டு மகிழ்ந்தார்கள்.

## 158. ரிஷிகளின் மேன்மையை வெளியிட்ட லீலை.

கௌதம மஹாரிஷியையும், காத்தியாயன மஹாரிஷியையும், முன்னிட்டுக்கொண்டு அநேக மஹாரிஷிகளும், அநேக வேதியர்களும் கூட்டமாய்ச் சேர்ந்து அங்கங்கு விளங்கும் புண்ணிய க்ஷேத்திரங்களில் சிற்சில நாள் வாஸம் செய்து லிங்கமூர்த்திகளின் தரிசனத்தைப் பெற்று தேசங்கள் தோறும் ஸஞ்சாரம் செய்து கொண்டே பாண்டிய தேசத்தை அடைந்தார்கள்.

அவர்கள் அத்தேசத்திலுள்ள சிவ க்ஷேத்திரங்களில் லிங்கமூர்த்தி தரிசனத்தைப் பெற்றுக்கொண்டு ஒரு தடாகக் கரையில் அனுஷ்டானம் செய்யும் பொருட்டு இறங்கினார்கள். அத்தருணத்தில் பாண்டியநாட்டரசனும் கேரள நாட்டரசனும் தமது பரிஜனங்கள் வேட்டைக் காரர்கள் இவர்களுடனே கூடினவர்களாய் வனத்தில் நுழைந்து துஷ்ட மிருகங்களை அழித்துக்கொண்டு வந்தார்கள். அவ்வரசர்கள் இருவரும் நெடுநாளாகச் சோழநாட்டு அரசர்களின் மீது பகைமை கொண்டிருந்தபடியால், அச் சோழநாட்டரசனுக்குப் பிரதான தேவதையாகிய தியாகராஜர் மீதும் பக்தியுடையவில்லை. அவ்வீசனது திவ்விய லீலைகளைக் கண்டனுபவித்த போதிலும் ஸாதாரண தெய்வமென்றெண்ணிக்கொண்டு அவரது பக்தர்களையும் ஸாதாரண மனுஷ்யர்களாகவே நினைத்து வந்தார்கள்.

அவ்விரு அரசர்களும் அவ்விடத்தில் அனுஷ்டானம் செய்யும் பொழுது அவ்வேதியரும் அந்த ரிஷிகளும் புகழும் தியாகராஜாவின் நாமத்தைக் கேட்டுப் பகையினால் பரிகாசம் செய்து, "ஓ வேதியர்களே! நீங்கள் தியாகராஜனையே எப்பொழுதும் விசேஷமாய்க் கொண்டாடுகிறீர்களே; அதனால் உங்களுக்கு எவ்வித சிறப்பும் உண்டாகவில்லையே! நீங்கள் வறுமையினால் வாடுகிறீர்களே; பலமற்றவர்களாய் தேசங்கள் தோறும் திரிந்து வருகிறீர்களே;

தியாகராஜன் அருள் உங்களிடம் விளங்குவதாய்த் தோன்றவில்லையே;" என்று கூறி நகைத்தார்கள்.

தன கர்வத்தினலும், அரசன் என்னும் அகங்காரத்தினலும் அவ்விரு பூபாலர்களும் இவ்விதம் பரிகாசம் செய்ததைக் கேட்டு ஒரு வேதியர் அந்த ரிஷிக் கூட்டத்திலிருந்து எழுந்து, "அஞ்ஞானத்தினல் ரிஷிகளைத் தூஷிக்கும் அரசர்களே! இன்னும் சற்று நேரத்தில் இளைத்த இம் மகரிஷிகளுடைய மேன்மையும், உங்களுடைய செல்வச் சிறப்பும் விளங்கும். அதனலேயே நீங்கள் நற்புத்தியை அடையலாம்;" என்று சொல்லிக் கொண்டிருக்கையில் அந்த அரசர்களின் பரிவாரங்களையழித்து அவர்களையும் சிறைபிடிக்கக் கருதிய சில வேடர்கள் பெருங்கூட்டமாய்க் கூடிவந்து கணக்கற்ற அஸ்திரங்களையும், தடிகளையும் வீசி பயங்கரமாய்ப் போர்செய்யத் தொடங்கினர்கள்.

அவ்விரு அரசர்களும் சற்று நேரம் வரையில் அவ் வேடர்களை எதிர்த்துப் போர் செய்தார்கள். அரசர்கள் பிரயோகித்த அஸ்திரங்களையெல்லாம் துண்டு துண்டாகச் செய்து அவர்களது பரிவாரங்களைக் கொன்றும், அவர்களின் குதிரைகளை அழித்தும் வருகையில் அவ்வேடர்களின் செயல்களைக்கண்டு அரசர்கள் நடுங்கினர்கள். அவ் வேடர்கள் மேன்மேலும் எதிர்த்து வருவதைத் தடுக்க முடியாமல் மனம் கலங்கினர்கள். அத்தருணத்தில் கேரள அரசனுடன் யோசனைசெய்த பாண்டியன் இத்தருணத்தில் நாம் இம்மகரிஷிகளைச் சரணமடைவதே நலம்; எவ்வித பகைவரையும் அழிக்கவல்ல சக்தியானது இவர்களிடத்தில் இருக்கிறது என்று எண்ணி அம்மகரிஷிகளின் கூட்டத்தில் அக்னிபோல் விளங்கும் காத்தியாயன மகரிஷியைச் சரணமடைந்தார்கள்.

கருணைக்கு இருப்பிடமாயும், திவ்விய சக்தியைப் பெற்றவராயும் விளங்கும் காத்தியாயன மகரிஷியானவர் சரணை

மடைந்த அரசர்களுக்கு அபயமளித்துத் தனது ஆச்சிரமத்தில் இருக்கும்படி கட்டளையிட்டு விட்டு இருபத்தெட்டு தர்ப்பைப் புற்களால் ஒரு கூர்ச்சம் செய்து, அக்கூர்ச்சத்தில் பிரமனையும் அக்னியையும் ஆவாஹநம் செய்து, மந்திரித்துப் பூஜித்த பிறகு அக்கூர்ச்சத்தைத் தனது முன்பு வைத்துப் பார்த்துக்கொண்டிருந்தார்.

அக்கூர்ச்சத்தில் ஆவாஹித்த தேவதா மந்திர சக்தியினால் எதிர்த்துவந்த வேடர்கள் பின் தள்ளப்பட்டவராயும், ஆயுதங்களை இழந்தவராயும் பயந்து சின்ன பின்னமாய்ச் சிதறி ஓடி விட்டனர். அவ்வரசர்களிருவரும் இவ்வித அதிசயத்தைக் கண்டு ஆனந்தப்பட்டு இம்மகரிஷிகளின் மகிமையே சிறந்தது. இவர்கள் உருவில் சுருங்கியிருந்த போதிலும், இளைத்தவராய் இருந்தபோதிலும், இவர்களுக்கு நிகர் வானவரும் ஆகமாட்டார்கள் என்று துதித்து அம்மகரிஷிகளின் பாதாரவிந்தங்களில் பணிந்து அவர்களது ஆசியைப் பெற்றுச் சென்றனர்.

## 159. தீக்ஷிதரின் அபசாரத்தை விலக்கிய லீலை.

கங்காதாஸர் என்னும் தீக்ஷிதர் ஒருவர் தேவகிரியில் வந்தார். அவர் தனது தந்தையினால் எட்டாவது வயதில் உபநயனம் செய்து வைக்கப் பெற்றவராய் நற்புத்தியையடைந்து குருகுலம் சென்று படித்து வந்தார். அவரிடத்தில் இளம் வயது முதல் எவ்வித கெட்ட குணங்களும் அணுகவில்லை; பெரியோர்களிடத்தில் பேரன்பு கொண்டவர். தகுந்த காலத்தில் எவ்வித வேலைகளையும் செய்கிறவர். ஐம்பொறிகளையும் வென்றவர்.

இப்படிப்பட்ட நற்குணங்களுக்கு இருப்பிடமாகிய அந்தக் கங்காதாஸ தீக்ஷிதர் குருவின் அருளால் ஸ்கல

சாஸ்திரங்களையும் கற்று குருவின் ஆசியையும் உத்தரவை யும் பெற்றுக் கொண்டு இல்லறத்தை நல்லறமாக நடத்தி வருகையில் தேச சஞ்சாரம் செய்து வந்த பெரியோர்களால் தியாகராஜாவின் மகிமையை உரைக்கக் கேட்டு ஆனந்த மடைந்து அவரிடத்தில் அளவற்ற பக்தியையுமடைந்தார். அவர் இவ்வித நற்குணங்களுடன் கூடி வாழும் பொழுது அவ்வந்தணரை எவ்விதத்திலாவது அழிக்க வேண்டு மென்று கலி புருஷன் நெடுநாளாய் எதிர்பார்த்திருந்தான்.

ஒரு நாள் அந்தத் தீக்ஷிதர் மாலை நேரத்தில் செய்ய வேண்டிய கர்மாவைச் செய்ய ஆரம்பிக்கையில் பூர்வ பாப வசத்தினுல் அரை நிமிஷம் அவரது புத்தி மாறிவிட்டது. அவர் எப்பொழுதும் தனது புலன்களாகிய குதிரைகளை நற்புத்தியாகிய கடிவாளத்தினுல் அடக்கி வந்தாராயினும் அச்சமயத்தில் காரணமின்றி அவரது புத்திக்குத் தடுமாற்ற மேற்பட்டதினுல் பிரதக்ஷிணமாகச் சுற்றுவதை விட்டு அப்பிரதக்ஷிணமாகச் சுற்றினுர். கொஞ்சகாலம் நேரிட்ட புத்தியின் தடுமாற்றத்தினுல் அத்தீக்ஷிதர் இவ்வாறு செய் ததைப் பார்த்திருந்த கலி புருஷன் இவரை அழிப்பதற்கு இதுவே தக்க சமயம் என்று நினைத்து அவரது கழுத்தில் ஏறிக் கொண்டான்.

அந்தத் தீக்ஷிதருடைய சரீரத்தில் கொடும் கலி புருஷன் புகுந்தபடியால் அவரது புத்தி மிகவும் தடுமாற்றத்தை அடைந்தது. அதனுல் அவர் அக்காலத்துக்குரிய ஜப காரியங்களை முடிக்காமல் வேத மந்திரங்களையும், காயத்திரி யையும் ரிஷிகளின் பெயர்களையும் அபஸ்வரமாயும் நிலை தடுமாறியும் உச்சரித்தார். இவ்வித அழகிய மாலை நேரத் தில் மகரிஷிகளையும் பெரியோர்களையும் ஏன் வணங்க வேண்டும்? ஒருவரும் வணங்கக் கூடாது என்றுரைத்தார். கலி புருஷனுடைய கொடிய ஆவேசத்தினுல் மதிமயங்கிய தீக்ஷிதர் தனது நிலைமையை மறந்து அபசார வாக்கியங் களையும் பரமேச பக்தியின் நிந்தனைகளையும் சொல்லித்

கொண்டே இங்குமங்கும் ஓட ஆரம்பித்ததைக் கண்டு எல்லோரும் திகைத்து நின்றனர்.

அத்தீக்ஷிதரின் மனைவியானவள் திடீரென்று தனது கணவனுக்கு நேரிட்ட மதிக்கலக்கத்தைப்பற்றி ஆற்றுமன முடையவளாய் மனம் நொந்து வாடி அழுது உணவையும், உறக்கத்தையும் மறந்து "புண்ணிய புரநாத! பக்தரின் பூஜையைப் பெறும் பரம்பொருளே! எனது கணவன் மீது உமது கருணை பாயலாகாதா? எனது எண்ணத்தை நிறை வேற்றி வைக்கக்கூடாதா? இவருக்கு இப்பொழுது காரண மின்றி நேரிட்டிருக்கும் புத்தி மயக்கத்தைப் போக்கிக் காப்பாற்றுதல் உமது மகிமைக்கு அழகாகாதோ? எனது பர்த்தாவானவர் மேன்மேலும் கொடிய பாபச் செயல் களைச் செய்ய முயற்சி செய்கிறாரே! பேதையாயும் மற் றெவ்வித கதியற்றவளாயும் உமது பாதத்தையே சரண் புகுந்தவளாயுமுள்ள எனது கணவனைக் காப்பாற்றுதல் உன்னுடைய கடமை" யென்று புலம்பி ஒருவாறு ஆறுத லடைந்து மறுநாட் காலையில் தனது கணவனை வலுவில் அழைத்துக் கொண்டு புண்ணிய புரத்துக்கு வந்தாள்.

தனது தர்ம பத்தினியினால் கமலாலயத்தில் வலுவில் ஸ்நானம் செய்து வைக்கப்பெற்ற அந்தத் தீக்ஷிதர் அந்த ஸ்நான மகிமையினால் கொஞ்சம் நற்புத்தியை யடைந்து, இது எவ்வூர்? என்று மனைவியைக் கேட்டார். புண்ணிய புரமென்று அம்மாதினால் அறிவிக்கப்பட்டவராய் ஆலயத் துக்குட் புகுந்து பரமேசனைக் காணவே அக்கொடிய கலியின் வேகம் கொஞ்சம் கொஞ்சமாய்க் குறைந்து விட்டது. அத்தருணத்தில் முன்போல் நற்புத்தியைப் பெற்ற அத்தீக்ஷிதர் ஈசனைத் துதிக்கையில் அசரீரியினால் அங்குள்ளவர்கள் எல்லோரும் அவருக்கு நேரிட்ட துன்பம் முதலியவைகளை யறிந்து கொண்டதுமன்றி அத்தீக்ஷிதரின் புத்தியானது அபசார வழியில் சென்றதை பரமேசன்

மீண்டும் நல்வழியில் திருப்பி அவருக்கு அருள் புரிந்ததைப் பற்றித் தியாகேசரைப் பலவாறு புகழ்ந்தார்கள். அந்தத் தீக்ஷித தம்பதிகளும் ஈசனருளால் விசேஷ சிறப்பை யடைந்து அவரது பாதத்தையே இடைவிடாது நினைத்துக் கொண்டு வாழ்ந்தார்கள்.

நன்றருளித் தீதகற்றும் நம்பிரான் காண்
நான்மறையோ டாறங்க மாயினான் காண்
மின்திகழும் சோதியன்காண் ஆதிதான் காண்
வெள்ளேறு நின்றுலவு கொடியினான் காண்
துன்றுபொழிற் கச்சியேகம்பன் தான் காண்
சோற்றுத் துறையான் காண் சோலை சூழ்ந்த
தென்றலார் மணங்கமழுந் திருவாரூரில்
திருமூலட்டானத் தெஞ் செல்வன் தானே.

—அப்பர் சுவாமிகள்



## 160. குரு தக்ஷிணையளித்த லீலை.

ஹரதாஸர் என்ற தீக்ஷிதர் ஒருவர் நெடுநாள் வரையில் காசி நகரில் வாஸஞ்செய்து அங்குள்ள தமது சிஷ்யர்களுக்குச் சாஸ்திரங்களைக் கற்பித்து அச்சிஷ்யர்களுடன் தக்ஷிண தேசத்தில் விளங்கும் புண்ணிய க்ஷேத்திரங்களைத் தர்சிப்பதற்காகப் புறப்பட்டுத் திருவாரூரையடைந்தார். அந்நகரில் விளங்கும் தியாகேசரைத் தரிசனம் செய்து அவரது வடிவழகினுல் கவரப்பட்ட மனமுடையவராய் அம்மூர்த்தியை உற்சவ சமயங்களில் தர்சிக்கக் கருதி அங்கேயே இருந்து வரலானுர்.

இவ்விதம் ஹரதாஸர் என்னும் தீக்ஷிதர் தமது சிஷ்யர்களுடன் அந்நகரில் வசித்து வருங்காலத்தில், அவரது சிஷ்யருள் மஹாமதி என்னும் மாணுக்கன் ஒருவன் குருவின் கருணையினுலும், தனது புத்தியின் மேன்மையினுலும் வேதங்களையும் மீமாம்ஸை முதலான சாஸ்திரங்களையும் வெகு சீக்கிரத்தில் கற்று வந்தபடியால் அவ்வித கூர்மை

யான புத்தியுள்ள அம்மாறுக்களிடத்தில் குருவுக்கு விசேஷ அன்பு உண்டாயிற்று. அந்தச் சிஷ்யனும் அக் குருவின் பாதாரவிந்தத்தில் அசைவற்ற பக்தி வைத்து அவருக்குப் பணிவிடை செய்து கொண்டு சாஸ்திரங்களைக் கற்று வந்தான்.

அக்குருவானவர் அச்சிஷ்யனிடத்தில் விசேஷ அன்பு வைத்திருப்பதைக் கண்டு கொஞ்சம் பொறாமை கொண்ட மற்ற சிஷ்யர்கள் சிற்சில சமயங்களில் தமது மனக் கருத்தை ஜாடையினால் வெளியிட்டார்கள். அவைகளை யறிந்து கொண்ட அக் குருவும் அவ்வித சிஷ்யர்களின் மனம் தெளிவையடையும்படி உபதேசம் செய்யும் சமயத்தில் "உலகில் ஸாதுக்களுக்குப் பக்ஷபாத ஞானமே உண்டாகாது. விசேஷமாய்ச் சூக்ஷ்ம புத்தியுடையவர்களிடத்தில் அன்பு உண்டாவதும் இயற்கையேயாகும்" என்று பலவித கதைகளைச் சொல்லி உபதேசம் செய்த போதிலும் அச்சிஷ்யர்களில் சிலர் பக்ஷபாதமாயிருப்பதாகவே நினைத்தார்கள்.

ஒரு நாள் அச்சிஷ்யர்கள் தமது மனக் கருத்துக்குத் தக்கவாறு யோஜனை செய்து குருவின் அன்புக்கு முக்கிய பாத்திரமாகிய அம்மகாமதியைத் தமது கூட்டத்திலிருந்து நீக்கிவிடத் தீர்மானித்து அக்குருவின் குமாரியிடம் சென்று சாஸ்திரங்களின் கரையைக் கண்ட அம்மகாமதி குருவினிடம் விடைபெற்றுச் செல்லும்பொழுது தாம்பிரபர்ணி நதியில் உண்டான பதினாயிரம் நன் முத்துக்களைக் குரு தக்ஷிணையாகக் கேட்கும்படி துர்போதனை செய்தார்கள். அவ்விதமே அக்குருவின் குமாரியும் தனது பிதாவின் அருகில் சென்று பதினாயிரம் முத்துக்கள் கோத்த மாலையொன்றைத் தான் விரும்புவதாக அறிவித்தாள். அதைக் கேட்ட அக்குருவானவர் அவளுக்கு எவ்வித நன்மொழியைச் சொன்னபோதிலும் கேட்கவில்லை. உணவையும் உறக்கத்தையும் ஒழித்து ஏக்க முற்றாள்,

அத்தருணத்தில் அந்த மகாமதி என்னும் சிஷ்யனும் தனது குருவைப் பணிந்து தான் இல்லற தர்மத்தையடை வதற்கு விடையளிக்க வேண்டும் என்றும், எவ்வித குரு தக்ஷிணை வேண்டுமென்றும் வேண்டி நின்றான். அவ்வுரை யைக் கேட்ட குருவும் தனது குமாரியின் மனதைத் தேற்று வதற்காக பதினாயிரம் நன்முத்துக்களைக் குருதக்ஷிணையாகக் கேட்டார். குருவின் கட்டளையை ஏற்றுக்கொண்ட அம் மகாமதியும் விரைவாய் பாண்டிய நாட்டை யடைந்து தாம்பிரபர்ணி நதியின் ஸங்கமத்தையணுகி அங்கு வலை வீசும் செம்படவர்களையும், நவரத்தின வியாபாரிகளையும் கண்டு முத்து கிடைக்குமா என்று வினவினான். கோடி வராகன் கொடுத்தால் அம் முத்துமணிகள் கிடைக்கும் என்றார்கள்.

சில தினங்களுக்குள் கோடி வராஹனை எவ்விதம் சம்பாதிக்கலாம்? யாரிடத்தில் செல்வோம் என்று மனக் கவலையை யடைந்த மகாமதியானவன் அரசர்களிடத்தில் யாசனை செய்ய மனம் எழும்பாமல் சற்று நேரம் திகைத்து நின்றான்; பெருமூச்சு விட்டான்; கண்ணீர் சொரிந்தான்; இக் காரியத்தை நிறைவேற்றுவது அசாத்தியமென்றே கருதினான். இங்குமங்கும் சற்று நேரம் ஓடினான். முடிவில் தனது சாஸ்திர ஞானத்தினால் சகல பக்தர்களின் விருப்பங் களை நிறைவேற்றி வைக்கும் தியாகராஜரிடமே அத்திரவி யத்தை யாசிப்பேன் என்று நிர்ணயம் செய்துகொண்டு அந்தத் தாம்பிரபர்ணி நதியின் கரையில் ஒரு ஆச்ரமம் அமைத்துக்கொண்டு தியாகராஜரைத் தியானம் செய்ய லானான்.

மூன்று வருஷ காலம் வரையில் அம்மகாமதி அவ்விதம் ஏகாக்கிர மனதை யுடையவனாய் இருந்து வந்தபடியால் சிலமாதம் வரை அக்குருவும் அச்சிஷ்யர்களும் குரு தக்ஷிணையைச் சம்பாதிக்கச்சென்ற மகாமதியின் வரவை எதிர்பார்த்திருந்து வரக்காணாமையினால் நிராசையுடன்

தேச சஞ்சாரம் செய்ய புறப்பட்டுச் சென்றார்கள். அத்தருணத்தில் தியாகேசர் அம்மகாமதியின் தியானத்தைக் கண்டு களித்து தான் ஒரு செம்படவனாய் உருவமெடுத்துக் கொண்டு அவ்வித முத்துமாலையைக் கையில் ஏந்திக்கொண்டு அவனிடம் சென்று அவனைக் கூப்பிட்டுக் கண் விழிக்கச் செய்து, "ஓ தியானம் செய்யும் உத்தம! உமது தலையை யறுத்து எனக்கு அளிப்பாயாகில் நான் பதினாயிரம் நன்முத்துக்களால் விளங்குமிம்மாலையை உமக்கு அளிப்பேன்" என்றார். இதைக்கேட்ட அவன் அச்செம்படவனைப் பலவாறு புகழ்ந்து, "ஓ தீவரோத்தம! நான் செய்த புண்ணியத்தினால் நீ இவ்வாறு உரைத்துக்கொண்டு என் முன்பு தோன்றி நின்றாய்; இதுவே எனது பாக்கியம். நீ விரும்பியவாறு எனது தலையை நானே இப்பொழுதே கொய்து உனது கையில் அளிக்கிறேன். என்மீது கருணை செய்து இம்முத்துமாலையைமாத்திரம் நீ எனது குருவினிடம் சேர்க்க வேண்டும்; இதுவே உனது கடமை" என்று உரைத்து அக்குருவின் அடையாளங்களை மொழிந்து கொண்டே அருகிலிருந்த ஒரு தர்ப்பைப் புல்லினால் அம்மகாமதி தனது தலையை மந்திர சக்தியினால் அறுக்கலானான்.

குருவின் பக்தியினால் குரு தக்ஷிணையைப் பெறுவதற்காகத் தனது தலையை அறுக்கத்துணிந்த அம்மகாமதியின் பக்தியைக் கண்டு சந்தோஷமடைந்த தியாகேசர் அத்தருணத்தில் பஞ்சமுகத்துடன் அவனுக்குத் தரிசனமளித்து அம்முத்துமாலையையும் கொடுத்து மறைந்து விட்டார். தியாகேசருடைய கருணையினால் அறுக்கப்பட்ட தலை மறுபடியும் ஒட்டிக்கொண்டதைக் கண்ட அம்மகாமதி மிகக் களித்துத் தனது எதிரில் தோன்றியவர் தியாகேசரே என்றுஅறிந்து கொண்டு தரிசனம் செய்து ஜன்மப் பயனையடைந்து அம்முத்துமாலையுடன் குருவினிடம் திரும்பினான்.

உன்னுமவர்க் குண்மையனே போற்றி போற்றி
உலகுக் கொருவனே போற்றி போற்றி

சென்னிமிசை வெண்பிறையாய் போற்றி போற்றி
திருமூலட்டானனே போற்றி போற்றி

—அப்பர்சுவாமிகள்



## 161. சித்திரமெழுதிய லீலை.

சோழவரசனின் அரண்மனையில் பாலசந்திரிகை போல் வளர்ந்து வரும் பாலசந்திரிகை என்னும் ராஜகுமாரியானவள் பால்யவயது முதல் தனது தாய்மார்களாலும் தோழிகளாலும் தியாகராஜருடைய அற்புதலீலையைச் சொல்லக் கேட்டு ஒருநாள் தேவாலயத்துக்குச் சென்று அத்திவ்விய மூர்த்தியை நேரில் தர்சித்தாள்.

தியாகராஜரது திருமேனியின் அழகைக் கண்டு பணிந்து துதித்துப்போற்றி உமது பாதபக்தியானது என் மனதில் எப்பொழுதும் இருக்கவேண்டும் என்று வேண்டிக் கொண்டே அரண்மனை சென்றாள். அது முதல் தியாகராஜரையே இடைவிடாமல் நினைத்துக் கொண்டு இருந்தாள். எப்பொழுதும் தியாகராஜரைக் கண்களால் கண்டு களிப்பதற்காக அத்தியாகராஜாவின் திருமேனி போலவே ஒரு அழகிய சித்திரத்தைத் தனது வாஸஸ்தானத்தின் முன் சுவரில் எழுதக் கருதிய அந்த ராஜகுமாரியானவள் அவ்வித சித்திரத் தொழிலுக்குரிய வர்ணங்களையும், தூலிகைகளையும் தனது அருகில் வைத்துக்கொண்டு சுவரில் பாதம் முதல் மௌளி வரையில் நடுரேகையைக் கீறினாள். தியாகராஜாவின் பாதங்களை மனதில் தியானித்தாள்.

அந்த ராஜகுமாரியானவள் இவ்விதமாய்த் தியாகராஜாவின் பாதங்களை மனதில் தியானித்துக் கொண்டு அவரது வடிவழகையும் மனதில் சற்று நேரம் சிந்தித்து அவரது அங்கோபாங்கங்களையும் அவ்வவ்விடங்களுக்குரிய வர்ண விசேஷங்களினால் முதலில் குறியிட்டாள். அங்க

விபாகங்களைச் செய்து முடித்த பிறகு ரேகாசந்தான மிட்டாள். இவ்விதமாக ஸாமுத்திரிகா லக்ஷணக் குறை வில்லாமல் தக்கபடி எழுதினாள். சித்திர வேலைக்குரியவாறு சிறந்த வர்ணங்களையும் தீட்டினாள்.

இவ்விதமாய்ப் பாலசந்திரிகை என்னும் அந்த ராஜ குமாரி வர்ண விசேஷம் வைக்கும் பொழுதுதான் தேவா லயத்தில் கண்களால் கண்ட தியாகராஜாவின் திருமேனி போல் சித்திரத் திருமேனிக்கு சிற்சில அவயவங்களில் ஸம்பூரண சோபை அமையாமையைக் கண்டு மனம் வாடினாள். உயர்ந்த வர்ணங்களை யெடுத்து அவ்வவ்விடங் களில் வெகு கவனத்துடன் வைத்தாள். அப்பொழுதும் உண்மையான அழகு தோன்றவில்லை. அதனால் மனக் கவலையடைந்து உணவையும் உறக்கத்தையும் நீக்கினாள். தந்தையின் நன்மொழிகளையும் கேட்கவில்லை. சித்திரத் தையே மனதில் நினைத்துக் கொண்டு அச்சித்திரம் அழகாய் அமையாமையைப் பற்றிப் பெருமூச்சு விட்டு மெல்லிய இருகைகளையும் கூப்பிக் கொண்டு தியாகராஜ! இப் பேதையின் கண் களிக்கும்படி இச்சித்திரம் நன்கு அமையக் கூடாதா? என்று ஆறு மாதம் மனக் குறையுடனே சரீர இளைப்பையடைந்து எழுந்து உலாவவும் சக்தியற்றவளாய் ஒரு நாள் இரவில் அச்சித்திரத்தின் எதிரிலேயே உடம்பு மெலிந்து அயர்ந்து உறங்கினாள்.

ஒப்பற்ற பக்தியுடன் அந்த ராஜகுமாரியானவள் நெடு நாளாகத் தனது சித்திரத்துக்காகப்படும் துன்பத்தைக் கண்டு இளகிய மனமுடைய தியாகராஜர் அன்றிரவில் அவளது கனவில் தோன்றி ஓ ராஜபுத்திரியே! இவ்வளவு நாள் நீ எழுதி வந்த சித்திரத்தை இப்பொழுது பார் என்று உரைத்துத் தனது திருமேனியையும் காட்டி மறைந்தார். நடு இரவில் திடீரென்று கண் விழித்தெழுந்த ராஜகுமாரி யானவள் தனக்கு எதிரில் விளங்கும் அச்சித்திரமானது வெகு அழகாய் இருந்ததைக் கண்டு மனக் களிப்பையடை

ந்து ஆனந்தக் கண்ணீர் விட்டுத் தனது கனவில் உரைத்த வரும் தியாகராஜரே, இச்சித்திரத்தைக் கொஞ்சமேனும் தவறுமல் தனது திருமேனி வடிவழகைப் போலவே அவ்வளவு சிறப்பாய்ச் செய்தவரும் தியாகராஜராகவே இருக்க வேண்டுமென்று நிச்சயம் செய்து அன்பினுல் அச்சித்திரத்தை அடிக்கடிப் பார்த்து மகிழ்ச்சியையடைந்து தனது உயிர்த்தோழிகளிடம் உரைத்து மகிழ்ச்சியுடன் இருந்து வளரலாஞள்.



## 162. தனுர் வேதம் கற்பித்த லீலை.

காஷ்மீர தேச மகாராஜன் தனது பரிவாரங்களுடன் தென் திசையை நோக்கிச் சென்று காளஹஸ்தி, காஞ்சி, சோணசலம், சிதம்பரம் முதலான க்ஷேத்திரங்களையடைந்து அங்கு விளங்கும் ஈசனைத் தர்சித்துப் பரமானந்தத்துடன் காவிரியில் ஸ்நானம் செய்து புண்ணிய புரியையடைந்து அங்குள்ள தியாகராஜ மூர்த்தியையும் தர்சித்து அம்மண்டலச் சிறப்பையும் அந்நகரின் மேன்மையையும் அச்சோழவரசனின் ராஜாங்க மகிமையையும் தியாகேசனுடைய அற்புத மேனியையும் கண்டு மகிழ்ந்து வியப்படைந்தான்.

அந்த மகாராஜன் அவ்விதச் சிறப்புடன் விளங்கும் சோழவரசனின் குமாரனுக்குத் தனது புத்திரியை விவாகம் செய்து கொடுக்க விருப்பமுள்ளவனுய் இருக்கும் விஷயத்தை அறிந்து கொண்ட சோழவரசன் ஒத்துக் கொள்ள வில்லை. அதனுல் மனக் குறைவையடைந்த அந்தக் காஷ்மீர மகாராஜன் எவ்விதத்திலாவது அச்சோழனது குமாரனைத் தனது தேசத்துக்கு அழைத்துக்கொண்டு போக வேண்டுமென்று சமயத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். பதிஞறு வயதையுடையவனுயும், பாஸ்கரனென்னும் பெயரையுடையவனுயுமிருக்கும், அச்சோழவர

தனது குமாரன் ஒரு நாள் அக்காஷ்மீர மகாராஜனுடன் பேசிக்கொண்டிருக்கையில், அவனது குமாரியானவள் விசேஷ லாவண்ய முடையவளென்றும் கூர்மையான புத்தியுடையவளென்றும் அவனது பேச்சினாலறிந்து கொண்டு அம்மகாராஜனுடைய விருப்பத்துக்குத் தான் இணங்கி விட்டதாய் வாக்களித்து விட்டுத் தான் வட தேசங்களைப் பார்க்க விருப்ப முடையவனாய்ச் சோழ பூபாலனிடம் விடை பெற்றுக்கொண்டு அக்காஷ்மீர மகாராஜன் தனது தேசத்துக்குத் திரும்பும்போது தானும் அவனுடனே புறப்பட்டுச் செல்லலானான்.

இவ்விதமாய் அந்த பாஸ்கர மகாராஜன் தனது தந்தையின் உத்தரவைப் பெற்றுக்கொண்டு சிறந்த நவரத்தினாபரணங்களையும் பட்டாடைகளையும், சுவர்ணக் கட்டிகளையும் எடுத்துக்கொண்டு காஷ்மீர ராஜனுடன் சேர்ந்து அநேக தேசங்களைக் கடந்து அநேக பர்வதங்களையும் நதிகளையும், உத்தியான வனங்களையும் கண்டு அவைகளின் நாமதேயம் முதலான விஷயங்களைக் காஷ்மீர ராஜனால் சொல்லக்கேட்டு ஆனந்தமடைந்து விந்தியவனத்துக்கருகில் சென்று கொண்டிருக்கையில், அக்காட்டிலுள்ள சில கொள்ளைக்காரர்கள் கூட்டமாய்க் கூடி வில், வாள், தண்டு முதலிய ஆயுதங்களை எடுத்துக்கொண்டு விரைவாய் அவர்கள் எதிரில் தோன்றி அம்மகாராஜனை வளைத்துக் கொண்டு போர் நடத்தத் தொடங்கினார்கள். மற்றொரு பக்கத்தில் சோழ யுவராஜன் அதுவரையில் போரைப் பார்த்திராதபடியால் அதைக்கண்டு நடுங்கித் தயங்கும் பொழுது கொள்ளைக்காரர்களில் சிலர் அவனைச் சூழ்ந்து கொண்டு பிடித்துக் கொண்டுபோய் ஒரு கொடிய குகையில் அடைத்து அவனைச் சிறையிட்டார்கள்.

முகூர்த்த காலம் வரையில் அந்தக் காஷ்மீர மகாராஜன் அக்கொடிய கொள்ளைக்காரர்களுடன் கடும் போர் இட்டு அவர்களை விரட்டியடித்த பிறகு தனது உயிர்க்கு

நிகராயும் அருமை மருமகன் என்று பாவித்தும் வந்த யுவராஜனைக் காணுமல் திசைதோறும் தேடி அலைந்து மனவருத்தத்துடன் சிதறிய சில வேலைக்காரர்களை மாத்திரம் அழைத்துக்கொண்டு தனதிருப்பிடம் சேர்ந்தான். அவ்வரசன் அவ்விதம்செல்லும்பொழுது, "ஓ தியாகேச! உமது கருணையின் சிறப்பைப் பலவாறு பக்தர்கள் கூறுகிறார்களே; நான் உமது தரிசனத்தைப் பெறும்பொழுது நினைத்ததற்கு விரோதமாக இப்பொழுது முடிந்து விட்டதே; உமது ராஜ்ய யுவராஜனை நடுக்காட்டில் இழந்து விட்டேனே! என் செய்வேன்; தியாகராஜ! உமது பாதமே துணை" என்று இவ்வாறு பலவிதமாய்ப் புலம்பிக்கொண்டு தனது நகரம் சேருவதற்கு முன்னமே தயாநிதியாகிய தியாகராஜர் அவ்வரசனது புலம்பலுக்கிரங்கி அசரீரி வாக்கினுல் அக் காஷ்மீர ராஜனுடைய குமாரனுக்கு அறிவித்தார்.

"காஷ்மீர யுவராஜனே! கேளாய்; உனது தந்தை சில தினங்களுக்கு முன் நமது ஸன்னிதானத்தில் வேண்டிக் கொண்டபடியே சோழ யுவராஜன் உனது தங்கையை விவாகம் செய்துகொள்ளப் போகிருன். அந்த யுவராஜன் இப்பொழுது விந்திய வனத்தில் கொள்ளைக்காரர்களால் சிறையில் அடைக்கப்பட்டிருக்கிருன். க்ஷத்திரிய குலத்துக்குரிய தனுர்வேத மந்திரங்களை நான் அவனுக்கு இப்பொழுது கற்பித்து வருகிறேன். அந்த யுவராஜன் சில வருஷங்கள் செல்வதற்குள் தனுர்வேதப் பயிற்சியை முடித்துவிட்டு மிக்க பராக்கிரமத்தினுல் அவர்களைக் கொன்றுவிட்டு உனது நகரத்துக்குவந்து உனது தங்கையை விவாகம் செய்துகொள்ளப் போகிருன். இவ்விஷயத்தை சோழனுக்கு அறிவிப்பாய்" என்று சொன்னுர்.

திடீரென்று ஆகாயத்தில் தோன்றிய அசரீரியின் சந்தர்ப்பங்களை அறியாத அக்காஷ்மீர யுவராஜன் கலங்கி நிற்கையில் தனது தந்தையின் வரவை தூதர் மூலமாய்க்

கேள்வியுற்றுச் சிறப்புடன் எதிர் கொண்டழைத்தான். அம்மகாராஜனும் தனது மைந்தன் மூலமாய் விஷயத்தை யறிந்து இவ்விருத்தாந்தத்தைத் தனது மகளாகிய சித்திரலேகைக்கும் அறிவித்தான். சித்திரலேகை அது முதல் தென் திசையில் விளங்கும் தியாகராஜரையே தனது தெய்வமெனத் தொழுதுவந்து அந்த யுவராஜாவின் முக சந்திரனைப் பார்க்க வேண்டுமென்று மையல் கொண்டாள்.

## 163. ராஜ விவாகத்தை நடப்பித்த லீலை.

விந்தியமலையின்மீது விந்தியேச லிங்க ஸ்வரூபியாய் விளங்கும் தியாகராஜரே அச்சமயத்தில் அக்கொள்ளைக் காரர்களால் ஒரு குகையில் வலுவில் தள்ளப்பட்ட அச் சோழ யுவராஜனைக் காப்பதற்காகத் தனது கருணையை ஏவினார். அதனால் அவர்கள் அச்சமயத்தில் ஒரு குகையில் அந்த யுவராஜனைத் தள்ளி அடைத்துவிட்டு மற்ற தோழர் களிடம் சென்று அவர்களுடன் திரும்பி மீண்டும் வந்து பார்க்கும்பொழுது அக்குகையின் வாயானது பெரிய கற் பாறையினால் மூடப்பட்டிருப்பதைக் கண்டு அக்குகைக்குள் அந்த யுவராஜகுமாரன் உணவின்றி உயிர்நீங்கி விடுவானே யென்று சிந்தித்துப் பிறகு தெய்வச் செயலால் இக்குகை யின் வாய் மூடப்படின் நாம் என்செய்ய வல்லோமென்று மனந்துணிந்து வழக்கம்போல் வனத்தில் பிரவேசிப்பவர் களைக் கொள்ளையடித்துத் திரியலானார்கள்.

தியாகேசர் அருளால் அக்குகையின் வாய் மூடப்பட் டதையறியாத அந்த ராஜகுமாரன் நள்ளிருளில் நடுக்கமுற் றுப் பயந்து இருக்கையில் மற்றொரு பிலத்தின் வழியாய் அக்குகைக்குள் நுழைந்து பிரமத கணங்களுள் ஒருவராகிய சண்டர் ஈசனது கட்டளையை அந்த யுவராஜனுக்கு அறி

வித்து அவனை அக்குகையிலிருந்து வெளியில் அழைத்துக் கொண்டுபோய் விந்தியமலையில் லிங்கேசனது அருகில் கொண்டுவிட்டார். இரண்டு மூன்று முகூர்த்த காலத்துக்குள் தனக்கு நேரிட்ட பலவித துன்பங்களை எல்லாம் கண்ட அந்த யுவராஜன் தியாகராஜரையே நம்பினோனென்று தைரியத்தை யடைந்து அந்தச் சண்டருடன் விந்தியமலையின் சிகரத்தின்மீது ஏறி லிங்கமூர்த்தியைத் தரிசனம்செய்து அவ்விடத்திலேயே சிலகாலம் வசிக்கலானான்.

தயாநிதியாகிய தியாகராஜரும் தனது பக்தனாகிய அந்த சோழ யுவராஜனைக் காப்பாற்றி அவன் மூலமாய் அக்கொள்ளைக்காரர்களை அழிக்கக் கருதி ஒரு வேடன் போல் உருவமெடுத்துக்கொண்டு விந்தியமலையின் சிகரத்தையடைந்து அங்கு நிற்கும் அந்த யுவராஜனுக்குத் தோழனாய்ச் சென்று ருசியுள்ள கனிகளையளித்து அவனது பசியைப் போக்கிய பிறகு உனது ஜாதிக்குரிய தனுர்வேதத்தை நீ முற்றிலும் கற்றிருக்கிறாயா? என்று வினவினார். அவ் வேடனாக வந்த தியாகராஜர் அன்றுமுதல் அந்த யுவராஜனுக்குக் காலை வேளையில் தனுர்வேத மந்திரங்களையும், கைலாகவங்களையும், மந்திர பேதங்களையும் தினந்தோறும் கொஞ்சம் கொஞ்சமாய்க் கற்பித்துவந்தார்.

மனுஷ்ய சஞ்சாரமற்ற அந்த விந்திய மலையின் சிகரத்தில் தனக்கு உற்றதுணைவனாய்த் தினந்தோறும் பசியை நீக்கக் கனிகளையளித்தும் தனுர் வேதத்தின் மகாமந்திரங்களைக் கற்பித்துவரும் அவ்வேடனது வல்லமையையும் சிற்சில நற்குறிகளையும் கண்டு இவர் பரமேசனாகவே இருக்க வேண்டுமென்று நினைத்த அந்த யுவராஜன் வெகு அருமையுடன் ஐந்து வருஷ காலத்துக்குள் சஸ்திர வேதத்தில் தேர்ச்சியையடைந்து களித்து இருக்கையில் ஒரு நாள் அவ்வேடனாகிய தியாகேசர் அக்கொள்ளைக்காரர்களின் கூட்டத்தையடைந்து அவர்களைக் கொல்லக் கருதி அவர்

களுக்குப் பற்பல விதமாகக் கோபத்தை யுண்டுபண்ணி விட்டு மறைந்தார்.

ஆயுள் காலம் முடிந்தபடியால் அவர்களெல்லோரும் அவ்வித காகப்பேச்சைக் கேட்டுக்கொண்டு கூட்டமாய் ஒன்று சேர்ந்து வில், வாள் முதலான ஆயுதங்களைக் கையில் தூக்கிக்கொண்டு அவ்விந்தியமலையின் சிகரத்தில் விளங்கும் ஈசனது திவ்விய ஸ்தானத்தையும் அந்தச் சோழ யுவராஜ னையும் அழிக்கக் கருதி அம்மலையின் அடிவாரத்தைச் சூழ்ந் கொண்டு கடும்போர் செய்தார்கள். வேடனுருவம் கொண்ட தியாகராஜரால் அன்புடன் கற்பிக்கப்பட்ட தனுர் மந்திரங்களையறிந்த அந்தச் சோழ யுவராஜன் அத் தருணத்தில் பாசுபதாஸ்திர மந்திரத்தை கையிலேந்திய தனுசில் ஆவாகித்து அவர்களின்மீது பிரயோகித்தான். பகைவரை யொழிக்கவல்ல அக்கொடிய அஸ்திரத்தினல் அப்பாவிகள் அனைவரும் மாண்டனர்.

மலையின் சிகரத்தில் நின்று வில்லை வளைத்து வாளி எய்யும் அந்த யுவராஜனை எதிர்க்க முடியாமல் சக்தியற்றுப் பயந்த சில அரசர்கள் குகைகளில் ஒளிந்துகொண்டு உயி ரைக் காப்பாற்றிக் கொண்டனர். இவ்விதமாய் அந்த யுவராஜன் அக்கொள்ளைக்காரர்களை அழித்துவிட்டுக் காஷ் மீர அரசனின் புத்திரியின் இலாவண்யத்தினல் இழுக்கப் பட்ட மனமுடையவனாய் விந்திய லிங்க மூர்த்தியைப் பணிந்து விடைபெற்றுக்கொண்டு காஷ்மீர தேசத்தை யடைந்தான். அந்தச் சோழ யுவராஜனைக் கண்டு மிகவும் சந்தோஷம் அடைந்த காஷ்மீர ராஜன் அவனுக்கும் தனது புத்திரிக்கும் விவாகத்தை நடத்திவைக்க ஏற்பாடு செய்து விட்டுத் தியாகேசரையே முக்கிய தெய்வமென்று நினைத்து அவ்வித விவாக விஷயத்தில் சோழவரசனின் சம்மதத்தை அடைவதற்காகத் தூதரை அனுப்பி அவர்கள் வரவை எதிர்பார்த்துக்கொண்டிருந்தான்.

அந்தக் காஷ்மீர மகாராஜனால் அனுப்பப்பட்ட தூதர்கள் கொஞ்ச தூரம் செல்வதற்கு முன்னமே அசரீரியினால் கேள்விப்பட்டுச் சோழவரசன் குமாரனுடைய விவாகத்துக்குரிய வஸ்துக்களை யெல்லாம் எடுத்துக்கொண்டு அநேக மகரிஷிகளையும், வேதியர்களையும், குருவையும், மந்திரிமார்களையும் அழைத்துக்கொண்டு வருகையில் தூதர்களால் அறிவிக்கப்பட்ட வழியை நோக்கி விரைவாகக் காஷ்மீர தேசத்தையடைந்து அவ்வரசனால் முறைப்படி உபசரிக்கப்பட்டவனாய் மகிழ்ந்து, சுப முகூர்த்தத்தில் விவாகத்தை முறைப்படி நிறைவேற்றி வைத்தான். அவ்விவாகமானது எவ்வித இடையூறுமின்றி நிறைவேறிய பிறகு அவ்விரண்டு பூபாலர்களும் ஸகல சராசரங்களுக்கும் காவலனாகிய தியாகராஜரருளினாலல்லவா இவ்வித சம்பந்தம் நேரிட்டது. வரனுக்கும் அரிய தனுர் வேதப்பயிற்சியும் உண்டாயிற்று. வடக்கிலிருந்து தெற்கில் செல்லும் வழியானது சோரர்களின்றி விளங்குகிறது என்று பலவிதமாய்த் தியாகேசரைப் புகழ்ந்து சோழவரசன் சில நாள் வரையில் அங்கு இருந்து தனது குலவிருந்துக்காக அச்சோழன் தனது மைந்தனையும், மருமகளையும் அழைத்துக்கொண்டு வந்து புண்ணிய புரியை யடைந்து தியாகராஜரருளால் வெகுநாள் சிறப் பெய்தி விளங்கினான். அத்தம்பதிகளும் தியாகராஜாவின் கருணையினால் வெண்குடைக்கீழ் அமர்ந்திருந்து மேன்மையுடன் விளங்கினார்கள்.



## 164. தீயிற் குதித்த குருவைத் தேற்றிய லீலை.

பிருஹஸ்பதியே திருவாரூரில் ஈசான குருவென்னும் அந்தணராய்ப் பிறந்தார். அவர் அக்ஷராப்பியாஸ காலத்திலேயே தன் அறிவில் குலகுருவை மீறுவார்போல் விளங்கினார். தக்கவயதில் பற்பல கலைகளிலும் தேர்ச்சியடைந்த

அம்மறையோன் இல்லறவாழ்க்கையில் விருப்பங்கொள்ள வில்லை. இளமைப் பருவத்துடனே ஈசபக்தியும் அவருக்கு வளர்ந்து வருவதைக்கண்ட நகரத்தோர்கள் அவரை ஈசான குருவென்றழைக்கலாயினர். அவர் ஈசனைத்தவிர மற்றபொருளெல்லாம் பொருளல்லவென்று நினைத்து விடியற்காலத்தில் தன் இதய கமலத்தில் பொற்கோயிலானை நினைத்துக்கொண்டே எழுந்திருப்பார். ஜபம் தபம் முதலிய நித்திய காரியங்களைச் செய்துமுடித்த பிறகும் ஈசகுணங்களையே சொல்லிக்கொண்டு, வீதிகளில் திரிவார். தயாநிதே! பசுபதே! தொண்டரைக்காக்கும் உனது கருணையை யான் எவ்வாறு கூறுவேனென்றுரைப்பார்.

இவ்வாறு சிவபக்தி மேலிடவே அவ்வேதியர் சில சமயங்களில் மனமுருகி ஆனந்தக்கண்ணீர் ததும்ப ஈசனது நாமத்தைச் சொல்லிக்கொண்டு காட்டில் நுழைந்து விடுவார். ஓ! உலகோர்களே! வாழ்நாட்களை ஏன் நீங்கள் வீணாகக் கழிக்கிறீர்கள்? ஈசனை வணங்கிக் கொடிய பாபத்தை யொழித்துத்தூய மனதுடன் ஈசனது குணங்களைப்புகழலாகாதா என்பார். இவ்விதமாய்த் தியாகேசரைப் பலவாறு புகழ்ந்து பூஜித்து வருகையில் ஒரு நாள் அவ் வந்தணர் அந்திநேரத்தில் அருகிலுள்ள ஒரு காட்டில் பிரவேசித்தார். சற்று நேரத்திற்குள் இருள் மூடி விட்டதால் அவ்விடமிருந்து நகரத்துக்கு வரும் வழி அவருக்குப் புலப்படவேயில்லை. அன்றிரவில் அக்காட்டின் கண்ணே உலாவிக் கொண்டும் ஈசனது குணங்களைப் புகழ்ந்து கொண்டும் பயமற்றவராய் இருந்து இரவைக்கழித்தார்.

மறுநாள் காலையில் கதிரவன் உதித்தவுடனே ஈசான குருவும் அக்காட்டிலே ஒரு பர்ணசாலையை அமைத்துக் கொண்டு யோகத்திலும் தியானத்திலும் ஆனந்தமடைந்து நாட்களைக் கழித்துக்கொண்டிருந்தார். அவரது பக்தி விசேஷத்தைக்கண்டு ஆச்சரியமடைந்த பெரியோர்கள் நாளடைவில் அவருக்குச் சிஷ்யராக ஆனார்கள்.

தன்னைச் சரணமாகப்பற்றிய அவர்களுக்கு ஈசான குருவானவர் சைவாகமத்தின் ஸாரத்தையும் க்ஷேத்திரங்களின் மகிமையையும் தீர்த்தங்களின் சிறப்பையும் ஈசனுடைய திவ்யகுணங்களையும் தினந்தோறும் உபதேசித்து வந்தார். அவர்களும் அக்குருவுக்குப் பற்பல உபசாரங்களைச் செய்து வந்தனர்.

ஒரு நாள் தியானம் முடிந்த பிறகு ஈசான குரு தமது சிஷ்யர்களை அருகில் வரவழைத்து "ஓ புண்ணிய சீலர்களே! இன்று நான் யோகம் செய்யும் பொழுது ஈசனுடைய கருணையால் என் மனதில் மற்றும் சில அற்புத குணங்கள் தோன்றின. அவைகளைச் சொல்லுகிறேன்; நீங்களும் அசைவற்ற மனதுடன் அதை எழுதுவீராகில் உங்களுக்கும பேராநந்தமும் முடிவில் ஸாயுஜ்யமும் உண்டாகும்" என்று சொன்னார். அவர்களில் சிலர் மனக்களிப்புடன் விரைவாகச்சென்று சரளம் முதலிய சில மரங்களின் பட்டைகளை உரித்து எழுதுவதற்குத் தகுந்தபடி குருவின் முன்னிலையில் வைத்து விட்டு அப்பட்டைகளில் எவ்வித சாயத்தைக் கொண்டு எழுதுவது? எப்படி எழுதுவது? என் செய்வோம்; ஒன்றும் தோன்றவில்லையே என்று அவர்கள் திகைத்து நிற்கும்பொழுது அவ்வீசான குருவும் தன் ஆஸனத்துக்கருகிலிருந்த ஒரு கூர்மையான முள்ளினால் தன் வலது தொடையைக் குத்தினார். அத்தொடையிலிருந்து வேகமாய் வெளியில் பெருகிவரும் உதிரத்தைக்கண்டு அம்முள்ளாலேயே அம்மரப்பட்டைகளில் ஈசனுடைய அற்புத குணங்களை எழுதத் தொடங்கினார். எல்லை கடந்த பக்தியினால் அவ்வீசான குரு தன் சரீரத்தின் உதிரத்தினால் ஈசனுடைய குணங்களை விசேஷமாய் எழுதும் தன்மையைக்கண்டு வானவர் வியப்பை யடைந்தனர். தியாகராஜரும் உவகையுடன் மகிழ்ந்தார். இரண்டு யாம காலத்துக்குள் இம்மாதிரி ஆயிரக்கணக்காய்ச் செய்யுட்களை எழுதிய குருவை அனைவரும் வணங்கிப் புகழ்ந்தனர். அப்பட்டைகளை முடியில்

தரித்துக்கொண்டு சிலர் ஆனந்தக் கூத்தாடினர். மற்றும் சில சிடர்கள் பல தடவை அவைகளைப் படித்து மன மூருகினர். பண்டை வினைகளால் ஸம்ஸாரக்கடலில் மூழ்கிக் கொண்டும் மூடர்களாயுமிருக்கும் நமக்கு இவ்வளவு தத்து வத்தை உரைத்த இவ்வாசிரியனுக்கு நாம் எவ்வித கைம்மாறு செய்வோம் என்று பலர் துதித்தனர். அந்தச் சிஷ்யர்கள் இப்படி பன்னிரண்டு வருஷம் வரையில் அக் குருவுக்குப் பணிவிடை செய்து மறையின் பொருளையும் அறிந்து கொண்ட பிறகு இவ்வித சைவஸித்தாந்தத்தையும் சிவபக்தியையும் உலகத்தில் நன்றாய் பரவச்செய்ய வேண்டு மென்று யோஜித்துக்கொண்டு சில சிஷ்யர்கள் விக்கிரம சோழன் ஸபையை யடைந்தார்கள்.

அவ்விடத்தில் அர்க்கியம் பாத்தியம் முதலியவைகளைப் பெற்றுக்கொண்டு அச்சிஷ்யர்கள் அம்மன்னனுக்குத் தமது குருவின் மஹிமையையும் அவருடைய உதிரத்தால் எழுதிய அப்பட்டைகளையும் காண்பித்து இவ்வுலகெங்கும் சிவ பக்தியைப் பரவச்செய்வது உம்முடைய கடமையாகும் என்று சொன்னார்கள்.

அத்தருணத்தில் அவ்வீசான குருவின் மனக்கருத்தை முற்றிலும் பரிக்ஷை செய்யக் கருதி தியாகராஜர் ஒரு பிரா மண உருவமெடுத்துக்கொண்டு அவ்வரசனுக்கு எதிரில் தோன்றி "ஓ! சோழவம்சதிலக! நீ இந்தச் சிஷ்யர்களின் பேச்சை நம்பாதே; இம்மரப்பட்டைகளில் எழுதப்பட்ட வைகளும் உண்மையான சிவபக்தியைச் சொல்லவில்லை; இவைகள் எல்லாம் உதிரத்தினால் எழுதப்பட்ட ஒரு மாயை" என்று இவ்விதமாய்ச் சொல்லிவிட்டு திடீரென்று அவ்விடத்திலேயே மறைந்து விட்டார். விக்கிரம சோழ மஹாராஜனும் கலங்கப்பட்ட மனமுடையவனாய் அச் சிஷ்யர்களின் வேண்டுகோளை ஒத்துக்கொள்ளாமல் அவர் களைப் பலவிதமாய் இகழ்ந்து துரத்தி விட்டான். மிகவும் மனவருத்தமடைந்த சிஷ்யரனைவரும் குருவின் பாதத்தில்

வந்து பணிந்து ஸபையில் நடந்தவைகளைச் சற்றேனும் ஒளிக்காமல் சொன்னார்கள். சிவபக்தர்களுக்கும் சிவபக்திக்கும் நேரிட்ட அவமானமொழிகளைக் கேட்டபொழுது குருவுக்கு அடங்காக் கோபமுண்டாயிற்று. சற்று நேரத்துக்குள் தமது யோக சக்தியால் அக்கோபத்தைத் தணித்துக் கொண்ட ஈசான குருவும் நாம் அளவற்ற பக்தியினால் சிஷ்யர்களின் நன்மைக்காக எழுதிய இந்தச்செய்யுட்களை உலகில் பரவச்செய்யாமல் அவமதித்த அவ்வரசனால் நமக்கு என்ன பயன்? இவ்வித சுலோகங்களினால் தான் இவ்வுலகோர்களுக்கு என்ன பயன்? இவைகளை இப்பொழுதே தியில் எரித்து விட்டு நானும் அந்த நெருப்பிலேயே குதிப்பேன் என்று சொல்லிக்கொண்டு தன் ஆச்சிரமத்தின் வடக்குத்திக்கில் ஒரு ஹோம குண்டத்தை ஏற்படுத்தி அதில் அக்னியை வளர்த்து அம்மரப்பட்டைகளை அந்த அக்னியில் ஹோமம் செய்து முடிவில் தன் சரீரத்தையும் எரிக்கத்துணிந்தார்.

காட்டில் ஈசானகுரு இவ்வாறு செய்து வருகையில் அந்த விக்ரம சோழனுக்குத் திடீரென்று வயிற்றுவலியுண்டாயிற்று. அச்வினி தேவர்களுக்கு நிகரான அரண்மனை வைத்தியர்கள் அம்மகாராஜனுடைய சரீரத்தைப் பலவாறு பரீக்ஷை செய்து மாமிசக் குற்றத்தினாலேயே இப்பிணி உண்டாயிற்று என்று சொன்னார்கள். அப்பொழுதே மந்திரிமார்கள் அங்குள்ள சமையற்காரர்களைக் கூப்பிட்டுப் பயமுறுத்தி விசாரணை செய்யும் பொழுது அவர்கள் "இது எங்களுடைய குற்றமல்ல; இப்பொழுது நாலைந்து தினங்களாய் வேடர்கள் நமது பாகசாலைக்குக் கெட்ட மாமிசத்தைக் கொடுத்து வருகிறார்கள்; அதனால் நேரிட்டதேயொழிய எங்களுடைய குற்றமல்ல; மன்னிக்கவேண்டும்" என்று அமைச்சரிடம் முறையிட்டனர். அரை நிமிஷத்திற்குள் தூதர் மூலமாய் அழைக்கப்பட்ட அவ்வேடர்கள் மந்திரிகளின் முன்பு பணிந்து சொன்னார்கள். "கேளீர்

மந்திரிகளே! எங்கள் குடிசைகளுக்கு அருகில் நெடுநாளாய் ஒரு முனிவர் பர்ணசாலை அமைத்துக் கொண்டு அதில் பல சிஷ்யர்களுக்கு [illegible] கதைகளை உரைத்து வருகிறார். அவர் [illegible] நாட்களாய் ஹோம குண்டத்தில் தீ வளர்த்து அதில் சில பட்டைகளை எரித்து வருகிறார். அப்பொழுது அப்பட்டைகளில் எழுதியிருக்கும் வசனங்களைப் பார்த்து அருகிலுள்ளவர்களனைவரும் கண்ணீர் விட்டுக் கதறுகின்றனர். மான்களும், புறாக்களும் பறவைகளும் தமது உணவை மறந்து அவர் முன்பு அசைவற்ற சரீரத்துடன் திகைத்து நிற்கின்றன. அப்படிப்பட்ட மான்களைக் கொன்று நாங்கள் அவைகளின் மாமிசத்தைக் கொடுத்து வருகிறோம். இவ்வித கொடிய மாமிசத்தைக் கொடுத்து மஹாராஜனுக்கு நோயையுண்டுபண்ணிய நாங்கள் கோர நரகில் புகுவோம். மதிக்குறைவால் நாங்கள் செய்த இக் குற்றத்தை மன்னிக்க வேணும். நீங்களே எங்கள் குடும்பங்களுக்குக் குலதெய்வம்; காப்பாற்ற வேண்டும்" என்று முறையிட்டார்கள்.

அவ்வமைச்சர்களும் வேடர் மொழிந்த வரலாற்றைக் கேட்டு ஆச்சரியத்துடன் அவர்களால் காண்பிக்கப்பட்ட வழியாய்ச்சென்று அவ்விசானகுருவின் பர்ணசாலையைக் கண்டார்கள். அத்தருணத்தில் பட்டைகளை யெல்லாம் ஆஹூதி செய்து விட்டுத் தனது கைகளைக் கூப்பிக்கொண்டும் கண்களை மூடிக்கொண்டும் மனதில் தியாகராஜருடைய பாதத்தை நினைத்துக்கொண்டும் அவ்வேதியர் தீயில் குதிக்க முயன்றபொழுது அம்மந்திரிமார்களும் அவர்களுடன் கூட வந்த விக்கிரம சோழனும், "ஓ முனிவரே! தாங்கள் தீயில் குதிக்க வேண்டாம்; குதிக்க வேண்டாம்; உமது தொண்டரான எங்கள் மீது கருணை செய்ய வேணும். எங்கள் குற்றத்தை மன்னிக்க வேண்டும்" என்றுரைத்துக் கொண்டே அவரருகில் சென்றார்கள். அச்சமயத்திலேயே தியாகேசரும் ஓர் அசரீரியினால் "ஓ குருதேவ! நீர் நம்மிடத்

தல் வைத்த பக்தியின் அளவை சோதிக்கும் பொருட்டே நான் ராஜஸபையில் ரத்தினாருபியாய் அரசன் மனதைக் கலைத்தேன். இப்பொழுது உமது பக்தியின் எல்லையை எல்லோரும் அறிந்து கொண்டார்கள். நீர் இன்னும் சில காலம் இவ்வுலகில் இரு[illegible] ஜன [illegible]ந்தைய தொண்டா[illegible]ற்று உமது பக்தியை [illegible]பிரகாசிக்கவிட்டுப் பிறகு என்னுடைய வைகுண்ட ப[illegible]தை அடையலாம்" என்று உரைத்தார். ஈசான[illegible] இவ்வித சம்பவங்களையெல்லாம் கேட்டு ஆனந்தமடைந்து அவ்வரசனுக்கும் தமது சிஷ்யர்களுக்கும் ஆசி கூறி உலகில் சிவபக்தியைப் பெருகச் செய்தார்.

## 165. தாயின் மஹிமையை வெளியிட்ட லீலை.

திருவாரூர் நகரில் ராஜநாத சோழ மஹாராஜன் ஸிம்மாஸனத்தில் வீற்றிருக்கையில், ஒரு நாள் ஜம்புநாதன் என்னும் வைச்யன் ஒருவன் அம்மன்னவனது ராஜ ஸபைக்கு வந்து முறைப்படி வணங்கி நின்றான். யுக்திசாரன் முதலான அமைச்சர்களால், விசாரிக்கப்பட்ட அவ்வைசியன் "பூபாலரத்தினமே! ஜலபிந்து மஹரிஷியின் கோத்திரத்தில் பிறந்த நானும் எனது தகப்பன் முதலான ஏழு பாட்டன்மார்களும் நித்திய தரித்திரர்களாகவே யிருந்து காலத்தைக் கழித்து வருகிறோம். நான் கொடிய பாவியே யினும் எனது தந்தையினாலாவது எனது முந்தைமார் களினாலாவது புண்ணியம் செய்யப்படவில்லையா? எங்கள் வம்சமானது எட்டுத்தலைமுறையாய்க் கொடிய தரித்திர முடையவர்களாகவே பிறந்திருக்கிறார்களே; இதற்கு என்ன காரணம்?

எனது தாயாதியாகிய பிரமநாதனென்னும் வைசிய னும் அவனது முந்தைமார்களும் தனிகர்களாகவே

வாழ்ந்து வருகிறார்களே; இதற்கு என்ன காரணம்? நான் அவனைப் பார்த்துப் பொறாமை கொண்டு இச்சபையில் சொல்ல முன்வரவில்லை. என்னிடத்தில் பாபங்களிருந் தாலும் அதை நீக்கிக் கொள்வதற்காகவே இவ்வாறு வினவு கிறேன். ஒரே மஹரிஷியின் கோத்திரத்திலேயே பிறந்த வர்களில் சிலருக்கு நெடுநாள் செல்வமும், சிலருக்கு நெடு நாள் வறுமையும் தொடர்ந்து வருகிறதே; இதற்கு ஆதி காரணத்தை அறிய விரும்புகிறேன்" என்று கூறி வணக்க மாய்ப் பணிந்து நின்றான்.

அவ்வைசியன் இவ்விதமாய் விளம்புவதைச் செவியி னுல் கொண்ட அமைச்சரும் சோழனும் இதற்கு ஆதி காரணத்தை நம்மால் கண்டறிய முடியாது. ஸர்வசக்த ஞகிய தியாகராஜரைப் பணிந்து அறிந்து கொள்ளவேண்டு மென்று நிர்ணயம் செய்து அன்று மாலை நேரத்தில் எல்லோ ரும் தியாகராஜாவின் ஸன்னிதானத்தை யடைந்து பணிந்து துதி செய்து நிற்கையில் தயாநிதியாகிய தியாகே சர் அத்தொண்டர்களின் வேண்டுகோளுக்கிரங்கி ஆகாய வாணியினுல் அவ்வைசியனது வறுமைக்கு மூலகாரணத்தை மொழிந்தார்.

"கேளிர் தொண்டர்களே! இவ்வைசியனுடைய தாயாதியாகிய பிரமநாதனுடைய ஏழாவது பாட்டியான வள் பாலப்பிராயம் முதல் அவளது தந்தையின் உபதேசப் படி ஈசுவர பக்தியை யடைந்து தேவதைகளுக்கும் மஹரிஷி களுக்கும் வேதியர்களுக்கும் முக்காலங்களிலும் நமஸ்காரம் செய்து வருவாள். தேவாலயங்களுக்குச் சென்று மெழுகி கோலத்தினுல் படிகளையும் மண்டபங்களையும் அலங்கரிப் பாள். சிவபக்தரிடத்திலும், ஏழைகளிடத்திலும் விசேஷ மரியாதை காட்டிப் பூஜித்து வருவாள். மனதினுலும், வாக்கினுலும் சரீரத்தினுலும் எவ்வித கொடுமைகளையும் செய்யாத அம்மாது எனது முன்னிலையில் பல தடவை களில் இவ்வாறு பிரார்த்திப்பாள்.

"வேதங்களிறல் அறியக்கூடாத வல்லமையைப் படைத்த பரம்பொருளே! எனது வம்சம் எவ்வித இடரு மின்றி தழைத்தோங்கவேண்டும். எனது வம்சத்திலுதித்த வர்களுக்கு எக் காலத்திலும் பாப புத்தி உண்டாகக் கூடாது. எனது வம்சத்திலுதித்தவர்களுக்கு உமது பாத பக்தியும் சிறந்த நற்குணங்களும் உண்டாகவேண்டும். இவ் விதம் அருள்புரிவாய்" என்று என்னைப் பல தடவைகளில் வேண்டிக் கொண்டபடியால், அவரவர்களுடைய கர்மங் களுக்குத் தக்க பலனை யளிக்கின்ற நான் அவ்வாறே அவளது வம்சத்தில் உதித்தவர்களுக்கு அருள் புரிந்தேன். அநேக நற்குணங்களுக்கு இருப்பிடமாகிய அம்மாது ஏழு ஜன்மங்களுக்கு முன் செய்த நற்செய்கையினால் அவளது வம்சத்தில் உதித்த இவனது தாயாதிகள் சிறப்புடன் வாழ் கிறார்கள். இவ் வைசியனுடைய முன்னோர்கள் புண்ணிய காரியங்களைச் செய்யாதபடியினலே இவனுக்கு வம்ச வறுமை நேரிட்டிருக்கிறது.

ஆகையால் ஜீவராசிகளுள் சிறந்த மானிட ஜன்மத் தைப் பெற்றவர்களெல்லோரும் எச் சாதியினராயினும் தமது குல தர்மங்களைக் கைவிடாமல் நற்செய்கை செய்து வருவாராகில் அவரவர்களுடைய காரியங்களுக்கேற்ற வண்ணமாய் பயனுண்டாகும். ஆதலால் குழந்தை பிறப்ப தற்கு மூல காரணமாகிய மாதர்கள் மனதிலும் வாயிலும் சரீரத்திலும் சுத்தியை யுடையவர்களாய்த் தீங்கை மனதில் எண்ணுமல் நல்விஷயத்தையே மனதினல் சிந்தித்துக் கொண்டு, தெய்வ பக்தி, குரு பக்தி, பதி பக்தி முதலிய ஸதாசாரங்களை யுடையவர்களாய் நடந்து வருவாராயின் அம் மாதர்களின் குலமானது மிகவும் சிறப்புடன் உலகில் விளங்கும். பதிவிரதா மாதர்களினலேயே ஜீவராசிகளுக்கு நன்மையுண்டாகும். நற்குணங்கள் நிறைந்த மாதர்கள் வாழுமிடத்தில் வருணனும் மழை பொழிவான்; துன்பமும் அணுகா" என்று தியாகராஜர் உரைத்ததைக்கேட்ட வரனைவரும் ஆனந்தமடைந்து தமதிருப்பிடமடைந்தனர்.

### 166. வேதியரின் சிராத்தத்தில் தோன்றிய லீலை

திருவானைக்கா க்ஷேத்திரத்தில் போதசர்மனென்னும் ...ர் ஒருவர் இருந்தார். அவர் குருவின் கடாக்ஷத்தி ...ல் சாஸ்திராப்யாஸங்களில் தேர்ச்சி யடைந்தது முதல் தியாகராஜாவின் பாதத்தையே எப்பொழுதும் நினைத்துக் கொண்டு, ஸம்ஸாரவலையில் சிக்கிக்கொண்டு அலைந்து திரி யும் மந்தமதிகளுக்கும், பாமரர்களுக்கும், பக்தியற்றவர் களுக்கும் அஞ்ஞானிகளுக்கும் சிறப்பையும் ஈசுவர பக்தி யையும் உண்டுபண்ணும் பொருட்டுத் தினந்தோறும் ஈசுவர மஹிமையைப் போற்றி உபந்யாஸம் செய்து வருவார்.

"ஸகல சராசரங்களுக்கும் நாதனாய்ப் புண்ணிய புரியில் விளங்கும் தியாகராஜர் தனது அற்புத சக்தியை ஏவுவாராகில் மேரு பர்வதமும் மந்தர பர்வதமும் ஒன்று சேர்ந்துவிடும். கடலும் வற்றிவிடும்; மூடனும் ஞானத்தை யடைவான். ஏழையும் குபேரனாய் விளங்குவான். இப்படிப் பட்ட அற்புத சக்தியானது தியாகராஜப் பரம்பொருளிடத் தில் தான் இயற்கையாய் விளங்குகின்றது. அப்படிப்பட்ட தியாகராஜருடைய பாதாரவிந்தங்களில் அசைவற்ற பக்தியை யடைந்தவர்கள் எல்லோரும் அவ்வண்ணமே அற்புத காரியங்களைச் செய்துமுடிக்க வல்லமையைப் பெற்றவர்கள். பரமேசுவர பக்தர்களுக்கு மேன்மையான உலகங்கள் எல்லாம் கிடைக்கும். பரமேச்வர பக்தரின் சிறப்பை எக்காலத்திலும் எவ்விடத்திலும் யாராலும் அழிக்க முடியாது. பரமேச்வர பக்தர்களுக்குப் பாபமே அணுகா" என்று இவ்விதம் போதசர்மன் என்னும் அந்தத் தீக்ஷிதர் ஈசுவர மஹிமையையும், ஈசுவர பக்தியை யடைந்த பக்தரின் மஹிமையையும் விசேஷமாகப் ...ந்தார்.

இவ்விதமாய் அந்தத் தீக்ஷிதரால் ஈச குணங்களைக் கேட்டவர்களில் சிலர் ஒரு பக்ஷத்தில்

யடைந்து ஈசுவர பக்தராயினர். சிலர் வம்சபரம்பரையாய்ப் பசுபதியின் பக்தியை யடையாமல் புறச்சமய கலகப் பேச்சுக்களைப் பேசிக்கொண்டிருந்த போதிலும் சில நாட்களாய் அத்திக்ஷிதரின் தத்துவோபதேசங்களைக் கேட்டு அநேக பெரியோர்கள் பரமேசருடைய ஸத்திய மதத்தில் புகவேண்டுமென்று நினைத்தார்கள். ஆகிலும் ஈசுவர பக்தர்களின் மஹிமைக்கு அளவு எவ்வளவு உண்டென்பதையும் அதைப் பரிக்ஷித்துப் பார்க்க வேண்டுமென்றும் நிர்ணயம் செய்து கொண்டு அதற்குரிய சமயத்தைத் தேடிக்கொண்டு இருந்தார்கள்.

அத்தருணத்தில் அந்தத்திக்ஷிதரின் பிதாவின் சிராத்த திதி நெருங்கி வந்தது. அதனால் அத்திக்ஷிதர் அத்திதியில் மூன்று பிராமணோத்தமர்களை அர்க்கிய வகைகளால் பூஜை செய்து அவர்களின் மீது தமது பித்ரு வர்க்கத்தை ஆவாஹனம் செய்து முறைப்படி சிராத்த காரியத்தை நிறைவேற்றுவதற்காக மூன்று வேதியர்களை அழைத்திருந்தார். அவர்களும் அந்தத் திதியில் அத்திக்ஷிதரின் வீட்டுக்கு வருவதாய் ஒப்புக்கொண்டிருந்தார்கள். இவ்விஷயத்தை அறிந்து கொண்ட சில துஷ்டர்கள் அந்தத் தீக்ஷிதரின் சிராத்த விஷயத்தைப் பரிசோதிக்க வேண்டுமென்று கருதி அம்மூன்று பிராமணோத்தமர்கள் வரும் வழியை யடைந்து அவர்களுக்கும் பயத்தை உண்டுபண்ணி அவர்கள் எவ்விதத்திலும் அந்தத் தீக்ஷிதரின் வீட்டை யணுகாதபடி செய்து விட்டார்கள். அவ்விஷயத்தை யறியாத அந்தத் தீக்ஷிதர் அவர்கள் தகுந்த சமயத்தில் வருவார்கள் என்று நம்பிக்கையை யடைந்து அக்காலத்துக்குரியவற்றைச் சேகரித்து வைத்தார். நடுப்பகல் ஸ்நானத்தையும் நிறைவேற்றி ஜபங்களையும் செய்தார்.

அப்பொழுதும் அவர்கள் வரவில்லை. பகலோன் நடுவானிலிருந்து மேற்குத் திசையை நோக்கிச் செல்லும் வரையில் எதிர்பார்த்திருந்தும் அவர்கள் வராமையைக் கண்டு

பரிதபித்துக் கண்ணீர் மல்க நின்று சற்று நேரம் இங்கும் அங்கும் ஓடி எதிர்பார்த்தார். அப்பொழுதும் அவர்கள் வாராமையினால் 'என் செய்வேன் ?' என்று மதிகலங்கினர். பித்ருக்களின் சாபம் நேர்டுமோ என்னும் பயத்தையடைந் தார். கடைசியாய் அந்தத் தீக்ஷிதர் ஒருவாறு மனதில் தைரியத்தை யடைந்து தியாகராஜாவின் பாதகமலங்களை மனதில் தியானித்துப் பீஜாக்ஷரங்களையும், பஞ்சாக்ஷரங் களையும் நூற்றெட்டுத்தடவை ஜபம் செய்து விட்டு ஈசனே கதி என்று நம்பி சிராத்தத்தை ஸாங்கமாய் நடத்த ஆரம் பித்தார். அத்தீக்ஷிதரின் மனச்சுத்தியையும் அங்கு நடந்த சம்பவங்களையும் அறிந்த தியாகேசர் அவரது பித்ரு சிராத் தத்தை ஸாங்கமாய் நிறைவேற்றி வைப்பதற்காக மூன்று பிராமணர்களின் உருவமெடுத்துக்கொண்டு அந்தத்துஷ்டர் கள் கண்டு வியப்படையும்படி விதி வழியாய் அத்தீக்ஷி தரின் வீட்டுக்குள் நுழைந்து அவரால் ஆவாஹிக்கப்பட்டுச் சிராத்தத்தைப் பூர்த்தி செய்து விட்டு மறைந்தார்.



## 167. வில்வத்தினால் நகரைக் காத்த லீலை.

சோழ சக்கரவர்த்தியின் குமாரியாகிய பாலசந் கையின் சுயம்வரம் புண்ணிய புரியில் நடப்பதாய் மண வோலையினாலழைக்கப்பட்ட பூபாலர்கள் சிறந்த ஆபரணங் களினால் அலங்கரிக்கப்பட்டவர்களாய்த் தமது பரிவாரங் களுடன் திருவாரூர் நகரை யடைந்தார்கள். அவ்விதமாய் வந்து கூடும் அரச குமாரர்கள் தக்கபடி மரியாதை செய்து வரவேற்கப்பட்டு மந்திரிகளால் காண்பிக்கப்பட்ட மாளிகைகளில் ஒவ்வொரு யுவராஜ குமாரரும் சுகமாய்ச் சந்தோஷத்துடன் வசித்திருந்து பால சந்திரிகையின் சுயம்வர முகூர்த்த சமயத்தை எதிர்பார்த்திருந்தார்கள்.

குழந்தைப் பருவம் முதல் தியாகராஜாவின் வடிவழகில் ஈடுபட்டு அவரது திருமேனியை எப்பொழுதும் பார்த்துக்கொண்டேயிருக்க வேண்டுமென்று கருதிய பால சந்திரிகையானவள் தனது இருப்பிடத்தில் எதிர்ச் சுவரில் ஒப்பற்ற பக்தியினால் தியாகராஜாவின் திருமேனிபோல் ஒரு சித்திரமெழுதி அச் சித்திரத்தைத் தினந்தோறும் முக் காலங்களிலும் பூஜித்து வந்து, ஈச! உமது அருளால் எனக்கு நற் குணங்களும், நற்சிறப்புமுள்ள யுவராஜன் கணவனாக அமையும்படி செய்வீரென்று கைகளைக் கூப்பிக் கொண்டு வேண்டிக் கொண்டபடியால், அந்த ராஜ குமாரியின் வேண்டுகோளுக் கிரங்கிய மனமுடைய தியாக ராஜர் அவளது சுயம்வர முகூர்த்தநாள் நெருங்குவதற்குச் சில தினங்களுக்கு முன்னமே ஒரு நாள் அவளது கனவில் தோன்றி, "ராஜகுமாரியே! நெடுநாள் நீ என்னிடத்தில் பக்தி செய்து சித்திரமெழுதி என்னை இடைவிடாது நினைத்து வந்ததைப்பற்றி நான் சந்தோஷ மடைகிறேன். நீ சுயம்வரத்தில் வங்கதேச யுவராஜனுக்கே மாலையிடுவாய். உங்களுடைய விவாகம் முடிந்த சில தினங்களுக்குள் சிற் சில துன்பங்கள் நேரிட்டபோதிலும் முடிவில் எனது அருளால் நன்மையே ஏற்படும்" என்றுரைத்துத் தனது அழகிய திருமேனியின் தரிசனத்தையும் காட்டி மறைந்தார்.

இவ்விதம் தியாகராஜரால் கனவில் ஏவப்பட்ட பால சந்திரிகையும் ஈசுவர பக்தியினால் மூன்று நாட்களை ஜபம் செய்தல் முதலியவைகளினால் கழித்துவிட்டுச் சுயம்வர முகூர்த்த தினத்தில் அருணோதய காலத்திலேயே மங்கள ஸ்நானம் செய்துவிட்டு பட்டாடை உடுத்திக்கொண்டு ஆபரணங்களினால் அலங்கரிக்கப்பட்டவளாய்ப் பல்லக்கில் ஏறிக்கொண்டு தேவாலயத்தை யடைந்து தியாகேசரை நமஸ்கரித்துத் திரும்பிவந்து ராஜகுலத்திலுள்ளவர்களையும் விருத்தர்களையும், தாய்மாரையும் வணங்கி அவர்களது ...யைப் பெற்றுக்கொண்டு அக் காலத்தில் செய்ய

வேண்டிய சுப காரியங்களை யெல்லாம் செய்து முடித்து விட்டுச் சுயம்வர மண்டபத்தில் வந்து தோன்றினாள். அதற்கு முன்னமே ஒவ்வொரு ராஜகுமாரர்களும் மங்கள ஸ்நானம் செய்து, கனகாபரணங்களினாலும், ரத்னாபரணங்களினாலும் முக்தாபரணங்களினாலும், பட்டாடைகளினாலும் அலங்கரிக்கப் பட்டவர்களாய் மிகவும் சிறப்பு வாய்ந்த சோழ சக்கரவர்த்தியின் குமாரியாகிய இந்தப் பாலசந்திரிகையை மணந்துகொள்வதற்குப் புண்ணியம் செய்தவன் யாரோ என்று எதிர்பார்த்துக்கொண்டு இருந்தார்கள்.

அவ்விதமாய் யுவராஜ குமாரர்கள் நிறைந்து விளங்கும் அந்தச் சுயம்வர மண்டபத்தில் பூர்ணசந்திரன் போல் விளங்கும் வங்கராஜ குமாரனாகிய நிருபசேகர யுவராஜனை யனுகிய பாலசந்திரிகை யானவள் அவனது கழுத்தில் சுயம்வர மாலையைப் போட்டாள். அதைக்கண்ட பாஞ்சால அரசன் முதலான சில துஷ்ட அரசர்கள் அவ்வித விவாகத்தைக்கண்டு பொறாமை கொண்டு சீக்கிரத்தில் அவர்களை அழித்து விடுவதாய் நிர்ணயம் செய்துகொண்டு விகார முள்ள முக முடையவர்களாய்த் தமது இருப்பிடம் சென்று யுத்தத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து வந்தார்கள். அந்த ராஜகுமாரியும் நிருபசேகரனும் சில காலம் திருவாரூரில் வசித்திருந்து பிறகு தந்தையிடம் விடைபெற்றுக் கொண்டு வங்க தேசத்தை யடைந்து சுகமாய் வாழ்ந்து வருகையில், பாஞ்சாலன் முதலான சில துஷ்ட அரசர்கள் அகாலத்தில் அகாரணமாய்த் தனது நகரைத் தகைந்து யுத்தம் செய்ய ஆரம்பித்ததைக் கண்டு பயந்த நிருபசேகரனைக் கண்டு பாலசந்திரிகையானவள் ஒரு முகூர்த்த காலம் வரையில் தியாகராஜாவின் பாதமலரைத் தியானம் செய்து "தியாகேச! உமது அருளால் உமது உரையால் ஒன்றுசேர்ந்து உமது பாதபக்தியையே முக்கிய துணையாகக் கொண்ட எங்களை இந்தத் துன்பத்திலிருந்து காப்பாற்று



*In memory of the late Sriman B. C. Avudaiappa Pillai Avl.*
*of Bikshandarkoil.*

வது உமது கடமை" என்று நம்பி வில்வ பத்திரங்களைக் கொண்டுவந்து தமது குலதெய்வமாகிய தியாகராஜரின் பாதத்தில் அர்ச்சனை செய்து அதில் ஒரு தளத்தைத் தனது சிரசிலும் தன் காவலனது சிரஸிலும் கவசம்போல் அணியச்செய்து மற்ற வில்வ தளங்களை நான்கு கோட்டை வாசல்களிலும் மதிள்சுவர்களிலும் அகழிலும் நகரைச்சுற்றி நான்கு திசைகளிலும் பூமியில் எங்கும் போட்டுவிட்டு அவர்கள் இருவரும் தியாகராஜரைத் தியானித்துக்கொண்டு சுகமாய் இருந்தார்கள். தியாகராஜர் அவ்வித வில்வ தளங்களின் சக்தியினால் அப்பகை மன்னர் செலுத்திய ஆயுதங்கள் எல்லாம் அந்நகரில் விழாமலும் அவ்வித வில்வ பத்திரங்களைத் தாண்டிச்செல்லுவதற்கு அவர்களை சக்தியில்லாதவர்களாகச் செய்தும் அந்நகரையும் அந்த ராஜ தம்பதிகளையும் காப்பாற்றினார்.

## 168. ஸ்வர்க்கம் புகச்செய்த லீலை.

வங்கதேசத்தரசனாகிய ராஜபட்டாரக மஹாராஜன் அது முதல் அந்தத் தியாகராஜ பாதாரவிந்தத்தில் பக்தியைச் செலுத்தி அவரை நேரில் கண்டுகளிக்க வேண்டுமென்று கருதித் தனது குமாரனாகிய நிருபசேகரனையும் சோழவரசனின் குமாரியாகிய பாலசந்திரிகையையும் சிம்மாசனத்தில் வீற்றிருக்கச்செய்து சில பரிஜனங்களுடன் அக்கிழவன் தென் திசையை நோக்கிப் புறப்பட்டு அங்கங்கு விளங்கும் லிங்கமூர்த்திகளைத் தரிசித்துக்கொண்டு சோழமண்டலத்துக்கு நாயகமணி போல் விளங்கும் திருவாரூர் நகரை யணுகிறான்.

அந்த வங்கராஜனது வருகையை முன்னமே அறிந்துகொண்ட சோழனும் மந்திரிமார்களும் அம்மூத்தோனை எதிர்கொண்டு பூர்ணகும்பம் முதலியவைகளால் முறைப்

படி வரவேற்று அரண்மனையில் விற்றிருக்கச்செய்து விடாய் ஆற்றினார்கள். வங்கதேசத்தில் தனது நகரத்தில் விவாஹ விஷயமாய் மனக்கலக்கத்தை யடைந்த பாஞ்சாலன் முதலிய சில துஷ்ட ராஜகுமாரர்கள் அகாலத்தில் ஒன்று சேர்ந்து வில் வளைத்துப் போர் புரிகையில் பால சந்திரிகையினால் போடப்பட்ட வில்வங்களின் மஹிமையினாலேயே தனது நகரம் காக்கப்பட்டதென்னும் அதிசயத்தைச் சொல்லக்கேட்டவரனைவரும் தியாகேசரைப் புகழ்ந்து துதித்தார்கள்.

மறுநாள் காலையில் அவ்வங்கதேசத்து மஹாராஜன் ராஜகுல புரோஹிதர் மூலமாய் சங்கல்பம் செய்து வைக்கப் பட்டவனாய்க் கமலாலயம் முதலிய புண்ணிய தீர்த்தங்களில் நீராடி பித்ரு தர்ப்பணம் முதலிய தான விசேஷங்களை எல்லாம் செய்து வேதியர்களையும் குலதருவையும் பணிந்து விட்டு ஆலயத்தையடைந்து பிரதக்ஷிணம் செய்து தியாக ராஜப் பிரபுவினுடைய திவ்விய திருமேனியைக் கண்டு களித்து கனகாபிஷேகம் செய்து வைத்து ஆனந்தமடைந்து அரண்மனைக்குத் திரும்பினான். அந்த க்ஷேத்திரத்திலுள்ள பூர்வ வேதியர்களாலும் மெய்ஞ்ஞானிகளாலும் அத்தியாக ராஜாவின் திவ்விய லீலா சரித்திரங்களின் மஹிமையைச் சொல்லக்கேட்டும், அந்த க்ஷேத்திர மஹிமையைக்கண்டும் பரவசனாகிய அந்த மஹாராஜன் தினந்தோறும் ஈசுவர தரிசனம் செய்து கொண்டு அங்கு சிலகாலம் வசித்திருந்தான்.

அத்தகைய சமயத்தில் ஒருநாள் அவ்வங்கராஜன் தேவாலயத்தில் விசேஷ பூஜை முடியும் தருணத்தில் தியாக ராஜாவின் எதிரில் நின்றுகொண்டு அஞ்சலியினால் விளங்கும் சென்னியையுடையவனாய்க்கொண்டு, "தியாகேச! பரம் பொருளே! இம்மானிட ஜன்மத்தை யடைந்த நான் பூர்வ கால புண்ணியவசத்தினால் உமது பாதாரவிந்த பக்தியை யடைந்து உமது திருமேனியையும் கண்களால் காணப்

பரமரு: லோகநாதனுகிய நீர் எனது மறு பிறவியைத் தடுக்கவேண்டும். இனி இவ்வுலகில் மறு பிறப்பையடைவே னுகில் கல்மன மையனா உமது பாத பக்தியற்ற வனுய் ஆவேன்; ஆதலால் அடியேனை இன்று உமது பாதத்தைத் தொழுதுகொண்டிருக்கும் தேவர்கள் நிறைந்து வாழும் தேவலோகத்தில் நான் உமது கீர்த்தியைச் சொல்லிக்கொண்டு அமர்ந்து வாழும்படி அருள் புரிவீர்" என்று துதி செய்துகொண்டிருந்தான்.

அச்சமயத்தில் அவ்வரசனது துதியைக் கண்டுருகிய மனமுடைய தியாகராஜர் உலகிலுள்ள பாமரர்களுக்கும் தனது சக்தி விளங்குமாறு செய்யக்கருதி சுவர்க்கத்தி லுள்ள மித்திரவருண தேவதைகளை ஏவினர். அவர் களும் ஈசனது கட்டளையைச் சிரமேற்கொண்டு இந்திரனல் அனுமதி கொடுக்கப்பட்டவர்களாய் விரைவாய் விமா னத்தைக் கொண்டுவந்து அவ்வங்க மகாராஜனை அதில் வீற்றிருக்கச் செய்தார்கள். பூலோகஜனங்கள் எல்லோ ரும் ஆச்சரியத்துடன் இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டிருக்கும்பொழுது அவ்வங்கராஜனை மனுஷ்ய சரீ ரத்துடன் ஏற்றுக்கொண்ட அத்தேவ விமானமானது அத் தியாகராஜாவின் ஆலயத்தை மூன்று பிரதக்ஷிணம் செய்து ஆகாயத்தில் கிளம்பி வெகுவேகமாய்த் தேவலோகத்தைக் குறித்துச்சென்றது. அத்தருணத்தில் தேவர்களும் மலர் மாரி பொழிந்தனர். துந்துபி வாத்தியங்கள் ஒலித்தன. இவைகளையெல்லாம் கண்டுகொண்டிருந்த சோழவரசன் முதலிய தொண்டர்கள் தமது சரீரமுடிவிலேயும் தமக்கும் இவ்வண்ணமே நற்கதியளிப்பாய் என்று வேண்டிக் கொண்டு தமது இருப்பிடம் சென்றனர். இவ்விதமாய் அவ்வங்கதேசத்தரசன் தியாகராஜரருளால் மனுஷ்ய சரீ ரத்துடனே விமானமேறி சுவர்க்கலோகம் சென்றுன் என் னும் விஷயத்தை அறிந்துகொண்ட தொண்டர்கள் அனை வரும் ஈசனுடைய கருணையைப் பலவாறு போற்றி மகிழ்ந்து வாழ்ந்தார்கள்.

## 169. அபசகுனம் கண்டவனுக்கு அபயமளித்த லீலை.

அர்த்தமன் என்னும் ஸத்குண சோழமகாராஜன் மனுநீதி வழுவாமல் பிரஜைகளைக் காத்துக்கொண்டு ஸிம்மாசனமேறி அரசாட்சி செய்துவருகையில், ஒருநாள் அவ்வரசன் காட்டில் வேட்டையாடச் சென்றபொழுது அவனது எதிர்முகமாய்க் காற்று வீசிற்று. வனத்தின் நடுவில் பெண்நரிகள் ஊளையிட்டு அழத்தொடங்கின. சிற்சில பக்ஷிகள் தங்கள் தலையைச் சாய்த்துக்கொண்டும், கண்களைப் பயங்கரமாய் விழித்துக்கொண்டும் தலைகீழாகத் தொங்கிக் கண்ணீர்விட்டழுதன. மானினங்களும், இளம்புற்களை மேய்வதை விட்டுவிட்டு அவ்வரசனது குதிரைக்கு முன் பிரதேசத்தில் நின்றுகொண்டு கண்ஜாடையினால் அபாயம் நெருங்கி வருகிறதென்பதைப் பற்பலவிதமாய் அறிவித்தன. கதிரவனும் ஒளியிழந்து மங்கலாய் விளங்கலானான். சில முகூர்த்தங்களில் பூகம்பமும் உண்டாயிற்று.

அந்தச் சோழவரசன் வேட்டையாடச் சென்ற வனத்தில் இவ்விதமாய்த் தோன்றிய பற்பல அபசகுனங்களைக் கண்டு தனது பிரகிருதிகளுக்கு எவ்வித துன்பம் நேரிடுமோ, தனது வம்சத்திற்கே துன்பம் நேரிடுமோ என்று நடுக்கமுற்று வாடிய முகமுடையவனாய் வேட்டையாட மனமில்லாமல் திருவாரூர் நகருக்கே திரும்பிவருகையில் அந்நகரிலுள்ளோர்கள் இவ்விதமான பற்பல அபசகுனத்தைக் கண்டு மிக்க கவலையுடையவர்களாய் வேட்டைக்குச் சென்ற மஹாராஜன் நிலைகுலையாமல் திரும்பிவருவானோவென்று எதிர்பார்த்திருந்தார்கள். அத்தருணத்தில் மஹாராஜனும் அந்தச் சோழமண்டலவாசிகளும் தாம்தாம் கண்ட அபசகுனத்துக்கு எவ்வித தீங்கு உண்டாகுமோ என்று பயந்து ஜீவராசிகளின் காவலனாகிய தியாகராஜாவின் கருணையே தம்மைக் காக்கவேண்டுமென்று நிர்ணயம் செய்துகொண்டு தியாகேசனுக்குத் திவ்விய அபிஷேகத்தை

யம் செய்துவைத்துப் பணித்து தமது இருப்பிடம் சென்றனர். வேதம்வல்ல வேதியர்களிற் சிலர் அபசகுனசாந்தி மந்திரங்களை ஓதினார்கள். சிலர் புராணங்களைப் படித்தார்கள். அம்மஹாராஜன் வேதியர்களுக்குப் பற்பல தானமும் செய்தான்.

அவ்வண்ணம் சோழமஹாராஜன் தமது நாட்டில் உண்டாகிய அபசகுனத் தோற்றத்தை ஒருவாறு தணிக்கக் கருதி பரமேசத்தியானத்துடன் அன்றிரவில் நித்திரை செய்கையில் அவனது கனவில் ஒரு விஷயம் புலப்பட்டது:— தனது தேசத்துக்குச் கிழக்கிலிருக்கும் மகோததி என்னும் கிழக்குக் கடலானது வருணராஜனது தூண்டுதலால் பெரிய அலைகளுடன் கரையை மீறி நாட்டில் நுழைந்து சகலஜீவராசிகளையும் அழித்து வரத்தொடங்கியது போலவும், அத்தருணத்திலேயே தியாகேசன் தனது கையிலேந்திய ஒரு படகடத்தினால் (தண்ணீரைத் தடுக்கும் ஒரு சிறு பலகை) அப்பெரிய வெள்ளத்தைத் தடுப்பதுபோலவும் கனவுகண்டு அதனால் பயமுற்ற மனமுடையவனாய் நடு இரவிலேயே கண்விழிப்பை யடைந்து அம்மஹாராஜன் தனது அரண்மனை வாசலில் வந்து பார்க்கும்பொழுது, அத்தேசவாசிகளும் அந்நகரவாசிகளும் "ஓ சோழ பூபதியே! இவ்வித ஆபத்காலத்தில் துயில்கொள்ளுதல் தகுமோ? கடலானது பொங்கிவந்து இவ்வுலகம் முழுவதையும் அழித்து வருகிறதே; ஜீவராசிகளுக்கு இது பிரளயகாலம்போல் தோன்றுகிறதே; என் செய்வோம்? எங்குச்செல்வோம்! எங்கும் வெள்ளம் சூழ்ந்துவிட்டதே." என்று அலறிப்புலம்புவதைக் கண்டான்.

கருணாநிதியே! தியாகேச! உமது பாதமே சரண்! என்று அம்மஹாராஜன் சிந்தித்துக்கொண்டிருக்கும் பொழுதே அந்நகரத்தின் மற்றொரு பக்கத்திலிருந்து சில பிராமணர்கள் கூட்டமாய்க் கூடி, "ஓ ஜனங்களே!

நீங்கள் எவ்வித துன்பத்துக்கும் பயப்படவேண்டாம்; நமது தேசத்தின்மீது பொங்கிச் சீறிவந்த கடல் வெள்ளமானது இப்பொழுது கொஞ்சம் கொஞ்சமாய்த் தணிந்து வருகிறது. வெள்ளத்தினால் இதுவரையில் மூழ்கியிருந்த சோலைகளும், வீடுகளும் வயல்களும் எவ்வித கெடுதலுமின்றி இப்பொழுது காணப்படுகின்றன. கையிலேந்திய ஒரு படகடத்தினால் ஒரு புருஷன் அக்கடல் வெள்ளத்தைத் தடுத்துவருகிற விந்தையைப் பாருங்கள். நமக்கு இனி பயமில்லை" என்று உரைத்துக்கொண்டே வருவதையுங் கண்ட சோழமஹாராஜனும் நகரவாசிகளும் ஒன்று சேர்ந்து ஆலோசனை செய்து வெள்ளத்தைக் தடுக்கும் புருஷன் தியாகராஜனாகவே யிருக்கவேண்டும் என்று நிர்ணயம்செய்து, இவ்விதமான பெருந்துன்ப காலத்திலும் தமது வேண்டுகோளின்றியே பரமேசன் உலகிலுள்ள ஜீவராசிகளைப் காப்பாற்றிவரும் விஷயத்தைப் பற்றிப் பரமானந்தமடைந்து ஈசனைத் துதித்துக்கொண்டே அன்றிரவைக் கழித்தார்கள்.

கொஞ்சம் கொஞ்சமய் இரவு குறைவதுபோல் பொங்கிய கடலும் கொஞ்சம் கொஞ்சமாய்க் குறைந்து ஜனங்களின் பயமும் இருளும் அகன்றபொழுது கதிரவன் மெதுவாகக்கிழக்குத்திசையில் உதித்தான். கர்வமிழந்த வருணனும் ஒரு மானிடசரீரத்துடன் அப்புண்ணியபுரியையடைந்து திவ்விய தீர்த்தத்தினால் தேவவேதிகையில் விளங்கும் தியாகராஜ மூர்த்திக்குத் திவ்வியாபிஷேகம் செய்யும்படி ஒரு குடத்தை ஆலயத்தின் எதிரில் வைத்துவிட்டு மறைந்து சென்றான். அவ்வதிசயங்களை யெல்லாம் கண்ட ஜனங்கள் பரமானந்த மடைந்தார்கள்.

பற்றிநின்ற பாவங்கள் பாற்ற வேண்டில்
பரகதிக்குச் செல்வ தொரு பரிசு வேண்டில்
சுற்றிநின்ற சூழ்வினைகள் வீழ்க்க வேண்டில்
சொல்லுகேன் கேள் நெஞ்சே துஞ்சாவண்ணம்

உற்றவரும் உறுதுணையும் நீயே யென்றும்
உன்னை யல்லால் ஒரு தெய்வம் உள்கேன் என்றும்
புற்றரவக் கச்சார்த்த புனிதா என்றும்
பொழில் ஆரூரா என்றே போற்றா நில்லே

—அப்பர்சுவாமிகள்

## 170. பசுவைக் காப்பாற்றிய லீலை.

வேதப்பிரகாசன் என்னும் வேதியன் ஒருவன் ஒரு புண்ணிய காலத்தில் சோழவரசனால் தானஞ் செய்யப் பட்ட ஒரு கபிலைப் பசுவை ஓட்டிக்கொண்டு தனது கிராமத் துக்குச் சென்று கொண்டிருக்கையில், அவ்வேதியனுக்குப் பூர்வஜன்ம பாபத்தினால் ஒரு துர்ப்புத்தி உண்டாயிற்று.

மஹாராஜனிடமிருந்து தானமாகப் பெற்ற இவ் வுத்தமஜாதிப் பசுவை நாம் வைத்துக்கொண்டு காப்பாற்று வது கஷ்டமான காரியமாகும். ஆகையால் இப்பசுவை விற்று அதன் மூலமாய் வரும் திரவியத்தினால் சிலகாலம் கஷ்டமில்லாமல் குடும்பத்தை நடத்தலாம் என்று மனதில் சிந்தித்துக்கொண்டே செல்லுகையில் அவ்வேதியனது நடு வழியில் நான்காம் வருணத்தவன் எதிர்வந்து இப்பசுவை விலைக்களிக்க விருப்பமுண்டாவென்று வினவினான். அதைக் கேட்ட அவ்வேதியன் மகிழ்ச்சியடைந்து தான் ஆலோசனை செய்தபடியே அப்பசுவை விற்பனை செய்து, அதனால் கிடைத்த தனத்தை எடுத்துக்கொண்டு தமது இருப்பிடத் துக்குத் திரும்பிவந்தான்.

மகாராஜனிடமிருந்து தானமாகக் கொடுக்கப்பட்டு வேதியனை யடைந்த அப்பசுவானது இவ்விதம் ஆசையினால் நான்காம் வருணத்தவனுக்கு விக்கிரயம் செய்யப்படுகை யில் கண்ணீர் விட்டு அழத்தொடங்கியது. அதை அறிந்து கொள்ளாத அந்தச் சூத்திரன் அப்பசுவை ஓட்டிக்கொண்டு

கோர்ச தூரம் செல்லுகையில், வதம் செய்வதற்காகப் பசுக்களை விலைக்கு வாங்கி வரும் ஒரு துருஷ்கன் அப்பசுவின் சரீர அமைப்பைக்கண்டு மகிழ்ந்து இப்பசுவின் மாமிசம் மிகவும் ருசியாயிருக்குமென்று நினைத்து விலைக்குமேல் அதிகமாகவே தனத்தைக் கொடுத்து அப்பசுவைத் துருஷ்கன் பெற்றுக்கொண்டான். அப்பசுவை அத்துருஷ்கன் தன்னுடைய இருப்பிடத்திற்குக் கொண்டு போய் வதை வதைக்கக் கருதி வதைக்குமிடத்திற்கு வலுவில் இழுத்துக்கொண்டுபோய்க் கட்டும்பொழுது ஞானதிருஷ்டியினால் அறிந்து கொண்ட அப்பசுவானது புண்ணியபுரத்தில் வசித்த புண்ணியத்தினால் ஹாம்! ஹாம்! என்று கதறிக் கூப்பிட்டுத் தியாகேச! சரணம்! என்னைக் காப்பாற்றுவாய் என்று முறையிட்டது.

பக்தர் இடர்களைக் களைந்துவரும் தியாகராஜர் அத்தருணத்தில் காப்பாற்றக் கருதி அதற்கு ஆகாயத்தில் பறந்து செல்லும் வல்லமையைக் கொடுக்கவே அப்பசு அவ்வாறே ஆகாயத்தில் பறந்து சென்று தியாகராஜாவின் தேவாலயக் கொட்டத்திலிருக்கும் தனது காளைக் கன்றின் அருகில் வந்து நின்று க்ஷணகாலம் மெய்ம்மறந்திருந்து பிறகு அக்கோயிலை மூன்று தடவை பிரதக்ஷிணம் செய்து பலிபீடத்துக்கெதிரில் பணிந்து அத்தேவாலயத் தொழுவத்தின் கட்டுத்தறியில் நின்று விளங்கிற்று.

இவ்விதமாய் அப்பசுவானது திருக்கோயிலை வலம் செய்து தொழுவத்தில் நிலைபெற்று நிற்கும் விஷயத்தைத் தேவாலய வேலைக்காரர்களால் அறிந்து கொண்ட சோழன் அப்பசுவின் வரலாற்றை அறிய விரும்புகையில் அப்பசுவை விற்பனை செய்து செல்வத்தைப் பெற்றுக்கொண்டு வீட்டையடைந்த வேதியன் தனது குமாரன் அகாலத்தில் இறக்கக் கண்டான் என்றும், வேதியனிடமிருந்து பசுவை வாங்கித் துருஷ்கனுக்கு விற்பனை செய்த சூத்திரனது சரீரத்தில்

பெருவியாதி உண்டாயிற்றென்றும், அப்பசுவை வதைக்கத் துணிந்த குருக்கள் சுர வெப்பத்தை யடைந்து மாண்டான் என்றும் இனி இவ்விதமாய் அந்தணர்கள் தானம் வாங்கிய பொருளை அனுபவிக்காமல் விற்பனை செய்யலாகாது. செய்வார்களாயின் பற்பல இடர்களையடைவார்களென்றும், தானஞ் செய்வோர்களும் பாத்திர மேன்மையை யறிந்தே தானம் செய்யவேண்டுமென்றும் தன்னைச் சரணைப்பற்றிய அக்கபிலைப் பசுவைக் கருணையினால் தான் வதையிலிருந்து காப்பாற்றியதாயும் தியாகேசர் சொல்லக்கேட்டு அம்மகாராஜன் முதலியவர்கள் ஆச்சரியமடைந்து அவ்வேதியன் புத்திரன் இவர்களுக்கும் மற்றும் சகல தொண்டர்களுக்கும் இவ்வித அற்புதச் செய்தியை அறிவித்துத் தியாகராஜரைத் தொழுது துதித்துத் தானஞ் செய்வதின் பயனையும், தானம் வாங்குபவரின் குணங்களையும் நெடுநாள் வரையில் உலகில் பரவச் செய்து சிறப்புடன் வாழ்ந்திருந்தான்.



## 171. பயித்தியத்தை நீக்கிய லீலை.

திருவாரூர் நகரை மித்திரபாலன் என்னும் சோழ மஹாராஜன் அரசுபுரிகையில் அத்திருவாரூரில் சுருதசர்மன் என்னும் வேதியர் ஒருவர் இருந்தார். அவ்வேதியருக்குத் தியாகராஜரருளால் ஒரு மகவு உண்டாயிற்று. அவ்வந்தணர் அக்குழந்தையை வெகு அன்புடன் வளர்த்துவருகையில் அக்குமாரனுக்குச் செய்யவேண்டிய ஜாதகர்மம், நாமகரணம் முதலான சகல வைதிக காரியங்களும் கல்பஸூத்திர முறைப்படி நடத்தப்பட்டு வந்தன. அவ்விதம் இருந்தபோதிலும் சிவசர்மன் என்னும் அக்குமாரனுக்குப் பாலியம் முதல் அஞ்ஞானமே வளர ஆரம்பித்தது. அதைக் கண்டு மனங்கலங்கிய தந்தையினால் நல்வழியில் செலுத்

தப்பட்டும் அவனது புத்தியானது கெட்டவழிகளிலும் ந்தொழிலிலும் செல்ல ஆரம்பித்தது. அத் தருணத் அச்சிவசர்மன் தக்க வயதையடைந்தவுடனே மற் வேதியனது மகளை விவாஹம் செய்து கொண்டான். லம் செல்வதற்குள் அவனுக்கு அநேக குழந்தைகள் பிறந்த அதனால் அச்சிவசர்மனுக்கு அஞ்ஞானத்துடன் கவலையும் சேர்ந்து விட்டபடியாலும் அவன் பால்ய வயதில் வேதமோதுதல் முதலிய கல்விப் பயிற்சியை டையாதபடியாலும் அவனது அஞ்ஞானம் அதிகமாய் வளருகப்பொழுது கிழத்தனத்தை யடைந்திருக்கும் தனது ...ப்பனையும், புத்திரர், புத்திரி முதலிய பாலர்களையும் காப்பாற்றுவதற்காக அச்சிவசர்மன் பற்பல கெட்ட தானங்களை வாங்கினான்.

அப்படிக் கொடிய தானத்தை வாங்கியபடியால் அவனுக்குக் கொடிய பாபமுண்டாயிற்று. ஜபம், ஹோமம் தியானம் முதலியவைகளால் அவ்வித பாபங்களை அவன் அவ்வப்பொழுது நீக்கிக்கொள்ளாதபடியால் அப்பாபத் திரள்கள் அவனது புத்தியைக் கவர்ந்து கொண்டன. அதனால் இடைவிடாமல் பாபத் தொழிலைச் செய்யத் துணிந்த அச்சிவசர்மனானவன் வைதிக கர்மானுஷ்டானங் களைத் தற்செயலாயும் செய்யவில்லை. செய்யக்கூடாத காரியங்களை விடவுமில்லை. இரவிலும் பகலிலும் பொய் சொல்லுதல், ஸத்கர்மங்களை விடுதல், துஷ்கர்மங்களைச் செய்தல், துஷ்டருடன் சேர்தல் முதலான கணக்கற்ற பாபத் தொழில்களைச் செய்துகொண்டு மனதிலும் அனு தாபத்தை யடையாமல் பயமற்றவனாய் தனத்திலேயே விருப்பத்தை வைத்து அலைந்து திரியலானான்.

இவ்விதம் அவ்வந்தணன் சில வருஷங்களுக்குள் அள வற்ற பாபராசிகளைச் செய்து வரவே அதனடியாய் அவ னுக்குப் பயித்தியம் உண்டாயிற்று. குடும்பத்தைக்

காப்பாற்றுவதற்காக விசேஷமாய்ப் பொருளில் ஆசை கொண்ட அவ்வேதியன் சித்த சுவாதீனம் இழந்தமையால் மூப்பையடைந்த அவனது தந்தையையும் அவனது புதல்வர்களையும் காப்பாற்றுவதற்கு ஒருவருமில்லை. அதனால் மன வருத்தத்தை யடைந்த அந்தச் சுருதசர்மன் என்னும் வேதியர் கோலூன்றிக்கொண்டு தனது பௌத்திரர்களால் காண்பிக்கப்பட்ட வழியாக மெதுவாக நடந்து சென்று தினந்தோறும் காலையில் கமலையில் ஸ்நானாதி நித்திய ஜபாதிகளை முடித்துத் தியாகேசரைப் பணிந்து விட்டு வீட்டுக்குத் திரும்பிவரலானார். அவ்வேதியர் குடும்பத்தைக் காப்பாற்றுவதற்காக அச்சோழனால் அனுப்பப்பட்ட பொருள்களை வைத்துக்கொண்டு நித்திய பூஜை முதலானவைகளைச் செய்து வந்தார்.

ஒரு நாள் வேதியர் மாலை நேரத்தில் தியாகராஜாவின் ஸன்னிதானத்தை யடைந்து பணிந்து துதிக்கையில் "தனது குமாரனுக்கு உண்டாயிருக்கும் பயித்தியத்தையும் பாபத்தையும் போக்குதல் உமது கடமை" என்று தியாகராஜரைக் குறித்துப் பிரார்த்தனை செய்தார். அச்சுருதசர்மாவின் வேண்டுகோளைச் செவியினால் அங்கீகரித்த புண்ணிய புராதனாகிய தியாகேசர் மறுநாள் விடியற்காலத்தில் பயித்தியக்காரனாய் வீதிகளில் ஓடித்திரிந்து பிறர் ஏசநிற்கும் அந்தச் சிவசர்மாவின் மீது தனது திவ்விய கருணையை ஏவினார்.

அதனால் அவ்வேதியன் முதலில் கொஞ்சம் நற்புத்தியை யடைந்து கமலையில் ஸ்நானாடிக்கொண்டிருக்கும் அந்தணர்களைக் கண்டு தானும் ஸ்நானம் செய்வது நலமென்று நினைத்து அவ்வண்ணமே ஸ்நானம் செய்தான். அப்புண்ணிய தீர்த்தத்தில் ஸ்நானம் செய்த மஹிமையினால் அவனது புத்தி தெளிவை யடைந்தது. தியாகராஜப்பரம் பொருளின் அருள் பெற்றமையால் அவ்வேதியனது மனதில் அப்பொழுது சிறந்த ஞானமுண்டாயிற்று. பூர்வ

தினம் வரையில் பயித்தியக்காரனாய் வீதிகளில் அலைந்து திரிந்து வந்த அந்தணன் அன்று உதய நேரத்தில் இவ்விதமாய் ஈசுவர பக்தியை யடைந்து முனிச்ரேஷ்டர் போல் நிலை பெற்ற மனதுடன் ஜபம் செய்வதையும் அனுஷ்டானம் செய்வதையும் கண்டு எல்லோரும் வியப்படைந்து அவ் வேதியன் மீது தியாகேசர் கருணை விழுந்திருக்க வேண்டு மென்று நினைத்தார்கள்.

சிவசர்மன் என்னும் வேதியன் அவ்விதமாய் வேதியர்களாலும், ஞானிகளாலும், புண்ணியசீலர்களாலும் ஆதரவுடன் பார்க்கப்பட்டவனாய் ஜபங்களை முடித்துக்கொண்டு தியாகராஜரது ஸன்னிதானத்தை யடைந்து பணிந்து துதி செய்துவிட்டுத் தேவாலயத்தை வலம் வந்து வீதிகளில் சென்று நல்ல வேதியர்களால் அளிக்கப்பட்ட பொருள்களை யெடுத்துக்கொண்டு தனது வீட்டை யடைந்து பிதாவின் பாதத்தில் வணங்கி அவர் கட்டளைப்படி நடந்துவரலானான். தியாகராஜரருள் பெற்றமையால் சில காலத்துக்குள் அச்சிவசர்மன் என்னும் அந்தணன் சாஸ்திர ஞானத்தையுமடைந்து வித்வத்கோஷ்டியில் கலந்து விளங்கினான்.

## 172. நாவல்பழம் கொடுத்தவளுக்கு நன்மை யளித்த லீலை.

விருத்தாசலத்தின் வனத்தில் ஒரு குறத்தி யிருந்தாள். அவள் காலை நேரத்தில் பரமேசனை மனதில் தியானித்துத் துதித்துக்கொண்டு காட்டில் நுழைந்து அங்குள்ள நாவல் பழம், *கொளுஞ்சிப்பழம் முதலான வனக் கனிகளைப் பறித்துவந்து சிதம்பரம் வயித்தியனாதபுரம் முதலான ஸ்தலங்களுக்குச் சென்று அப்பழங்களை விற்று ஜீவனம் செய்துவந்தாள்.

* "கொஞ்சிப்பழம் என்னும் வகையும் உண்டுபோலும்.

அக்குறத்தியானவள் அவ்விதமாய் பழங்களை விற்கச் செல்லுகையில் முதலில் நற்பழங்களை எடுத்து இது பரமேச னுக்கு என்று மனதில் நினைத்து அவ்வித பழங்களை அங் கங்கு விளங்கும் தேவாலயத்தின் முன்பு இறைத்து விடு வாள். அவளால் இறைக்கப்பட்ட அவ்விதக்கனிகளைத் தேவாலயங்களிலுள்ள கிளி, மயில், முதலான பறவைகள் ஆவலுடன் உண்டு வளர்ந்து வரும். குறவர் ஜாதியில் பிறந்த போதிலும் அம்மாது இவ்விதம் தனது ஜாதித் தொழிலை ஈசுவர பக்தியுடன் செய்து வருகையில், ஒரு சமயத்தில் அக்குறத்தி அரண்யத்தில் சென்று மிகவும் ருசி யுள்ள கனிகளைக் கொய்து கூடையில் நிரப்பி அக்கூடை யைச் சிரஸில் வைத்துக்கொண்டு திருவாரூர் நகரில் நடை பெறும் திவ்வியோற்சவத்தில் விற்பனை செய்வதற்காகப் புண்ணியபுரியை யடைந்து தேவாலயத்தின் எதிரில் நின்று கைகூப்பித் தியாகராஜரைத் தர்சித்துவிட்டு வழக்கம்போல் முதலில் கனிகளைத் திவ்வியாலயத்தின் கோபுரவாசலில் அளித்து விட்டு பழ விற்பனை செய்யலானாள்.

தயாநிதியாகிய தியாகேசர் அத்தருணத்தில் அங்கு வந்து கூடியிருக்கும் பக்தர்களுக்கு நன்மையை யளிக்கக் கருதியவராய்த்தான் ஒரு சிறு குமாரன்போல் உருவமெடுத் துக்கொண்டு தனது அழகிய கரங்களிரண்டிலும் தானியத்தை எடுத்துக் கொண்டுபோய் அக்குறத்தியிடம் சென்று அவளது கூடையில் அந்நெல்லைப் போட்டு நாவல் பழம் அளிப்பாய் என்று தனது கையை நீட்டினார். அரு மறை தேடியோடும் பரம்பொருள் இவ்விதம் சிறு பாலக னாய்த் தோன்றித்தனது கையினால் தானியத்தையளித்து நாவல்பழத்தை யளிப்பாயென்று மழலைச் சொற்களால் கேட்கையில், அச்சிறுவனது அழகிய ரூபத்தையும், சொல் லின் அழகையும் கண்டு மனம் மகிழ்ந்த அக்குறத்தியான வள் மெய்சிலிர்ப்பை யடைந்து அச்சிறுவனை அடிக்கடி உற்றுப்பார்த்து ஆனந்தமடைந்து, அச்சிறுவனது கைகள்

நிரம்பும் வரையில் நசியன்ன நாவல்பழங்களையும் மற்று முன்னா வனாக்கனாக [illegible] த்தார்.

அப்பொழுது அ[illegible] கனைகளை பெற்றுக் கொண்டு அச்சிறுவன் மாயமாக அடி நடந்து சென்று மறைந்துவிட்ட அதிசயத்தைக் கண்டு சற்றுநேரம் திகைத்திருந்த அம்மாது [illegible] பழங்களை விற்பனை செய்வதற்காகப் பழக்கூடையை [illegible] ந்து பார்க்கும்பொழுது அக்கூடையில் நிறைந்த [illegible] பங்களெல்லாம் வயிரங்களாகவும், [illegible] களாகவும் தோன்றுவதைக் கண்டு வியப்படைந்து அங்கு நடந்தவற்றை அதிகாரிகள்மூலமாய் அக்குறத்தி அரசனுக்கறிவித்தாள். இவ்வித அற்புதச் செயலையறிந்துகொண்ட மந்திரிகளும் அரசனும் ஆலோசனைசெய்து அவ்விதம் சிறுவனாய்த் தோன்றிக் கனிபெற்று மறைந்த சிறுவன் தியாகேசராகவே இருக்க வேண்டுமென்று நிர்ணயம்செய்து அவ்வித ரத்தினக் குவியல்களை நீயே எடுத்துச்செல்வாய் என்று அக்குறமாதுக்கு உத்தரவு செய்தார்கள்.

தியாகராஜ பக்தியையடைந்த அக்குறத்தியானவள் அவ்வுரையைக் கேட்டு "இந்த ரத்தினங்களை நான் எடுத்துக்கொள்ளமாட்டேன்; இந்த ரத்தினங்களினால் எனக்கு நிறைவேற வேண்டிய காரியங்கள் ஒன்றுமில்லை. எனது ஜாதித் தொழிலாகிய பழ விற்பனையினாலேயே நான் ஜீவிப்பேன்" என்று கூறி அந்த ரத்தினங்களை விரும்பாமல் வைராக்கியத்தை அணியாக அணிந்து அக்கூடையில் விளங்கும் அவ்வித ரத்தினங்களைத் தியாகராஜாவின் பலிபீடத்துக்கெதிரில் கொட்டிவிட்டுத் தேவாலயத்தைப் பிரதக்ஷிணம்செய்து மனமகிழ்ச்சியுடன் தனதிருப்பிடம் சென்றாள். அவளது வேண்டுகோளின்படியே தியாகேசரும் அவளது சரீர முடிவில் நற்பதவியையளித்தார். அக்குறத்தியானவள் இவ்வண்ணம் வைராக்கியத்தினால் அச்சிறந்த ரத்தினங்களை அங்குக் கொட்டிவிட்டுச் சென்றதைக்கண்ட அதிகாரி

கள் அவைகளை எடுத்துத் தேவாலய பண்டாரத்தில் சேர்த்தார்கள். இவ்வித அதிசயங்களையெல்லாம் கண்டிருந்த தொண்டர்களனைவரும் வியப்படைந்து ஈசனைத் துதித்தார்கள்.

## 173. அரசனின் அபகீர்த்தியை நீக்கிய லீலை.

மித்திரபாலனென்னும் சோழ மஹாராஜன் ஒரு நாள் வேட்டையாடக் கருதி பரிஜனங்களுடன் தனது நகரத்திலிருந்து வெகுதூரம் சென்று வனத்தையடைந்து சற்று நேரம் வேட்டையாடி வாடிய சரீரத்துடன் தனதிருப்பிடத்துக்குத் திரும்பி வருகையில் நடுவழியில் ஒரு இடைச்சேரியைக் கண்டான். அச்சேரியின் அருகிலிருக்கும் நிர்மலமான தடாகத்தின் தண்ணீரை அருந்தி மந்தமாருதத்தினால் உபசரிக்கப்பட்டவனாய் அதன் கரையில் விளங்கும் மரத்தின் நிழலில் சற்று நேரம் தங்கியிருந்தான்.

அவ்வரசனது வரவை அறிந்துகொண்ட இடையர்கள் தயிர், வெண்ணை, கனி, தேன் முதலியவைகளைக் கொண்டு வந்து அவ்வரசனுடைய எதிரில் வைத்து இவைகளைப் புஜிக்க வேண்டுமென்று கைகூப்பி வணங்கி நின்றார்கள். அவர்களால் அன்புடன் அளிக்கப்பட்டவைகளை அரசன் பெற்றுக்கொண்டு அவர்களின் க்ஷேமத்தை விசாரித்துக் கொண்டிருக்கையில் அச்சேரிக்குச் சமீபமாயுள்ள காடுகளில் வசித்துவரும் சில துஷ்டர்கள் கும்பலாய்க் கூடி அவ்வரசனது எதிரில் வந்து நின்று எங்களுக்கு நீர் திரவியம் அளிக்க வேண்டும். அளிக்காவிடில் நீர் அரசராகவிருந்து எங்களுக்கு என்ன பயன்? என்று சொல்லிக்கொண்டு தனத்தை விரும்பி நின்றார்கள். அப்பொழுது அம்மஹாராஜன் அவர்களுடைய துர்க்குணங்களையும் மனக் கருத்தையும் அவர்களது பார்வையினாலேயே அறிந்துகொண்ட

போதிலும், அவர்களுக்கு நன்மை உண்டுபண்ணக் கருதிய வனாய்க் கோரிய வனவாசிகளே! உங்களது விருப்பம் போலவே நான் திரவியம் அளிப்பேனாகில் அவ்விதம் கிடைத்த பொருள் உங்களுக்கு எவ்வளவு நாள் வரையில் உதவிசெய்யும்? நீடித்த காலம் வரையில் நிலைபெருதே; ஆகையால் இதுமுதல் நீங்கள் இப்பிறப்பில் நற்காரியங் களைச் செய்ய முயல்வீர்கள். அதனால் உங்களுக்கு மறு பிறப்பில் அளவற்ற செல்வம் உண்டாகும். ஸகல ஜீவராசி களுக்கும் நாதனாய் விளங்கும் தியாகராஜரது பாதத்தையே நினைத்துக்கொண்டிருப்பீர்கள். அதனால் இப்பிறப்பிலேயே உங்களுக்கு நன்மை நேரிடக்கூடும். அவரவர்கள் செய்யும் புண்ணிய பாபங்களே அவரவர்களுக்குத் துணையாகும். ஆகையால் நீங்கள் உங்களால் கூடும்வரையில் தயை, ஸத் தியம், ஈசுவர பக்தி முதலிய நற்குணங்களுடன் கூடி வாழ் வீர்களாகில் உங்களுக்குச் சிறந்த செல்வம் வளர்ந்தோங்கு மென்று இவ்விதமாய் உபதேசங்களைச் செய்தான்.

பற்பல க்ஷேமங்களுக்குக் காரணமாகிய அம்மஹாராஜ னது உபதேசங்களில் ஒன்றும் அத்துஷ்டர்களின் செவியில் நுழையவில்லை. அப்பொழுது அப்பாபிகள் அம்மஹாராஜ னது எதிரில் மறுமொழி ஒன்றும் கூருமல் மௌனமாக காட்டின் நடுவில் நுழைந்து எல்லோரும் ஒன்றுகூடி ஆலோ சனை செய்து அம்மஹாராஜனுக்கு எவ்விதத்திலாவது அப கீர்த்தியை உண்டுபண்ண வேண்டுமென்று நிர்ணயம் செய்து அச்சோழ மஹாராஜன் காட்டில் வேட்டையாடி வருகையில் தமது குலத்தில் பிறந்து யௌவனம் நிறைந்து விளங்கும் ஒரு பெண்ணை வலுவில் புணர்ச்சி செய்தார் என்று ஒரு கெட்ட வார்த்தையை நாடெங்கும் பரவச் செய்தார்கள். அம்மஹாராஜன் வேட்டையாடிக் காட்டி லிருந்து திருவாரூர் நகருக்கு வந்து சேருவதற்குள் அப கீர்த்தியானது திருவாரூர் எங்கும் பரவி விட்டது. அம் மகாராஜனுடைய நற்குணங்களைப் புகழ்ந்து வருகிற ஜனங்

களில் பெரும்பாலோர் அவ்வித கெட்ட வார்த்தையைக் கேட்டு, ஹர! ஹர! வென்று காதில் கைகொடுத்துப் பதைத்துத் துடித்தார்கள்.

இவ்வித அபகீர்த்தியானது நெடுநாள் வரையில் நாடெங்கும் பரவியிருந்து பிறகு நாளடைவில் அரண்மனையை யடைந்து மெதுவாய் அவ்வரசனது காதில் நுழைந்தது. அதைக்கேட்டு அழல் வாய்ப்பட்ட மெழுகு போல் உருகிய மனமுடைய மஹாராஜன் வெட்கி நின்று உணவையும் உறக்கத்தையும் சுகபோகங்களையும் ஒழித்து வாடி வருகையில், அந்நகரவாசிகளாகிய வேதியர்களில் சிலரும் மந்திரிமார்களில் சிலரும் அவ்வரசனது அபகீர்த்தியை நீக்கி வைக்கக் கருதியவர்களாய்த் தியாகராஜாவின் எதிரில் நின்றுகொண்டு பலவாறு துதி செய்கையில் தியாகேசர் அத்தருணத்தில் ஒரு ஆகாயவாணியை ஏவி குற்றமற்ற அம்மஹாராஜன் மீது அத்துஷ்டர்கள் கூறிய அபவாத விஷயத்தையும், அதனால் அப்பாபிகளின் நாவில் கொப்பளம் கிளம்பி புழுக்கள் மொய்த்து அவர்கள் வாடித் துடித்துத் தமது கோயிலின் வாசலில் வந்து நிற்கிறார்கள் என்னும் விஷயத்தையும் அவர்களது நாவில் தமது விபூதித் திரளைத் திவ்விய ஔஷதம் போல் அளிப்பீர்கள் என்னும் விஷயத்தையும் அறிவித்தார்.

அவ்வித ஆகாயவாணியைக் கேட்ட அம்மஹாராஜனது முகமானது சரத்கால தாமரை போல் சிறந்து விளங்கிற்று. தியாகராஜ பக்தர்களாலளிக்கப்பட்ட விபூதியை நாவினால் பெற்றுக்கொண்ட அப்பாபிகளும் நாவில் ஏற்பட்ட புண் நீங்கி நற்புத்தியையும் அடைந்து அது முதல் சிறப்புடன் வாழ்ந்து வந்தார்கள்.

## 174. கோட்டை வாசலில் காவல்புரிந்த லீலை.

பிருதிவிதரன் என்னும் ராஜகுமாரன் தனது ஐந்தாவது வயதில் சூரிய வம்ச ஸிம்மாஸனத்தை அடையப்பெற்றன். தனது பூர்வதாதைகளின் மந்திரிமார்களாயும், வயோவிருத்தர்களாயும், ஞான விருத்தர்களாயும் இருக்கும் அமைச்சர்களைப் பணிந்து அவர்களிடத்தில் ராஜ்ய பாரத்தை ஒப்புவித்துவிட்டுத் தான் இவ்வுலகில் நற்சிறப்பையடையும்பொருட்டுத் தவம்செய்யக் கருதிச் சங்கராத்திரியை நோக்கிக் கிளம்பினன்.

இவ்விதமாய் அந்த ராஜகுமாரன் ஐந்து வயதுடையவனாக இருந்தபோதிலும் ஸகல லோக நாயகனாகிய பரமேசுவரனைக் குறித்து அரிய தவம்செய்ய வேண்டுமென்று நிர்ணயம் செய்துகொண்டு திருவாரூர் நகரைப் பிரதக்ஷிணம் செய்து தியாகராஜரையும் பணிந்து துதித்துவிட்டுத் தியாகராஜ பக்தியை அணியாகவும், ஆயுதமாகவும், உறுதுணையாகவும் பெற்றுக்கொண்டு தன்னுடன் வந்த சத்ரசாமராதிகளைத் திருப்பி அனுப்பி விட்டு நகருக்கு வெளியில் சென்று அந்நகர தேவதையையும் பணிந்து அவளிடமும் விடைபெற்றுக்கொண்டு வடதிசையை நோக்கிச் சென்று ஒவ்வொரு கிராமங்களையும், நகரங்களையும், நந்தவனங்களையும் கண்ணுரக்கண்டு களித்துக்கொண்டே செல்லலானன். இவ்விதமாய் அந்த ராஜகுமாரன் அங்கங்கு தேசங்களின் பான்மைகளையும், மேதினியின் அழகையும் பார்த்துக் கொண்டே சங்கர கிரியை யடைந்து, அக்கிரியின் ஈசான பாகத்தில் விளங்கும் வருணதீர்த்தக்கரையில் ஒரு பர்ணசாலையை அமைத்துக்கொண்டு தியாகராஜாவின் பாதாரவிந்தங்களை மனதில் தியானித்துக்கொண்டு முனிவர்போல் கடின தவம் செய்ய ஆரம்பித்தான்.

உதய பர்வதத்திலுதித்து எதிர்முகமாய் வரும் கதிரவனுக்கு எதிராகக் கைகளைத் தூக்கிக்கொண்டும், கண்களை

மூடிக்கொண்டும், பஞ்சேந்திரியங்களின் ஓட்டத்தை உலக வாழ்க்கையில் செல்லவிடாமல் தடுத்தும், மனதைப் பசுபதியின் பாதமலரில் நிலைபெறச் செய்தும், உணவையும், உறக்கத்தையும் மறந்தும், வெய்யிலையும், காற்றையும், குளிரையும், மழையையும் ஸகித்துக்கொண்டும் அரிய தவம்செய்து வரும் அந்த ராஜகுமாரனுக்குப் பதினொரு வருஷமும் பதினொரு மாதங்களும் அச்சங்கர வனத்தில் சென்றுவிட்டன.

ஏகாக்கிர சித்தனாய்ப் பிருதிவிதரன் என்னும் அந்தச் சோழ ராஜகுமாரன் இவ்விதமாய் அரிய தவம் செய்யும் தருணத்தில் அச்சோழ நாட்டின் மந்திரிகளில் சிலர் விண்ணுலகை யடைந்துவிட்டனர். அதனால் அந்த ராஜாங்க அதிகாரிகள் எல்லோரும் மன வருத்தத்தை யடைந்தும், நெடுநாளாய் ராஜகுமாரனைக் கண்களால் காணாமலும், சேனாபலக் குறைவையும் அடைந்திருக்கும் சமயத்தில் சிற்சில பகை மன்னர்கள் சோழ நாட்டைத் தமது வசமாகச் செய்துகொள்ள விரும்பிச் சில தூதரையும், வேவுகாரர்களையும் திருவாரூர் நகருக்கு அனுப்பி அவர்கள் மூலமாய் அங்கு விளங்கும் கோட்டை, அகழ், ராஜபலம் முதலிய பலங்களின் இயற்கையை யறிந்துகொண்டு படையெடுத்துச்சென்று அத்திருவாரூர் நகரை அணுகி யுத்த பேரிகைகளை முழங்கச் செய்தார்கள். அவ்வித பேரிகைகளின் கொடிய ஒலியைக் கேட்ட ஜனங்களின் மனமும் அரசக் கொடியும் நடுக்கமுற்றது. அந்நகரிலுள்ள எல்லோரும் ஒன்றுசேர்ந்து கமலையில் நீராடி விபூதி ருத்திராக்ஷ மாலைகளை அணிந்துகொண்டு தியாகராஜரைப் பஜித்துக் கொண்டு பொற்கோயிலைப் பிரதக்ஷிணம்செய்து ஸன்னிதானத்தையடைந்து பலவாறு துதிசெய்து நிற்கையில், "கேளீர் தொண்டர்களே! உங்களுடைய துதியைக் கேட்டுச் சந்தோஷமடைந்த யான் உங்களது மன வருத்தத்தை அறிவேன்; நீங்கள் சிறிதும் அஞ்சவேண்டாம். உங்களையும் உலகிலுள்ள மற்ற ஜீவராசிகளையும் வெகு சிறப்பாக

ஆளக் கருதிய சோழ குமாரன் வடதிசையில் பன்னிரண்டு வருஷ காலமாய் என்னைக் குறித்து அரிய தவம் செய்வதை யும் யான் அறிவேன். இன்னும் ஒரு மாத காலம் முடிவ தற்குள் எனது அருளால் திவ்விய சக்தியைப்பெற்று உங்க ளது ராஜகுமாரன் இந்நகரத்துக்குத் திரும்பப் போகிறான். இந்நகரை எதிர்க்க வந்திருக்கும் பகைவர் படையானது இந்நகருள் புகாவண்ணம் நான் பாதுகாத்து வருகிறேன். நீங்கள் சஞ்சலமற்றவர்களாய் இருப்பிடமடைவீர்கள்" என்று ஓர் அசரீரி உண்டாயிற்று.

இவ்வித மொழியைக் கேட்ட தொண்டரனைவரும் களிப்புடன் பரமேசனைத் துதித்துவிட்டுத் தைரியத்துடன் தமது இருப்பிடம் சேர்ந்தனர். அன்றிரவின் நடு நேரத் தில் தயாநிதியாகிய தியாகேசர் அத்திருவாரூர் நகரின் கோட்டை வாசலுக்கு எதிரில் ஒரு வீரபடன்போல் தோன்றிச் சிங்கநாதம் செய்தார். அச்சப்தத்தைக் கேட்ட யானைகளும், குதிரைகளும் ஓடத் தலைப்பட்டன. சில வீரர்கள் மூர்ச்சையடைந்து வீழ்ந்தனர். பகையரசர் களும் பயமடைந்து வெட்கத்துடன் தமதிருப்பிடமடைந் தனர். அன்றிரவு முதல் தியாகேசன் காவல் புரிந்துவரும் நாளில் தவத்தை முறைப்படி நிறைவேற்றிய ராஜகுமாரன் தியாகராஜாவின் திருமேனியை நேரில் கண்டு முகமலர்ச்சி யுடன் திருவாரூருக்குத் திரும்பிவந்து ஜனங்களினுல் ஆதர வுடன் அழைக்கப்பட்டவனாய் ஸிம்மாசனத்தில் வீற் றிருந்து பற்பல யாகங்களையும் நிறைவேற்றிக்கொண்டு சுகமாக வாழ்ந்து வரலானான்.

## 175. துஷ்ட பிக்ஷை யளித்தாருக்குத் துன்பமிழைத்த லீலை

ஒரு சமயத்தில் புஷ்பாரண்யத்தில் அம்பிகா தாஸன் என்னும் வேதியர் ஒருவர் ஒப்பற்ற ஈசுவர பக்தியையடைந்து தாமரை இலையில் நிலைபெற்ற நீர்த்துளிபோல் இவ்வுலக வாழ்க்கையில் பற்றையடையாமல் தினந்தோறும் காலையில் கர்மானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு தண்டுல பிக்ஷைக்காக வீதியில் சஞ்சரித்து வருவார். தாளமேந்திய கையுடன் அவர் வீதியில் செல்லும் பொழுது அவரது பக்தி முதலிய நற்குணங்களைக்கண்டு அப்புஷ்பவனத்திலுள்ளவர்களெல்லோரும் எதிர்கொண்டு மரியாதை செய்து பிக்ஷையளிக்கலானார்கள். அவ்விதம் கிடைத்த பொருள்களைப் பெற்றுக்கொண்டு தனது வீட்டையடையும் அவ்வம்பிகாதாஸ வேதியர் அவைகளினால் சிவபூஜைக்கும், அதிதி பூஜைக்கும் ஆத்மாஹுதி பூஜைக்கும் உரியதாய் ஹவிஸ் முதலியவைகளைச்செய்து தர்ம முறைப்படி பத்னியுடன் காலம் கழித்துவந்தார்.

அவ்வேதியர் அநேக வருஷகாலமாக பிக்ஷையெடுப்பதையே முக்கியமாகக்கொண்டு மனைவி மக்களுடன் விளங்கிவருகையில் ஒருசமயத்தில் அவர் பற்பல க்ஷேத்திரங்களுக்குச்சென்று அங்குள்ள ஈசனைக்கண்டு தரிசித்து ஆன்மாவுக்கு நற்கதியை மேன்மேலும் ஸம்பாதிக்கவேண்டும் என்று கருதி திருவானைக்கா என்னும் க்ஷேத்திரத்தை யடைந்து அங்குச்சிலவருஷம் தங்கியிருந்து, பிறகு அவ்விடத்திலிருந்து கிளம்பி பஞ்சநதம், கண்டியூர் முதலான திவ்விய பதிகளையடைந்து அங்கு விளங்கும் ஈசனைப் பணிந்து கொண்டு விருத்தாசலத்தையடைந்தார்.

அங்குச்சிலகாலம் தங்கியிருந்து பிறகு அவ்வேதியர் ஒருநாள் சோணாசலத்தைக் குறித்துச் செல்லுகையில் நடுவழியில் ஒரு கிராமத்தில் சிலநாள் தங்கியிருந்தார். அவ்

வேதியர் காலை நேரத்தில் நித்திய கர்மானுஷ்டானத்தை முடித்துக்கொண்டு தண்டுலபிக்ஷைக்குச்சென்ருர். அவ் வேதியருடைய தோற்றத்தைக் கண்டவரெல்லோரும் அவரது பாதத்தில் வணங்கிப் பிக்ஷையளித்து வந்தார்கள். அதனால் அவர் ஜீவனம் செய்துவருங்காலத்தில் ஒரு நாள் சில துஷ்டர்கள் அவ்வேதியருடன் பேசியிருந்து கெட்ட திரவியத்தைப் பெற்றுக்கொள்வதினால் தீங்கு விளையுமென் றுரைக்கக்கேட்டு, அவ்வேதியரின் பக்தியையும் மன நிலைமையையும் பரிசோதிக்கக்கருதிக் கெட்ட ஆலோசனை செய்து, அவர் வீதியில் வருகையில் சூத்திரர்களுடமிருந் தும், வைசியர்களிடமிருந்தும் தானம் வாங்கிய தண்டு லத்தையும், மற்றும் பாபத்தொழிலால் சேகரித்த பொருள் களையும் ஒன்று சேர்த்து அவ்வேதியரின் பிக்ஷாபாத்திரத் தில் பிக்ஷையாக அளித்தார்கள்.

அவ்வஞ்சனைக்காரர்கள் இவ்வண்ணம் துஷ்டப் பொருளை அளித்தமையையறியாத அம்பிகாதாஸர் அத் தண்டுலங்களினாலே சிலநாள் ஆத்மாஹுதி செய்து கொண்டு வருகையில் ஒருநாள் ஒரு முனிவர் அவ்வேதியரின் வீட்டிற்குவந்து முறைப்படி அவரால் உபசரிக்கப்பட்ட வராய் சிவார்ச்சனைசெய்து முடித்துக்கொண்ட பிறகு அவரது வீட்டில் போஜனம்செய்ய உட்கார்ந்துகொண்டு அன்னாதிகளைச்சுற்றிலும் நான்கு திசையிலும் மந்திர ஜலத் தினால் பரிஷேசனம் செய்யும் பொழுது அவர்களது கண்ணுக்கெதிரில் ஒரு ராக்ஷஸ உருவம் தோன்றிற்று. அந்த ராக்ஷஸன் அவர்களைக்கண்டு நகைசெய்து ஓ வேதியர் களே! கெட்ட பொருளினால் சமைக்கப்பட்ட இவ் வுணவை நீங்கள் இப்பொழுது உட்கொண்டாலும் அது எனக்குத் திருப்தியேயாகும். ஆகையால் நானே இவ் வுணவை முதலில் கொஞ்சம் உண்ணக்கடவேனென் றுரைத்துக்கொண்டே தனது நீண்டகைகளை நீட்டி ஒரு பிடி அன்னத்தை எடுத்தான்,

அதைக்கண்ட அவ்வம்பிகாதாஸரும் அம்முனிவரும் ஆச்சரியத்தையும், பயத்தையுமடைந்து ம்ருத்யுஞ்ஜய மந்திரத்தை மூன்று தடவை உச்சரித்துக்கொண்டே எழுந்திருந்து வெளியில்வந்து தடாகத்தில் ஸ்நாநம் ஜபம்செய்து தியாகராஜாவின் பாதத்தை மனதில் தியானித்துக்கொண்டு உபவாஸமிருந்து பகலையும் இரவையும் கழித்தார்கள். அவ்வேதியரது மனைவியும் மக்களும் அவைகளையெல்லாம் எடுத்து வெளியில் கொட்டிவிட்டு ஈசனைத்தியானித்துக்கொண்டு அன்றிரவைக் கழித்தார்கள். அவ்வேதியரின் குடும்பத்தார்கள் அன்று உணவின்றி மனம்வாடி ஈசுவர நாமத்தைச் சொல்லிக்கொண்டே அன்றிரவைக் கழித்துவிட்டு மறுநாட்காலையில் பிராம்ம முகூர்த்தத்தில் அனுஷ்டானம் செய்வதற்காக எழுந்து செல்லும்பொழுது துஷ்டதான தண்டுலங்களைப் பிக்ஷையாக அளித்த பாபிகள் எல்லோரும் கூடிவந்து அவரது பாதத்தில் வீழ்ந்து வணங்கி, "ஓ அந்தணோத்தமரே! நாங்கள் மதிமயக்கத்தினால் கெட்ட பொருளை உமக்குப் பிக்ஷையாக அளித்தோம். அதனால், நேற்றிரவுமுதல் எங்கள் வயிற்றில் பொறுக்க முடியாத எரிப்பு உண்டாகிவிட்டது. இவ்வித வயிற்றுக்கொதிப்பை நீரே நீக்கிவைக்கவேண்டும். இல்லாவிடில், உமது பாதத்தருகிலேயே இன்னும் சிலநாழிகைக்குள் எமது உயிரை விட்டுவிடுவோம்" என்றுரைக்கும் பொழுது அதைக்கேட்டு அவ்வேதியர் மிகவும் ஆச்சரியமடைந்து அவர்கள்மீது கருணைசெய்து அவர்களுக்கு ஈசுவரபக்தி உண்டாகும்படி தத்துவோபதேசம் செய்தார்.

## 176. பூதபதியாய் ராஜகுமாரியைத் தேற்றிய லீலை.

சோழவரசனின் மகளாகிய இந்திரதத்தையென்பவள் யௌவனப் பருவத்தில் வசந்த மாளிகையில் தோழியருடன் நெடுநேரம் விளையாடித் திரும்புகையில் நடுவழியில் ஒரு பிரம்ம ராக்ஷஸனால் கவரப்பட்டவளாய் மெய்மறந்து, வெட்கம், தனது ஸ்வரூபம், உணவு, உறக்கம் முதலிய மானுஷ தர்மங்களை விட்டுவிட்டு வாயில் நுரையைக் கக்கிக் கொண்டு சரீர மெலிவையெய்தி மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கலானாள்.

இவ்விஷயத்தை அந்தப்புரத் தோழியர் வாயிலாக அறிந்துகொண்ட அச்சோழன் அநேக மந்திரவாதிகளைக் கொண்டு பிரம்ம ரக்ஷஸைத் தனது மகளிடமிருந்து விலக்க முயன்றான். அவ்வித முயற்சிகள் எல்லாம் வீணாயின. மந்திர சாஸ்திரங்களின் கரைகண்டவர்கள் அக்குமாரியின் அருகில்வந்து மந்திரங்களை உச்சரிக்கும்பொழுது அப்பிரம்ம ரக்ஷஸானது அம்மந்திரவாதிகளை நோக்கி பரிணாமாதி விகாரங்களற்றதாயும், நிர்விகாரமாயும் விளங்கும் பாரமார்த்திக பரப்பிரம்மத்தின் ஸ்வரூபத்தை எனக்கு உரைக்க வல்லீரேல் நான் இவளைவிட்டுச் செல்வேனென்றுரைக்கக் கேட்டு, அதற்கு மறுமொழி கூற வல்லமையற்ற மந்திரவாதிகள் பலர் வெட்கியோடினர். அதைக் கண்ட சோழன் தனது மகளுக்குக் கதி எல்லாம்வல்ல தியாகராஜரே தவிர வேறு இல்லை என்று நிர்ணயம் செய்து வேறு சிந்தையற்றவனாய் ஒரு வருஷ காலம் வரையில் தியாகராஜாவின் பாதத்தில் அர்ச்சனைசெய்த வில்வபத்திரங்களையும் மகாவிபூதியையும் அம்மகளுக்கு அளித்துவரச் செய்தான்.

அவ்விதமாய் அம்மகாராஜன் செய்துவரும் பக்தி விசேஷத்தைக் கண்டு தியாகராஜர் ஒருநாள் ஒரு மந்திர

வாதிபோல் உருவமெடுத்துக்கொண்டு அரண்மனை வாயிலை யடைந்தார். சோழனால் முறைப்படி பூஜிக்கப்பட்டவராய் அரண்மனையின் உட்சென்று அவ்விந்திரதத்தையின் அருகில் சென்று சிற்சில மந்திரங்களை உபதேசித்தார். அப்பொழுது ராஜகுமாரியின்மீது ஆவேசித்திருக்கும் அந்த பிரம்மரக்ஷஸானது வெகுண்டு எழுந்து மந்திர சாஸ்திரங்களின் முடியிலும், வேதாந்த சாஸ்திரத்தின் முடியிலும் விளங்கும் பரமாத்மாவின் நிர்விகாராதி விஷயமாய்ச் சிற்சில சந்தேகங்களைக் கேட்டது. அதைக் கேட்டுப் பிம்பப் பிரதிபிம்ப ரூபமாய், ஸர்வ வியாபியாய் விளங்கும் தியாகேசர் ஆத்மா ஸத் என்றும், பிரம்மமென்றும், ஸதஸத்விலக்ஷணசோபிதமென்றும், சகல மந்திர ஸ்வரூபியென்றும் தொடங்கி நிர்விசேஷமான பரப்பிரம்மத்தை ஸாக்ஷாத்கரிக்குமுபாயத்தையும் முறையாய் உரைக்க ஆரம்பிக்கையில், ராஜகுமாரியின்மீது ஆவேசித்திருந்த அப்பிரம்மரக்ஷஸானது அவளை விட்டுவிட்டு ஒரு தேவ சரீரத்துடன் அம்மந்திரவாதியின் எதிரில் வந்து வணங்கி வலஞ்செய்து 'ஓ பரம்பொருளே! எனது தவத்தின் பயன் இன்றுதான் பலிதமாயிற்று. எனது மூதாதைகளும் நானும் சிறப்பை யடைந்தோம் உமது திவ்விய தரிசனம் கிடைத்தபடியாலும், உமது முகாரவிந்தத்திலிருந்து வெளிக்கிளம்பிய தத்துவோபதேசங்களைக் கேட்டபடியாலும் நான் பாபசரீரத்தை விட்டுவிட்டு இவ்வித தேவ சரீரத்துடன் விமானமேறிச் செல்லுகிறேன். ஓ பூதபதியே! லோகநாத! ஈசுவர! மந்திரநிதியே! அருள்புரிய வேண்டும்' என்றுரைத்துக் கொண்டே தேவர்களால் கொண்டுவரப்பட்ட விமானத்திலேறிக்கொண்டு வானுலகையடைந்தான்.

அவ்விதம் மந்திரவாதியாய், பூதபதியாய்த் தோன்றிய தியாகராஜரும் அவ்விடத்திலேயே மறைந்ததைக் கண்ட அந்த ராஜகுமாரியானவள் அத்தருணத்தில் மதியின் தெளிவையடைந்து உலக தத்துவத்தையும், ஈசுவர தத்து

வத்தையுமறிந்து, ஓ பரஞ்சுடரே! என் கண்கள் களிக்கும் படி இன்னும் சற்றுநேரம் உமது தரிசனத்தையளிக்க லாகாதாவென்றுரைக்கையில் புஷ்பமாரி பொழிந்தது. தோழியரும் சோழனும் வியப்புடன் அவளைச் சுற்றிக் கொண்டு ஆனந்தமடைந்தார்கள்.

## 177. போஜன சேஷத்தின் சிறப்பை வெளியிட்ட லீலை.

பிருஹஜ்யோதி யென்னும் சோழ மந்திரியானவன் ஒரு நாள் சக்கரவர்த்தியின் சிம்மாசனத்தருகில் வீற்றிருந்து ஜனங்களின் நியாய முறையை விசாரித்து வருகையில் அச்சபையில் வீற்றிருந்தவர்களில் சிலர் அம்மந்திரியின் யுக்தி விசேஷத்துக்காக மிகவும் ஆனந்தத்தை யடைந்து அம்மகாராஜனுக்கும் அம்மந்திரிக்கும் ஈசுவரன் சிறப்பை யளிக்கவேண்டுமென்று ஆசி கூறினர்.

அத்தருணத்தில் அச்சபையிலிருந்து ஒரு திவ்விய சோதிடன் எழுந்திருந்து "ஓ சபையோர்களே! நீங்கள் இம்மந்திரி ரத்தினத்தின் யுக்தியைப்பற்றிப் புகழ்வது நலமே; சதுர்முகனால் சிருஷ்டிக்கப்பட்ட இவ்வுலகில் இவ்வித அரசனும் இவ்வித மந்திரியும் மகானுபாவர்களே என்று நினைக்க வேண்டும். பூர்வ புண்ணியத்திரளால் இவர்கள் இப்பதவியை அடைந்திருக்கிறார்கள். இம்மந்திரி யானவர் மூன்று ஜன்மங்களுக்கு முன் அடைந்திருந்த ஜாதியையும், தொழிலையும் நான் சோதிட ஞானத்தினால் அறிவேன்; அவைகளைச் சொல்லுகிறேன். கேளீர் ஸபை யோர்களே! யுக்தியில் சிறந்த இம்மந்திரியானவர் மூன்று ஜன்மங்களுக்குமுன் ஒரு நாயின் யோநியில் ஜனித்திருந் தார். சிவபாகரென்னும் ஒரு வேதியருடைய வீட்டை

ஒரு நாள் தற்செயலாய் அந்நாய் அடைந்து பிராமணர்கள் புஜித்துச் சிதறிய போஜன சேஷத்தையுண்டு பசியையும் போக்கிக்கொண்டு அவ்வேதியரின் வீட்டிலேயே க்ஷண காலம் வாசம் செய்தது.

இவ்விதம் அந்நாயானது ஈசுவர பக்தி நிறைந்து விளங்கும் பிராமணர்கள் புஜித்த அன்னத்தின் மிச்சத்தைப் புசித்ததனால் சில நாட்கள் செல்வதற்குள் அந்த நாய் மறு ஜன்மத்தையடைந்தது. அப்படிப்பட்ட மறு ஜன்மத்தில் மானிடனாய் வைசிய ஜாதியில் பிறந்து பிராமண பக்தியையே ஹாரமாகப் பூண்டு விளங்கிச் சிலகாலம் வரையில் வைசிய சரீரத்துடன் இருந்து, அவ்வுடலையு மொழித்து மறு ஜன்மத்தில் ஐந்து வருஷ காலம் வரையில் க்ஷத்ரிய வம்சத்தில் ஜன்மத்தை யடைந்திருந்து, அப்பொழுதும் மிகவும் பக்தியுடன் விளங்கி, அச்சரீரத்தையும் விட்டு ஒழித்து இப்பொழுது இவ்வித மந்திரி ரத்தினமாய் விளங்குகிறார். சில வருஷங்களுக்கு முன் நாயின் வயிற்றில் பிறந்த பிராணியானது ஸத்புருஷ பிராமணோத்தமர்கள் புஜித்த அன்னத்தின் சேஷத்தை யுண்டபடியால் அவ்வித அன்னத்தின் மகிமையினால் மேன்மேலும் சிறந்ததாகிய ஜன்மாவைப்பெற்று இப்பொழுது மந்திரியாய்ப் பிறந்து பிராமண பக்தி, தேவ பக்தி, ஈசுவர பக்தி, ஸத்தியம், தயை, பக்ஷபாதமின்மை முதலான நற்குணங்களுடன் கூடியவராய் இச்சபையில் விளங்குகிறார்; பாருங்கள்.

ஆகையால், பிராமணோத்தமர்களிடத்தில் பக்தி செய்வதினால் உண்டாகும் நன்மைக்கு இம்மந்திரியே உதாஹரணமாக விளங்குகிறார். இதற்கு ஈசுவரனும் ஸாக்ஷி" என்றுரைக்கையில் தியாகேசர் அருளால் அத்தருணத்தில் அச்சபையில் ஒரு அசரீரி உண்டாயிற்று. "கேளிர்! பக்தர்களே! இந்தச் சோதிடன் தனது சோதிட ஞானத்தினால் இம்மந்திரியின் பூர்வ ஜன்ம விருத்தாந்தங்களை யறிந்து சொன்னதெல்லாம் உண்மையேயாகும். பிராமண

போஜன சேஷத்தையுண்டதினால் உண்டாகிய சிறப்பைப் பாருங்கள். பிராமணர்களின் பாதங்களில் பக்தி செய்தவர்களுக்குக் கலைமகளின் கடாக்ஷமும் திருமகளின் நோக்கும் உண்டாகும். புத்தியானது தெளிவையடையும். பிராமண பக்தி செய்தவர்களின் முகம் சந்தோஷத்தினால் விளங்கிச் சகல சம்சயங்களும் நீங்கித் துலங்கும். நெடுங்காலம் அரிய தவம்செய்து அடையக்கூடிய நற்பதவிகளை ஒப்பற்ற பிராமண பக்தியினால் அடையக்கூடும். இக்கலியுகத்துக்குப் பிராமணரே முதல் தெய்வமென்று கூறலாம். ஈசுவரனிடத்தில் செய்த அபசார வகைகளை நீக்கிக்கொள்ளலாம்; பிராமணரிடத்தில் செய்த அபசாரங்களை நீக்கிக்கொள்ளுதலரிதாகும்; பிராமண பக்தியே இடர் தீர்க்கும் மருந்து;" என்று இவ்விதமாய்ச் சொல்லக் கேட்டவரனைவரும் அந்த ராஜ சபையில் விளங்கும் மந்திரி ரத்தினத்துக்கும் சோழனுக்குமாசிகூறிவிட்டு அன்று மாலை நேரத்தில் தேவாலயத்தையடைந்து தியாகேச தரிசனம் செய்து மகிழ்வுடன் தமது இருப்பிடம் எய்தினர்.



## 178. பூத பலிக்காகத் தானே சென்ற லீலை.

சோழ நாட்டில் பணீந்திரயாயஜூகர் என்னும் அந்தணோத்தமர் ஒருவர் தமது மூதாதைகளின் கால முதல் அனுஷ்டிக்கப்பட்டுவரும் ஒரு மாகேசுவர விரதத்தை தானும் கல்ப முறைப்படி நிறைவேற்றக் கருதி அதற்காகப் பக்ஷாந்த ஸங்கல்பத்தை முதலில் செய்துகொண்டும் யக்ஞோபவீதத்தையும் புதிதாய் அணிந்துகொண்டும் மூன்றுநாள் வரையில் பகற்காலத்தில் உபவாஸமிருந்து அவ்வித விரதத்துக்கு வேண்டிய திரவியங்களைச் சேகரித்தார். இவ்விதமாய் அந்தப் பணீந்திரயாயஜூக தீக்ஷிதர்

லோகத்துக்கும், ராஜ குடும்பத்துக்கும், தமது வம்சத்துக்கும் சகல பிராணிகளுக்கும், நன்மையுண்டாகும் பொருட்டு மாகேசுவர விரதத்தை நடத்த ஆரம்பம் செய்கிறாரென்னும் பிரசித்தியானது உலகில் பரவியவுடனே எண் திசைகளிலிருந்தும் அநேக மகரிஷிகளும், வேதியர்களும், சாஸ்திரமறிந்தவர்களும் அத்திருவாரூர் நகரத்தில் வந்து கூடினர்.

அவ்வித விரதத்தை எவ்விதத் தடங்கலுமின்றி நிறைவேற்றிவைக்கக்கருதிய சோழனும், மற்றுமுள்ளவர்களும் அளவற்ற திரவியங்களையும் உபகரணப் பொருள்களையும் அனுப்பினார்கள். இவ்விதம் சுத்தத் திரவிய சங்கிரஹணம் செய்த அத்திக்ஷிதர் பௌர்ணமியில் மாகேசுவர விரத சங்கல்பம் செய்துகொண்டு யாகசாலையின் பூர்வசாலைக் குண்டத்தில் 'ஸ்வாஹா தேவி' யுடன் கூடிய அக்னிதேவனை ஆவாஹனம் செய்து ஸ்தண்டில சுத்திபரிஸ்தரணம், பூர்வ தோயம் பாலேந்துகூடனது ஆவாஹநம் ஆஸன சமர்ப்பணம் மகாபஞ்சாக்ஷர மந்திரப்படனம் தேவிபஞ்சாக்ஷர மந்திரப்படனம் ஈசானஸ்துதி முதலிய மந்திர கலாபங்களையும், தந்திர கலாபங்களையும் பிராமணோத்தமர்களைக் கொண்டும், தானுமாக கல்பசூத்திர முறைப்படி செய்துவைத்தும் செய்தும், மகேசுவரப் பிரீதிக்காகவும், ஜீவராசிகளின் நன்மைக்காகவும் தியாகேசரது பாதாரவிந்தங்களை மனதில் தியானம் செய்துகொண்டு ஹோமம் செய்யலானார்.

பிறகு சண்டன், பத்ரன், உபத்ரன், ருத்ரன், ருத்ரஜயன் முதலான பிரமதகண பரிவார தேவதைகளுக்காக அவர்களின் நாமங்களை உச்சரித்துக்கொண்டே ஹோமம் செய்யும்பொழுது தியாகேசரது ஆக்ஞையினால் தேவலோகம் சென்றிருந்த சண்டன் பத்ரன் முதலான பிரமத கணங்கள் ஆஹுதியைப் பெற்றுக்கொள்ள வருவதற்குக் கொஞ்சம் காலவிளம்பம் நேரிட்டது. ஒப்பற்ற பரமேச பக்தியையடைந்த அந்தத் தீக்ஷிதர் அக்னியில் ஆஹுதி

செய்யும்பொழுது அவ்வக்னி முகமாய் ஒவ்வொரு தேவர்களும் நேராகத் தோன்றி ஆஹுதிகளைப் பெற்றுக்கொண்டு மனக்களிப்புடன் செல்லுவதையும், ஆசி கூறுவதையும் தனது ஞான திருஷ்டியினால் பார்த்துக்கொண்டு உளம் மகிழ்ந்திருந்தார். அத்தருணத்தில் சண்டாதிகளுக்கு ஆஹுதி செய்கையில் அவர்கள் மாத்திரம் அக்னி குண்டத்தின் முன் தோற்றமலும் தான் அளிக்கும் ஆஹுதித் திரவியங்களைப் பெற்றுக்கொள்ளாமலும் இருக்கக்கண்டு மனம் வாடி நின்றார்.

"ஸகல மந்திர ஸ்வரூபியாகிய தியாகேச! வேதப் பொருளே! நான் எவ்வித அபசாரம் செய்தபோதிலும் இந்த யாகத்தில் எவ்விதக் கிரியாலோபங்கள் நேரிட்ட போதிலும் அவைகளை யெல்லாம் பொறுத்துக்கொண்டு என்மீது அருள்புரிவீர். இப்பொழுது நான் செய்யும் ஆஹுதியை உமது பிரமதகணத்தாருள் ஒருவரும் அங்கீகரிக்கவில்லையே; என் செய்வேன் ஈச!" என்று கையிலேந்திய பாத்திரத்துடன் கண்ணீர்மல்க நின்று வாடுகையில் அதைக்கண்ட தயாநிதியாகிய தியாகேசர் அத்தருணத்தில் அத்தீக்ஷிதர்மீது கருணைசெய்து தானே நேராக அவ்விடத்தில் தோன்றி அவ்வக்னியின் எதிரில் நின்று தமது திவ்விய கைகளை நீட்டி ஆஹுதியைப் பெற்றுக்கொண்டு அங்கிருப்பவர்களுக்குத் தமது திவ்விய ஸ்வரூபத்தைக் காட்டி மறைந்தார்.

அப்பொழுதே ஆகாயத்தில் ஓர் அசரீரி உண்டாயிற்று. "பக்தச்ரேஷ்டர்களே! கேளீர்! அகிலாண்டங்களுக்கும் காரணபூதரான தியாகேசர் இப்பொழுது தமது திவ்விய கைகளை நீட்டி ஆஹுதியைப் பெற்றுக்கொண்டபடியால் இந்த யாகத்தில் ஆஹுதியைப் பெற்றுக்கொண்டு திருப்தியடையக் கூடியவர் எல்லோரும் பரமானந்தமடைந்து விட்டார்கள். இந்த விரதமும் அதற்கு அங்கமான இந்த யாகமும் பரமேசனருளால் முடிவு பெற்றது" என்று

உரைக்கக் கேட்டவரனைவரும் தமது பாக்கியம் அப்பொழுதுதான் சித்தியடைந்தது என்றெண்ணி மகிழ்வு எய்தி அவ்விரதத்தை முறைப்படி முடித்து ஆஹாரதிசேஷங்களைப் புசித்துச் சகலபாபராசிகளையும் ஒழித்து அஞ்ஞானத்தை நீக்கி மெய்ஞ்ஞானம்பெற்றுச் சிறப்புடன் எவ்வித இடருமின்றி வாழ்ந்தார்கள்.

## 179. இரவில் சூரியனைத் தோற்றுவித்த லீலை.

முன்பு ஒரு சமயத்தில் தேவர்களாலும், முனிவர்களாலும், வேதியர் முதலிய வருணத்தார்களாலும் பக்தியுடன் தியாகராஜாவின் திருமேனிக்கு ஏற்றவாறு வசந்த உற்சவ வுபசாரங்களைச் செய்துவைத்துச் சகல பக்தர்களும் மனக்களிப்புடன் தமது இருப்பிடம் சென்று நித்திரைசெய்கையில் அவ்வித வசந்தோற்சவத் திருவிழாவின் முடிவு வைபவத்தைக் கண்டுகளித்த தேவர்கள் மலர்மாரிப் பொழிகையில், அன்றிரவில் சகல ஜீவராசிகளுக்கும் ஆதித்தாயாகிய கமலை நாயகியானவள் புண்ணியபுர நாதன்மீது சற்று நேரம் வரையில் பிரணயகலகத்தை யடைந்து பரமேசனைக் கண்டு பேசாமல் திருக்கண்களில் சிவப்பையடைந்து தேவாலயத்தின் ஒரு தனி மண்டபத்தில் தோழிகளால் தேற்றப்பட்டவளாய் விளங்கி நின்றாள்.

சகலலோக சிருஷ்டிகர்த்தாவாயும், சகல ஜீவராசிகளுக்கும் முதல் தந்தையாயும் விளங்கும் புண்ணியபுர நாதனாகிய தியாகேசர் தனது தேவியாரின் வரவைத் தனது பள்ளிக்கட்டிலினருகில் காணாமல் சற்று நேரம் வரையில் எதிர்பார்த்திருந்தார். அப்பொழுதும் தேவியின்

வரவைக் காணுமல் மனவாட்டத்தை யடைந்து தானே இங்குமங்கும் ஓடிப்பார்த்து எங்கும் காணுமல் அவ்விதச் சம்பவத்துக்கு என்ன காரணமென்று யோசனை செய்யா மலே மன்மத பாணங்களுக்கு இலக்காகிய மனமுடைய வராய்த் தமது திவ்யசக்தியை முற்றிலும் இழந்தவர் போல் விரகவேதனையை அனுபவித்துக்கொண்டு தேவா லயத்தின் ஒரு பாகத்தில் ஓர் இருண்ட மண்டபத்தில் தேவியார் துக்கத்துடன் இருப்பதாக அறிந்து விரைவாய் அவ்விடம் சென்றார்.

க்ஷணகாலம் தேவியாரின் வியோகத்தை யடைந்து பரிதபித்த மனமுடையவராய் அம்மண்டபத்தின் ஒரு பாகத்தில் உயிர்த்தோழியரான சில மாதரால் சூழப்பட்ட வளாய்த் துக்க சயனத்தில் கண்வளர்பவள்போல் விளங் கும் தேவியைக்கண்டார். ஓ லோகமாதாவே! தயைக்கு இருப்பிடமே! பற்பல லீலைகளுக்குரியதாகிய வசந்தோற்ச வத்தின் இரவில் நீ ஏன் இவ்விதமாய்த் துக்கசயனத்தில் வீற்றிருக்கிறாய்? நான் குற்றம் செய்திருந்தபோதிலும் பொறுத்துக்கொள்வாய்; உனது மக்களாகிய சகல ஜீவ ராசிகளும் எவ்விதம் குற்றம் செய்திருந்தபோதிலும் உனது கருணையானது அவைகளையெல்லாம் பொறுத்துக் கொள்வது உலகப்பிரசித்தமேயாகும். இவ்வண்ணமிருக்க நீ ஏன் என்மீது உனது அழகிய நயனங்களைச் செலுத்த வில்லை? என்று துதித்து வணங்கிக் கண்ணீர் மல்க நின்றார்.

கமலைநாயகியும் கோபம் தணிந்து ஏ பிராணநாத! இவ்விரவில் எனது கையில் விளங்கும் இந்தத் தாமரை யானது நன்றாய் மலரும்படி இப்பொழுதே ஆகாயத்தில் சூரியனைத் தோற்றுவிப்பீராகில் எனது மனம் சாந்தி யடையும். உமது திவ்விய சக்தியையும் என் தோழியிடம் புகழவும் கூடும் என்றுரைத்தாள். இவ்வித மொழியைக் கேட்ட பரமேசனுகிய தியாகேசர் சூரியனை ஆகாயத்தில் அப்பொழுதே விளங்கும்படி செய்தார். அப்பொழுது

தேவியாரின் கையிலிருந்த தாமரையும் மலர்ந்தது. அப்பொழுது அவ்வித அற்புதச் செயல்களைக் கண்ட தேவியும் ஈசனைப் புகழ்ந்துகொண்டே தேவவேதிகையின் அருகில் ஈசனுடன் சேர்ந்து விளங்கினாள்.

அன்றிரவு அகாலத்தில் ஆகாயத்தில் தோன்றிய கதிரவனைக்கண்டு அந்நகரிலுள்ளவர்கள் சிலர் வியப்படைந்து, அகாலத்தில் சூரியன் தோற்றுவது எத்துன்பத்துக்கிடமாகுமோ என்று பயந்தார்கள். மற்று சிலர் அவ்வித சூரியனைக்கண்டு சகல காரியங்களுக்கும் தக்க சமயமாகிய காலை நேரம் நெருங்கிவிட்டதே; நாம் இந்நேரம் வரையிலுறங்கி விட்டோமே என்று சிந்தித்துக்கொண்டே விரைவாய் எழுந்திருந்து தமது வேலையை நிறைவேற்ற முயன்றனர்; சிலர் ஸ்நானம் செய்யலாயினர்; சிலர் தேவாலயத்தை யடைந்து கோபுரக் கதவைத்திறக்க முடியாமல் திகைத்துநின்று புலம்பினர். இவ்வித சமயத்தில் சூரியன் திடீரென்று மறைந்து விட்டதைக்கண்டு அத்தேசவாசிகளும் அந்நகரவாசிகளும் இவ்வித வைபவத்துக்குக் காரணத்தை யறிந்து கொள்ளமுடியாமல் திகைத்து ஈசனைத் துதித்தனர்.

## 180. கண்களை யிழக்கச்செய்த லீலை.

அகாலத்தில் சூரியன் தோன்றியதற்குக் காரணம் தெரியாத இந்திரகேது சோழமஹாராஜன் ஈசனைத் துதிசெய்துவிட்டுத் தனது ராஜஸபைக்கு வந்து ரத்தின ஸிம்மாஸனத்தில் வீற்றிருக்கையில் திரிலோக ஸஞ்சாரியான நாரதர் அங்குத் தோன்றினார்.

ராஜஸபையின் எதிரில் தோன்றிய அத்தேவரிஷியின் முன்னிலையையடைந்து அர்க்கியம், பாத்தியம், மதுபர்க்கம்

முதலான உபசாரங்களால் முறைப்படி அம்மஹாராஜனும் வேதியரும், மந்திரிமார்களும் பூஜை செய்தார்கள். முறைப்படி பூஜையைப் பெற்றுக்கொண்ட நாரதர் அம்மன்னவன் முதலானவர்களுக்கு ஆசிகூறிய பிறகு, சென்ற இரவில் சூரியன் தோற்றுதற்குக் காரணமாகிய தியாகராஜாவின் அற்புதலீலையையும் கமலைநாயகியின் பிரணயகோப லீலையையும் தேவாலயத்தில் நடந்த மற்ற விருத்தாந்தங்களையும் சாங்கோபாங்கமாய் எனது ஞானதிருஷ்டியினால் யானறிவேனென்றுரைத்து விட்டு நாரதர் தனது வீணையை மீட்டிக்கொண்டு விரைவாய் ஆகாயமார்க்கமாகச் செல்லும் பொழுது அவரது திருமேனியின் காந்தியையும் மகிமையையும் கண்டு கைகூப்பி அண்ணாந்து பார்த்திருந்த சோழனைக் கண்டு அந்நாரதர் கூறியதாவது "ஓ மஹாராஜனே! இன்னும் சில தினங்கள் செல்வதற்குள் காசி நகரியில் சைன, பௌத்த, சார்வாகாதி மதவாதங்கள் உண்டாகப் போகின்றன. அத்தருணத்தில் உனது தேசத்திலிருந்து ஒரு சிறந்த வித்வானை அனுப்பி அம்மூலமாய்த் தேவமதம் என்னும் ஈசுவரமதத்தை உலகில் நிலைநாட்டுவீர்" என்று சொன்னார்.

திடீரென்று ராஜஸபையில் தோன்றிய நாரத மஹரிஷியானவர் இவ்வாறுரைக்கக் கேட்டவர் எல்லோரும் வியப்படைந்து விரைவாய்த் தேவாலயத்தையடைந்து தியாகேசரைப் பணிந்து அற்புத சக்திக்கு இருப்பிடமே என்று பலவாறு புகழ்ந்து காவிரிதீர்த்தம் முதலியவைகளால் திவ்யாபிஷேகம் செய்துவைத்து மகிழ்ந்து தமது மனோரதங்களைப் பெற்று மகிழ்ந்தனர். நாரத மஹரிஷியின் கட்டளையைச் சிரசில் மாலைபோல் அணிந்து சோழமஹாராஜனும் தமது தேசத்தில் விளங்கும் வித்வான்களை வரவழைத்து முறைப்படி பூஜைசெய்து அவர்களில் சகல சாஸ்திரங்களிலும் நிபுணராய் விளங்கும் தேவசர்மன் என்னும் ஒருவரை விசேஷமாய்ப் பூஜித்துப் பல்லக்கில் ஏற்றி

காசி நகரத்துக்கு அனுப்பினன். அவ்வந்தணோத்தமருக்குத் துணையாக நாற்பது வித்வான்களையும் அனுப்பினன். சோழவரசனால் அனுப்பப்பட்ட தேவசர்மன் முதலிய பிராமணோத்தமர்கள் தியாகேசரைப் பணிந்து துதிசெய்து அவரது அருளால் புத்தியின் தெளிவையடைந்து விடை பெற்றுக்கொண்டு காசீநகரத்தையணுகி அங்கு விளங்கும் வாதாஸ்தான மண்டபத்தில் மத்தயானைகளின் வரவை எதிர்நோக்கி யிருக்கும் சிங்கங்கள் போல் சாஸ்திரவாத கோடிகளாகிய வித்வான்கள் கம்பீரமாகக் கர்ஜனை செய்து கொண்டு விளங்கியிருந்தார்கள்.

இவ்விதம் வாரணாசி நகரில் சிலநாள் சென்ற பிறகு உலகத்தில் விளங்கும் ஈசுவரதத்துவத்தை யொழித்துத் தமது மதத்தையே நிலைநாட்டக்கருதிய சைனமத பீடாதி பதியாகிய தர்மசக்ரன் முதலான துர்வாதிகள் அடங்கா கர்வத்தையடைந்து தமது சிஷ்யராகிய பதினாயிரம் துர் வாதிகளுடன்கூடி காசியில் விளங்கும் அவ்வாத மண்டபத் தில் பாலசூரியனைப் பனித்துளிகள் சூழ்வதுபோல தக்ஷிண தேசப் புலவர்களையும் உத்தரதேசப் புலவர்களையும் சூழ்ந்து கொண்டு அவர்களுடன் வாதச்சண்டை செய்யத் தொடங் கினார்கள். அத்தருணத்தில் தேவசர்மர் என்னும் தியாக ராஜபக்தர் தமது குலதெய்வமாகிய தியாகராஜாவின் பாத மலரையும் விச்வநாதனது பாதமலரையும் மனதில் தியானித்துக் கொண்டு மாயாவாதிகளாகிய அவ்வித சைனர்களுடனும், பௌத்தர்களுடனும், சார்வாகர்க ளுடனும் தினந்தோறும் வாதப்போர் செய்து அவர்கள் கூறும்மொழிகளை யெல்லாம்முற்றிலும் கண்டித்து விட்டார்.

அதனால் அப்புறச்சமய மதத்தோர்கள் வெட்கத்தை யடைந்து தலைகுனிந்து கர்வத்தை யிழந்து அடங்காப் பொறாமை கொண்டு அம்மண்டபத்தை விட்டுத் தமது சிஷ்யக் கூட்டத்துடன் வெளியில் செல்லும்பொழுது ஸதா

சிவமூர்த்தியையும், விசுவநாத மூர்த்தியையும் பழித்துக் கொண்டே சென்றார்கள். இவ்விதமாய் வாதத்தில் வென்று ஜயம் பெற்ற அந்தத்தேவசர்மர் என்னும் அந்தணோத்தமர் தியாகராஜரைத் தியானித்துக்கொண்டு திரும்புகையில் இப்பாபிகளைக்கண்ட எனது கண்களால் நான் மறுபடியும் தியாகராஜாவின் திருமேனியழகைக் காணமாட்டேன் ஞானக் கண்களால் காண்பேனென்று நினைத்துத் தமது இரு கண்களையும் பிடுங்கி அப்பாபிகளின் எதிரில் எறிந்து விட்டுத் தென்திசை வரலானார். இவ்விதமாய் அந்தணோத்தமர் வாதத்தில் வென்றுவரும் விஷயத்தையும் தன் கண்களைப்பிடுங்கி அப்பாவிகளின் முன்பு எறிந்த விஷயத்தையும் அசரீரியினால் அறிந்த சோழன் அவ்வந்தணோத்தமரை வரவைப் புகழ்ந்து, ஸத்தியமதஸ்தாபக! தியாகராஜபக்த என்று புகழ்ந்து உபசரித்தான்.



## 181. ஆயுளை அளித்தவனுக்கருள்செய்த லீலை.

சோழமண்டல நாதனாகிய அந்த இந்த்ர ராஜன் ஒருநாள் வேட்டையாடக் கருதி ஸ்வல்ப பரிவாரங்களுடன் சூழப்பட்டவனாய் வேட்டைக்குரிய குதிரையின் மீது ஏறிக்கொண்டு வில்லேந்திய கையுடன் காட்டில் நுழைந்து வாளிகளை எய்து மிருகங்களை அழித்துவருகையில் அம்மகாராஜனால் பிரயோகிக்கப்பட்ட ஒரு பாணமானது அக்காட்டின் ஒரு பாகத்தில் சமித், தர்ப்பை, இவைகளைக் கொண்டு போவதற்காக வந்த ஒரு வேதியன்மேல் பாய்ந்து அவனது உயிரைக் கவர்ந்துகொண்டே வெளிக்கிளம்பியது. அவ்விதம் கூர்மையான பாணத்தினால் அபகரிக்கப்பட்ட உயிரையுடைய அக்குமாரன் வேதனை பொறுக்க முடியாமல், "ஹா! ஹா! இஃதென்ன அநியாய காரியம். வேதியர் குலத்திலுதித்துக் குற்றமற்றவனாய்ப் புஷ்பம்

கோய்யவெண்ணி இக்காட்டில் நுழைந்த என்மீது இவ்வம்பு பாய்ந்து எனது உயிரைக் கவருகிறதே ; பிராமணரின் மீது அம்பு வீழும்படி நேரிட்டது ; இந்திரகேது மகாராஜனது அரசுக்கு அழகா ; ஹா தியாகராஜ ! இவ்வனத்தில் நான் இவ்விதமாய் உயிரையிழந்த சமாசாரமானது என் தாய் தந்தையருக்கு எவரால் உரைக்கக்கூடும் ? ஹா ஹா நாத ! தியாகேச !'' என்று இவ்விதமாய் அழுத கண்ணீருடன் பூமியில் விழுந்தான்.

அச்சோழ மகாராசன் அழுகுரலைக் கேட்டு விரைவாய் ஓடிவந்து பார்க்கையில் தன்னுடைய அம்பானது தெய்வச் செயலாய் குறியைவிட்டு விலகி வெகுதூரம் சென்று அவ்வந்தண குமாரன்மீது பாய்ந்து இருப்பதைக் கண்டு, "தியாகேச ! நான் பெரும் பாபியாகிவிட்டேனே. எனது அம்பானது குறியைவிட்டு விலகி இவ்வந்தண குமாரன்மீது பாய்ந்ததினால் நான் பிராமண வத தோஷத்தையடைந்தேன். இவ்வித கொடிய பாபத்திரளை நான் பல ஜன்மமெடுத்தபோதிலும் தீர்க்க முடியாதே பரம்பொருளே ! நான் யாது செய்வேன் திக்பாலர்களே ! தியாகேசனே ! நீங்களே சாக்ஷியாக இருக்கக்கடவீர்கள்.

இப்பிராமண குமாரன் புலம்பும் மொழிகளைக் கேட்டதினால் இவரது தாய்க்கும் தந்தைக்கும் மூப்பில் பணிவிடை செய்வாரெவருமில்லை எனத் தோன்றுகிறது. ஆகையால் நான் ஒருவன் காரணமின்றி இக்குமாரனை மாய்த்து அவனது தாய் தந்தையர் வாடும்படி செய்வதைக்காட்டிலும் எனது உயிரைக் கொடுத்தாவது இப்பிராமண குமாரனைப் பிழைப்பிப்பது நலமென்று யோசித்து ஓ சத்யநாத ! தியாகராஜ ! நீர் ஒருவரே இவ்வுலகங்களுக்கு நாதனாய் விளங்குவது உண்மையாகில், நான் உமது பாதாரவிந்தங்களில் ஒப்பற்ற பக்தி வைத்திருப்பது உண்மையாகில், நான் பிராமணரின்மீது பக்தி வைத்திருப்பது உண்மையாயின் எனது ஆயுளானது இந்த நிமிஷ முதல் இவ்வந்தண குமாரனை

யனுகட்டும்; என்று மூன்று தடவை உரைத்துக் கொண்டே சென்னியில் கூப்பிய கையுடன் நீர்பெருகிய கண்களுடனும் கூக்குரலிட்டு அழுதான்.

இவ் விஷயங்களை யறிந்துகொண்ட தியாகேசர் அப் பொழுது அக்காட்டின் நடுவில் அசரீரியினுல் அவ்வரசனைக் கூப்பிட்டு, உனது வேண்டுகோளின்படியே இவ்வந்தண குமாரன் பிழைப்பான்; உனது வம்சத்துக்கு ஒரு புத்திரன் உண்டாகும் வரையில் நீ உயிருடன் இருக்கும்படியும் கருணை புரிந்தேன் என்று சொன்னுர். அதைக்கேட்ட சோழனும் அக்குமாரனும் களிப்புடன் ஈசனைத் துதி செய்து நீண்ட ஆயுளையும் சிறந்த செல்வத்தையும் பெற்றுக் காட்டுத்தியிலிருந்து உயிர் தப்பிய மத்தயானைபோல் முக மூலர்ச்சியுடன் தமதிருப்பிடமடைந்து வாழ்ந்தார்கள்.



## 182. ஜடையையளித்து விவாகத்தைத் தடுத்த லீலை.

வாமனபுரியில் வாமதேவர் என்னும் ஒரு வேதியர் இருந்தார். அவருக்கு ஜாதவேதன் என்னும் குமாரன் பிறந்தான். அவ்வந்தணர் அப்புத்திரனுக்குக் காலமுறை தவருமல் ஜாதகரணம், நாமகரணம் சௌளம், உபநயநம் முதலியவைகள் நடத்தி வந்தார். அந்த ஜாதவேதனும் தக்க காலத்தில் குருகுலத்தையடைந்து குருவின் அருளால் வேதங்களையும் சாஸ்திரங்களையும், புராணங்களையும் இதிகாச ரத்தினங்களையும், ஆகமங்களையும் சாங்கமாய்க் கற்றுவருந்நாளில் ஒருநாள் அவனது குருவானவர் தனது சிஷ்யர்களுடன் புண்ணியபுரியை யடைந்தார். அத்தரு ணத்தில் மேஷ சங்கிராந்தி புண்ணிய காலமும் நேரிட்டது. அவ்வித புண்ணிய காலத்தில் அப்புண்ணிய க்ஷேத்திரத் தில் ஸ்நானதானங்கள் செய்வதற்காகவும், புண்ணிய தீர்த்

தத்தில் நீராடுவதற்காகவும், தியாகராஜரது திருமேனியைத் தர்சிப்பதற்காகவும் எண்திசைகளிலிருந்தும் கணக்கற்ற பக்தர்கள் வந்து கூடினர்.

அவ்வண்ணம் வந்து கூடிய தொண்டர்களின் பக்தி விசேஷத்தைக் கண்டும், புண்ணியபுர நாதனது திவ்விய தரிசனத்தைப்பெற்றும் உருகிய மனமுடைய அந்தஜாத வேதனென்னும் அக்குமாரன், ஓ தியாகராஜ! இப்படிப் பட்ட உமது திருமேனியின் சிறப்பை தர்சிக்காமல் எனக்கு இவ்வளவு நாட்கள் வீணில் கழிந்துவிட்டனவே; இனியாவது என் மனமாகிய வண்டானது உமது பாத மலரில் விளங்கும் பக்தியாகிய மகரந்தத்தை உண்டு களிக்கும்படி அருள்புரிவீர்; நீரே எனக்கு நற்கதியளிக்குமணி; நீரே எனக்கு முக்தியளிக்க வேண்டும். சம்சார வாழ்க்கை என்னும் வலையில் நான் நுழையாமல் உமது பாதாரவிந்த பக்தியாகிய நதியில் மூழ்கி தாபத்தைத் தீர்த்துக்கொள்ளும்படி அருள்புரிவீர். தேவர்கள் நாயகனே! நீரே எனக்கும் ஞானியர்க்கும் அழியாப் பொருள்; என்று இவ்விதமாகப் பலவிதமாய்த் தியாகேசரைத் துதித்துக்கொண்டு அது முதல் ஈசுவர பக்தியை ஹாரமாகப்பூண்டு விளங்கினன்.

வேதப் பயிற்சியும், தத்துவ ஆராய்ச்சியும், சாஸ்திரப் பயிற்சியும் முடிந்த பிறகு குருவினுல் இல்லற வாழ்க்கையில் சேரலாமென்று அனுமதிக்கப்பட்ட அந்தஜாதவேதன் தன் வீட்டிற்குத் திரும்பும்போது அவனது மனதில் தியாகராஜ பக்தியொன்று மாத்திரமே விசேஷமாய்ப் புலப்பட்டதேயொழிய இல்லற தர்மத்தில் அமர்ந்து மனைவி மக்களுடன் சேர்ந்து உலகில் வாழ்க்கை நடத்தவேண்டும் என்னும் சிந்தனை எள்ளளவும் உண்டாகவில்லை. அத்தருணத்தில் அவனது தந்தையானவர் குருகுலத்திலிருந்து கல்வியைக் கற்றுச் சிறந்த கீர்த்தியுடன் திரும்பிய குமாரனுக்கு விவாகத்தைச் செய்துவைக்க வேண்டுமென்று நினைத்துக் கன்னிகையை விசாரித்து வருகையில் அவ்விஷயத்தை

யறிந்துகொண்ட ஜாதவேதன் தனக்கு விவாகத்தில் ஆசை யுண்டாகவில்லை என்பதைப் பலவாறு தனது தந்தையிடத் தில் அறிவித்துவந்தான்.

அவ்வண்ணமிருந்த போதிலும் அவனது தந்தையான வர் வலுவில் அவனுக்கு விவாகம் செய்துவைக்க வேண்டும் என்று நிர்ணயம் செய்து ஒருவேதியரது குமாரியை ஆய்ந்து எடுத்து விவாகச் சடங்குகளைச் செய்து வருகையில் அந்த ஜாதவேதனானவன் ஆற்ரு மனமுடையவனுய்க் கொண்டு தேவாலயத்தையடைந்து தியாகராஜாவின் எதி ரில் நின்று கைகூப்பி பரம்பொருளே! எனது ஆன்மாவா னது சம்சாரவாழ்க்கையாகிய நீரஸ பூமியிலலைந்து திரியா மல் உமது பாதபங்கய நிழலிலமர்ந்திருக்கும் வண்ணம் அருள்புரிவாய் என்று நெடுநேரம் துதிசெய்துவிட்டுத் தன திருப்பிடத்தை யடைந்து அன்றிரவில் ஈசுவரத்தியானத்து டன் படுத்துறங்கினன். மறுநாட்காலையில் அவனது விவாகத்துக்குரிய காரியங்களெல்லாம் முறைப்படி நிறை வேற்றப்பட்ட பிறகு உதயகாலத்தில் அவன் எழுந்து வரும் போது தியாகேசனருளால் அவனது சிரசில் நெருங்கிய ஜடைகளும் கண்டத்திலும் கரங்களிலும் ருத்திராக்ஷமாலை களும் விளங்கக்கண்டு எல்லாரும் வியப்படைந்தார்கள்.

முனிவர்போல் விளங்கும் அவனது ஸ்வரூபத்தைக் கண்டும் அவன் உச்சரித்துக்கொண்டிருக்கும் ஈசுவர நாமங் களைக்கேட்டும் இவர் வைராக்கியத்தையடைந்து யோகி யாகிவிட்டார். இப்படிப்பட்ட இவருக்கு விவாகம் செய்து வைப்பதும் நியாயமன்று என்று எண்ணித் தமதிருப்பிட மடைந்தார்கள். தயாநிதியாகிய தியாகேசனல் அளிக்கப் பட்ட ஜடை ருத்திராக்ஷம் முதலியவைகளைத் தரித்து விளங்கும் அந்த ஜாதவேதனும் அது முதல் வைராக்கி யத்தையடைந்து ஈசுவர பக்தனுய் உலகில் சஞ்சாரம் செய்து பற்பல சிஷ்யர்களுக்குத் தத்துவோபதேசம்

செய்துவைத்து ஈசுவர தத்துவத்தை உலகில் நிலைநாட்டிப் பரஞ்சோதியுடன் ஐக்கியச் செல்வத்தை அடைந்தார்.

பிறையரவக் குறுங்கண்ணிச் சடையிறன் காண்
  பிறப்பிலிகாண் பெண்ணோடாணாயினான் காண்
கறையுருவ மணிமிடற்று வெண்ணீற்றான் காண்
  கழல் தொழுவார் பிறப்பறுக்குங் காபாலி காண்
இறையுருவக் கனவளையாளிடப் பாகன் காண்
  இரு நிலன் காண் இரு நிலத்துக் கியல்பானான் காண்
சிறையுருவக் களிவண்டார் செம்மையான் காண்
  திருவாரூரான்காண் என் சிந்தையானே.

— அப்பர் சுவாமிகள்



## 183 ஜலத்திலிருந்த கந்தர்வனுக்கருள்புரிந்த லீலை.

தியாகராஜனுடைய மகிமையைக் கேட்டு அவனைத் தர்சிப்பதற்காகக் கணக்கற்ற தொண்டர்களும், முனிவர்களும் கூட்டம் கூட்டமாய் அத்திருவாரூர் நகருக்கு வந்து கமலாலயத் தீர்த்தத்தில் நீராடித் தியாகேசரைப் பணிந்து வந்தார்கள். ஒரு நாள் அநேக பக்தர்கள் பிராம்ம முகூர்த்தத்தில் நித்திரை விட்டெழுந்து பஜனை செய்துகொண்டு அக்கமலப் பொய்கைக்கு நீராட வந்தார்கள்.

அவர்கள் அவ்வாறு அவ்வேளையில் அப்பொய்கையை யடையும்பொழுது அப்புண்ணிய தீர்த்தத்தின் நடுவில் இனிய சங்கீதத் தொனியானது கிளம்பி, தேவ—கந்தர்வ, நாரத கீதம்போல் இரு செவிகளுக்கும் அமிர்த ரஸத்தை வர்ஷித்தது. இத்தருணத்தில் இத்தடாகத்தின் நடுவில் சங்கீத ஒலி உண்டாவதற்குக் காரணம் யாது? என்று தொண்டர்கள் எல்லோரும் தேவர்கள்போல் இமைகொட்டாக் கண்களையுடையவர்களாய்க்கொண்டு இங்கு ஏதோ ஓர் அற்புதம் நடக்கப்போகிறது என்று எதிர்பார்த்திருக்கையில், அக்கமலாலயத்தின் நடுவிலிருந்து ஒரு விமானம் ஆகாயத்தில் கிளம்பியதையும், அவ்விமானத்துக்குள் பிரிய

பத்திரன் என்னும் கந்தர்வ ராஜனும், அவனது அந்தப்புர மாதரும், சில பரிஜனங்களும் அமர்ந்திருப்பதையும் அவர்கள் ஈசுவர பக்தர்களாய்க்கொண்டு தியாகராஜரது சந்தோஷத்துக்காகக் கந்தர்வகான ஸ்துதி செய்வதையும், அத்தருணத்தில் அவ்விமானமானது தியாகராஜாவின் திருக்கோயிலை வலஞ்செய்துகொண்டு விரைவாய் ஆகாயத்தில் வடதிசையைக் குறித்துச் சென்றதையும் இவைகளையெல்லாம் வியப்புடன் பார்த்துக்கொண்டிருந்த தொண்டரனைவரும் அக்கமலையில் ஸ்நானம் செய்து நித்திய கர்மங்களை முடித்துவிட்டுப் பிரபுவின் எதிரில் பணிந்துநின்று கந்தர்வ விமானம் கமலையிலிருந்து சென்றதற்குக் காரணத்தையும் அதன் வரலாற்றையும் விளம்ப வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்கையில் தியாகராஜர் அவர்கள்மீது கருணையினுல் ஆகாயவாணியை ஏவினுர்.

கேளீர் தொண்டர்களே! இப்புண்ணிய தீர்த்தத்திலிருந்து விமானம் எழும்பிய விருத்தாந்தத்தைச் சொல்லுகிறேன். முன்பு துவாபர யுகத்தின் முடிவில் பிரியபத்ரன் என்னும் கந்தர்வ ராஜன் தனது அந்தப்புர மாதருடன் வசந்தகால சோலையைக்கண்டு மதித்தவனுய் எனது முக்கிய வாஸஸ்தானமாகிய கைலாச மலையினடிவாரத்தில் ஜபம்செய்துகொண்டிருக்கும் முனிவர்களையும், பக்தர்களையும் கண்டு பரிகாசம் செய்தான். அதைக்கண்ட அக்கந்தர்வ மாதர்கள் தனது கொழுநனுகிய பிரியபத்ரனைக்கண்டு ஓ நாத! நீர் ஏன் இம்முனிவர்களின் மகிமையை யறிந்துகொள்ளாமல் இவர்களைக் குறித்துப் பரிகாசம் செய்து வருகிறீர். நீர் இப்படிச் செய்வதினுல் நமது வம்சத்துக்கே தீமை நேரிடுமே; ஆகையால் நீர் இப்பொழுதே இவர்கள் பாதாரவிந்தங்களில் வீழ்ந்து பணிந்து மன்னிப்புக் கேட்டுக்கொள்வீரென்று மொழிந்தார்கள். அவ்விதமாய் அம்மாதர்கள் கூறும் வாக்கியத்தை அசட்டை செய்த அக்கந்தர்வன் மற்ருெரு சமயத்தில் காமத்தினுல் கொழுத்த

வனுய்க் கேதார க்ஷேத்திரத்தில் எனது உற்சவ விமரிசையைக்கண்டு பக்தியை யடையாமல் பரிகாச மொழிகளைப் பகர்ந்தான். மற்றொரு சமயத்திலும் இவ்வண்ணமே எனது லிங்க ஸ்வரூபியின் மகிமையை உரைத்துக்கொண்டிருக்கும் ஒரு பக்தரது முன்பில் நின்று தனது வீணுகானத்தை மீட்டிக்கொண்டு இந்த ஸ்வரத்தின் மகிமையைக் கேட்பீரென்று சொன்னுன்.

இவ்விதமாய்ப் பற்பல சமயங்களில் அந்தக்கந்தர்வன் என் விஷயத்திலும் எனது தொண்டர்விஷயத்திலும் அபசாரத்துக்காளாகி வருகையில், ஒருநாள் ஒருமுனிவர் இக்கந்தர்வனது அஞ்ஞான மோகத்தைத்தீர்த்து மெய்ஞ்ஞானத்தையுண்டுபண்ணக்கருதி அவனைக் கூப்பிட்டழைக்கையில் அக்கந்தர்வன் அவ்வுரைக்குட்படாமல் திரியும் பொழுது அதைக்கண்ட அம்முனிவர் ஓ கந்தர்வனே! நீ ஈசுவரதத்துவத்தைச் சிறந்த பொருளென்று எண்ணுமல் காமரஸத்தையே முக்கியப்பொருளாய் நாடிவருவதாலும், ஈசனிடத்திலும், ஈசுவர பக்தர்களிடத்திலும் பற்பல விதமாய் அபசாரப்பட்டு வருவதாலும் நீ அநேக ஆயிரவருஷகாலம் உனது விமானத்துடனே புண்ணியத் தீர்த்தத்திலிருந்து பிறகு சாதுக்களின் தரிசனத்தினுலும், புண்ணிய க்ஷேத்திர வாசத்தினுலும் ஈசுவர பக்தியையடைந்து உனது திவ்விய சரீரத்துடன் வெளிக்கிளம்பி உனதுலோகம் செல்வாய் என்று சாபமளித்தார்.

ஆகையினுல் அம்முனிவரின் சாபத்தினுல் அக்கந்தர்வன் இதுவரையில் இக்கமலாலயத்தினடியில் விமானத்துடன் இருந்து உங்களைப்போன்ற சிறந்த பக்தர்கள் அவ்வப்பொழுது ஸ்நானம் செய்கையில் உச்சரிக்கும் மகாமந்திர நாம சங்கீர்த்தனங்களைக் கேட்டுப் பாவத்திரளைக் களைந்து புண்ணிய சரீரமாகிய தனது கந்தர்வ சரீரத்தைப் பெற்றுக் கானத்தினுல் என்னைத் துதி செய்துவிட்டுத் தனது பதவியைப் பெற்றுன். ஆதலால், கேளீர் பக்தர்

களே! எனது பக்தர்களிடத்திலும் எனது லிங்க ஸ்வரூபியி னிடத்திலும் அபசாரம் செய்கிறவர்களுக்கு இவ்விதமாய்ச் சாபங்களும், பாவசரீரமும் கிடைக்கும் என்று ஆகாய வாணி மொழிந்ததைச் செவியிற்கொண்ட பக்தர்கள் பரமானந்தத்தையும் நற்புத்தியையுமடைந்து விளங்கி னுர்கள்.

## 184. வடத்தைக் கல்லாக்கிய லீலை.

சிதம்பர க்ஷேத்திரத்தில் விளங்கும் பரம்பொருளைத் தர்சிக்க வேண்டும் என்று கணக்கற்ற பக்தர்கள் எண் திசைகளிலிருந்தும் வந்து கூடிய பொழுது வஞ்சகராகிய சில சைனர்கள் தமது குருவுடன் அச் சிதம்பரத்தை யடைந்து அந்த க்ஷேத்திரத்தின் வடக்குத்திக்கில் விளங்கும் ஒரு வடவிருக்ஷத்தினடியில் நின்றுகொண்டு சிவபக்தர்களை வலுவில் கூப்பிட்டழைத்துத் தமது சைனமதத்தின் சங்கே தங்களைச்சிறப்பாகச் சொல்லிப்புகழ்ந்தும், சைவமதத்தின் தத்துவங்களையிகழ்ந்தும், போதாயனர், காச்யபர், வியாசர் முதலான மகரிஷிகளால் இயற்றப்பட்ட தரும சாஸ்திரங் களின் மர்மார்த்தங்களைப்பலவாறு கண்டித்துத் தூஷித் தும் ஆர்வாரம் செய்தார்கள்.

அவ்வாதிகள் செய்யும் அட்டகாசங்களைக் கண்டு பயந்து நடுங்கிய மனமுடைய தொண்டர்களில் ஒருவராகிய சதாநந்தர் என்னும் தீக்ஷிதர் கண்ணீர் மல்கநின்று நடன மூர்த்தியின் சன்னிதானத்தை அடைந்து அவ்வாதிகளின் துஷ்டச் செயல்களை அழிக்கவேண்டுமென்று வேண்டிக் கொண்டார். அத்தருணத்தில் ஆகாயத்தில் தோன்றிய ஆகாயவாணியினுல் ஏவப்பட்டவராய்த் திருவாரூரை யடைந்து தியாகராஜனது எதிரில் பணிந்து துதி செய்து ஓ பரம்பொருளே! ஸத்திய ஸ்வரூபியே! நாரதர் முதலி

தேவரிஷிகளாலும், வேதாந்தத்திலும் ஸ்தாபிக்கப்பட்ட உமது சத்திய ஸ்வரூபத்தைப் புறச்சமயவாதிகள் குலைத்துக்கொண்டு வருகிறார்களே இப்பாவிகளின் மதக் கொழுப்பை அடக்கலாகாதா; இத்தருணத்தில் சைன மதத்தோர்கள் தில்லைப்பதியை யடைந்து உமது ஸ்வரூபச் சிறப்பைத் தூஷித்துக் கண்டித்து வருகிறார்களே; என்று முறையிட்டழுது நின்றார்.

அந்தச சதாநந்த தீக்ஷிதர் தியாகநாதனது எதிரில் நின்று அஞ்சலி செய்துகொண்டு வேண்டுகையில் ஸத்திய ஸ்வரூபியாகிய தியாகராஜர் ஆகாயவாணியின் மூலமாக உரைத்ததாவது :—"ஓ வேதாந்த தீக்ஷிதரே! உமது மனக் கருத்தையும் அங்குச்சிதம்பர க்ஷேத்திரத்தில் புறச்சமய வாதிகள் செய்துவரும் துஷ்டச்செயல்களையும் யான் அறிவேன். ஒவ்வொரு யுகங்களிலும் அசுரர்களாலும் ராக்ஷஸர்களாலும் எனக்கும் எனது தொண்டர்களுக்கும் துன்பம் விளைவிக்கப்படும் தருணங்களில் நான் பற்பல உபாயங்களினால் அவர்களை அழித்துத் தர்ம மார்க்கத்தையும் ஸத்திய ஸ்வரூபியின் சிறப்பையும் உலகில் நிலைநாட்டி வருகிறேன். இத்தருணத்திலும் அந்தச் சைனர்கள் வேதப்

கங்கணம்

ம பதினெட்டு நாள்வரையில்

செய்து வருவார்கள். எமது பக்தராகிய நீங்களெல்லோரும் கூட்டமாய்க்கூடி சிதம்பரக்ஷேத்திரத்தின் வருணதிசையில்

ம் வட ல

கடவீர்கள். அந்தப்பதினெட்டாவது நாளில் அவர்களின் வாதப்போர் முடியும் தருணத்தில் நானே அவர்களையழிக்கப்போகிறேன். அத்தருணத்தில் எனது ஸத்திய ஸ்வரூபம் வெளியாகிவிடும்" என்று சொன்னார்.

அந்தச் சதாநந்ததீக்ஷிதர் மிகவும் சந்தோஷமடைந்து பலவாறு துதிசெய்து திருக்கோயிலை வலஞ்செய்து வெளியில்வந்து அந்நகரில் விளங்கும் ராஜசபையை யடைந்து

தியாகேசர் அசரீரி வாக்கினுலுரைத்த விஷயத்தை அம் மகாராஜனுக்கு அறிவித்துவிட்டு வெகுவிரைவாய்த் தில்லைப்பதியில் வந்து கர்மானுஷ்டானங்களை முடித்துக் கொண்டு அப்பதினெட்டாவது தினத்தில் அவ்வடவிருக்ஷத் தினருகில் அநேக பக்தர்களுடன் வந்து நின்றார். அத் தருணத்தில் அச்சோழவரசனும் அநேக பண்டிதர்களையும், அநேக பக்தர்களையும் அழைத்துக்கொண்டு அங்குவந்து

இவ்விதமாய் அத்தினத்தில் அவ்வடவிருக்ஷத்துக் கருகில் அச்சோழவரசனும் எண்திசையிலிருந்து கணக் கற்ற தொண்டர்களும் முனிவர்களும் வந்து கூடியதைக் கண்ட அச்சைனர்கள் வெகுசந்தோஷத்தை யடைந்து இவர்களெல்லோரும் இன்றையதினத்தில் தமது மதத்தில் சேர்ந்துவிடுவார்களென்று நம்பித் தமது மதக்கொள்கை களைப் புகழ்ந்தும் சிவமதத்தின் சிறப்பைத் தூஷித்தும் நின்றார்கள். பரமேசனுடைய பக்தர்கள் அனைவரும் இப் பாவிகளுக்கு இத்தருணத்தில் எவ்வித அழிவு நேரிடப் போகிறதோ? பார்த்துக் களிப்போமென்று நினைத்துப் பொறுமையுடன் நிற்கையில் அச்சைனர்கள் தமது மதத் தின் உபந்யாசத்தை முடித்து ஆனந்தக் கண்ணீர்விட்டு ஜினனைத்தொழுது, ஓ ராஜமார்த்தாண்டனே! தொண்டர் களே! நீங்கள் இப்பொழுது ஜினநாதனது பாதமலரைச் சென்னியிலணியுங்கள் என்றுரைக்க முயன்றார்கள். அத் தருணத்தில் சகல தேவ தேவனுகிய தியாகேசர் தனது திவ்விய சக்தியினுல் அவ்வட விருக்ஷத்தையும் அம்மரத்தின் கீழ் நின்றுகொண்டு பொய்ம்மதச் சிறப்பைப் புகழ்ந்து கொண்டிருக்கும் அச்சைனர்களையும் கல்லாகும்படி செய் தார். நிமிஷ நேரத்துக்குள் அம்மரமும் அச்சைனர்களும் கல்லாய் நிற்பதைக்கண்ட பக்தர்களனைவரும் இன்றுடனே இப்புறச்சமயப் பாவிகள் மடிந்தார்கள். இவ்விதமாய் இவர்களைக் கல்லாகும்படி சபித்தது ஸர்வலோக நாதனுகிய

தியாகராஜனுகவே இருக்கவேண்டும் என்று ஈசனைப் புகழ்ந்துகொண்டு தமதிருப்பிடமடைந்தார்கள்.



## 185. சிஷ்யன் சாபத்தை நீக்கிய லீலை.

அமோகதாஸர் என்னும் சிஷ்யர் ஒருவர் வாசஸ்பதி தீக்ஷிதரிடமிருந்து வேதாத்தியயனங்களைக் கற்றுவருகையில் அந்தத் தீக்ஷிதர் அநேக வருஷ காலம்வரையில் அந்தச் சிஷ்யனுக்குப் பரமேச ஸம்ஹிதைகளையும், சைவாகமங்களின் மகிமைகளையும், தியாகராஜாவின் பிரபாவங்களையும் உபதேசம் பண்ணிக்கொண்டு வந்தார். அதனுல் அந்தச் சிஷ்யனுக்கும் குருவுக்கும் ஆனந்தம் அளவற்றதாய் வளர்ந்துவரவே ஈசுவர பக்தி ரஸத்தை ஜீவனுதாரமாகக் கொண்டு அவர்கள் மேன்மேலும் சாஸ்திரப் பிரவசனத்தைச் செய்துகொண்டு வந்தார்கள்.

ஒரு நாள் அந்த வாசஸ்பதி தீக்ஷிதர் ஈசுவர பக்தி விஷயமாய் அச்சிஷ்யனது மனதைப் பரீக்ஷிக்க வேண்டுமென்று நினைத்து எவ்வெவ்விதமாய் ஈசுவர மகிமையைப் புகழ்ந்தாரோ? அவ்விதமாகவே நாடோறும் கொஞ்சம் கொஞ்சமாய் ஈசுவரனது திவ்விய சக்திகளைப்பற்றி வியாஜ நிந்தனையாகவும் சிற்சில இடங்களில் விரோதார்த்தமாகவும் மொழியலானுர். அதனுல் அச்சிஷ்யருக்குக் கொஞ்சம் கொஞ்சமாக வருத்தம் உண்டாயிற்று. அவ்விதமிருந்த போதிலும் அச்சிஷ்யர் தனது சிஷ்யத் தன்மையை மீறி நடவாமலும் அக்குருவுக்கு மறுமொழி கூருமலும் சிலநாள் வரையில் கேட்டுவந்தார். தினந்தோறும் அந்தத் தீக்ஷிதர் இவ்வாறுரைக்கவே அச்சிஷ்யர் அவ்வித நிந்தனைகளைக் கேட்டு மனந்தாளாதவராய்க் கடுஞ்சினத்தினுல் பெருமூச்சு விட்டுச் சினம்கொண்ட உரகம்போல் சீறி அக்குருவைப் பார்த்துச் சாபமளிக்கவும் மனந்துணியாதவராய், அவர்

விளம்பும் ஈசுவர விஷயமான கொடுமையான மொழிகளைக் கேட்டுச் சகிக்கவும் முடியாதவராய் அத்தருணத்தில் செய்யவேண்டிய காரியத்தையும் அறிந்துகொள்ளாதவராய்ப் பரிதபித்தார்.

ஞான திருஷ்டியினால் அச்சிஷ்யரது மனக் கருத்தையறிந்துகொண்ட அந்த வாசஸ்பதி தீக்ஷிதரானவர் மறுநாள் காலையில் அமோகதாஸரை அழைத்துக்கொண்டு உதயகால ஸ்நானம் செய்வதற்காக நதிக்குப் போய் அங்கு அனுஷ்டானங்களை முடித்துவிட்டுத் தமதிருப்பிடத்துக்குத் திரும்பி வருகையில், ஈசனே உலகிலுள்ள பாவிகளுக்கு மேன்மேலும் பாவ புத்தியையளித்து நரக வேதனையையுண்டுபண்ணுவது நியாயமாகுமா? என்று தொடங்கித் தூஷணையாகக் கூறுகையில் அம்மொழிகளைக் கேட்டு ஆற்ற மனமுடைய அந்தச் சிஷ்யன் சென்னியில் அஞ்சலி செய்து, தியாகேச! வேத விளக்கே! எனது குருவானவர் நெடுநாளாய் உமது மகிமையைப்பற்றிப் பழித்துவருவதை நான் இதுவரையில் சகித்துவந்தேன். தினந்தோறும் தூஷித்து வருவதால் நான் இப்பொழுது இவருக்குச் சாபமளிக்கப் போகிறேன். சதாசிவ ஸ்வரூபியே! உமது பாத கமலத்தில் எனக்குப் பக்தியிருப்பது உண்மையாயின், நீரே உலகுக்கு மூலகாரணமாய் விளங்குவது சத்தியமாயின் நான் கொடுக்கும் சாபமானது எனது குருவாகிய இத்தீக்ஷிதருடைய சென்னியை இருபிளவாகச் செய்யட்டும் என்று மகாமந்திரங்களை ஜபித்துத் தனது குருவிற்குச் சாபத்தைக் கொடுத்தார்.

இவ்விதமாய் அந்தச் சிஷ்யர் பரமேசனது பிரபாவ தூஷணைகளைக்கேட்க மனந்தாளாதவராய்க் கோபித்துத் தியாகராஜரையே தியானித்துச் சாக்ஷியாகக் கூப்பிட்டுச் சாபமளிக்கையில் அவ்விஷயத்தைப் பார்த்துக்கொண்டிருந்த அந்தத்தீக்ஷிதர் அப்பொழுது தியாகேச! நான் உமதுபாதத்தில் பக்தி வைத்திருப்பதற்கு நீரே சாக்ஷி;

நான் எனது சிஷ்யனுகிய இவனது மனதைப் பரிசோதிக்க எண்ணி இவ்வாறு உமது மகிமையைத் தூஷித்தேனே தவிர வேறில்லை; இதற்கும் நீரே சாக்ஷி; ஆகையால் எனது சிஷ்யன் கொடுத்தசாபம் என்னிடத்தில் பலிக்காமல் இருக்கும்படி அருள்புரிவீரென்று வேண்டி நின்றார். இவ்விதமாய் ஓரே காலத்தில் அக்குருவும், அச்சிஷ்யரும் சாபமளித்ததற்கும் சாபத்தைத் தடுக்கவேண்டுமென்பதற்காகவும் அவ்விருவர்களால் பிரார்த்திக்கப்பட்ட தியாகராஜர் அத்தருணத்தில் ஆகாயவாணியை ஏவி உரைத்ததாவது:— "கேளாய் அமோகதாஸ! உனது மனதைப் பரிசோதிக்க வேண்டுமென்றே உனது குருவானவர் இவ்வண்ணம் என்னைப்பழித்தாரேயல்லது வேறில்லை. ஆதலால் நீ யளித்த சாபமானது உனது குருவினிடம் பலிக்காமல் போகக்கடவதென்று நான் அருள்புரிந்தேன். ஆகையால் நீ கற்ற சாஸ்திரஞானங்களைப் பற்றியும், நீ எனது பாதகமலத்தில் ஒப்பற்ற பக்தி வைத்திருப்பதைப் பற்றியும் நான் மிகவும் சந்தோஷமடைகிறேன். இதுமுதல் நீங்களிருவரும் லோகக்ஷேமத்துக்காக மன ஒற்றுமையை யடைந்து எனது பக்தியுடன் விளங்கி மேன்மை எய்துவீர்கள்' என்று அசரீரி சொல்லக்கேட்ட அவ்விருவரும் தியாகராஜரது திவ்விய கருணையைப்பற்றி போற்றி மகிழ்ந்தார்கள்.



## 186. பைசாச பாஷையினுல் பேசிய லீலை.

சுகநாஸன் என்னும் வைசிய குமாரன் ஒருவன் தனது தந்தையிடமிருந்து உத்தரவு பெற்றுக்கொண்டு சில தோழருடன் காட்டுக்குச் சென்று அங்குள்ள வேடரிடத்திலிருந்து மான்தோல்களை வாங்கிக்கொண்டு வரலாமென்று

னைத்துக் காட்டிற்குச் சென்றான். அவ்வைசிய குமாரனும் அவனது தோழரும் காட்டுக்குச் செல்லும்பொழுது அங்குச் சிற்சில இடங்களில் மணலில் மான்கள் விளையாடிய அடையாளங்களையும், புலி கரடிகள் சென்ற அடையாளங்களையும் கண்டு மகிழ்ந்தும் வியப்படைந்தும் வெகு தூரம் சென்று அக்காட்டில் சஞ்சரிக்கும் வேடர்களிடமிருந்து தாம் விரும்பிய மான் தோல்களையும், கஸ்தூரிகளையும் வாங்கிக் கொண்டு தமதிருப்பிடத்துக்குத் திரும்பி வருகையில் அவ்வைசிய குமாரன் ஒரு தடாகக்கரையில் தண்ணீர் அருந்தும்பொழுது அவனது தோழர்கள் அவனைத் தனிமையாய் விட்டுவிட்டுத் தமதிருப்பிடமடைந்தார்கள்.

அவ்விதமாய் அக்காட்டில் தோழர்களால் விடப்பட்ட அவ்வைசிய குமாரன் வழியை யறியாமல் அக்காட்டிலேயே இங்குமங்கும் அலைந்து திரிந்து தமது இருப்பிடம் செல்லும் வழியையடையாமல் மனம் வாடி அன்றிரவில் பசி தாகத்தினால் கடுந் துன்பத்தை யடைந்து மறுநாட் காலையில் ஒரு வேடனைக் கண்டு அவனால் காண்பிக்கப்பட்ட வழியே சென்று அக்காட்டிலுள்ள ஒரு வேடச் சேரியையடைந்து அவர்களுடனேயே வெகுகாலம் வரையில் தங்கியிருந்து வாசஞ்செய்யலானான். அந்த நீச சாதி வேடர்களுடன் அவ்வைசிய குமாரன் வாசஞ்செய்யத் தொடங்கியபடியால் அவ்வேடர்கள் செய்வது போலவே வைசிய குமாரனும் பற்பல ஜீவ வதைகளைச் செய்யலானான். தனது ஜாதிக்குரிய வியாபாரத் தொழிலையும், தனதிருப்பிடத்தையும் விட்டுவிட்டு வேடர்போலவே கையில் பிடித்த வில்லுடனே காட்டிலுள்ள ஜந்துக்களையடித்துக் கொல்லுவதும் ஜீவ வதை செய்வதுமாய் நெடுநாள் வரையிலிருந்து முடிவில் வழிதப்பி அக்காட்டில் நுழைந்துவந்த பிராமணனையும் கொன்று அவ்வைசிய குமாரன் பிசாசு ஜன்மத்தையடைந்தான். மானிட ஜன்மத்தில் மகா பாவங்களைச் செய்து

உயிரையிழந்து பிசாசு ஜன்மத்தையடைந்த அவ்வைசிய குமாரன் வெகுநாள் வரையிலும் காடுகளிலும், மலைகளிலும், தோப்புகளிலும் முள் நெருங்கிய மரங்களிலும் வசித்துவந்தான்.

ஒரு நாள் வைசிய குமாரனாகிய பிசாசானது தெய்வச் செயலாய் பாடலீவனம், காளஹஸ்தி, சோணகிரி முதலான திவ்விய நகரியினருகில் சஞ்சாரத்தை யடைந்து பூர்வ ஜன்மத்தில் செய்த தியாகராஜ பக்தியினால் அப்பிசாச ஜன்மத்திலும் நற்புத்தியையடைந்து ஒவ்வொரு க்ஷேத்திரத்திலுமுள்ள திவ்விய லிங்க ஸ்வரூபங்களின் தர்சனத்தைப் பெற்றுக்கொண்டே திருவாரூர் நகரையடைந்தது. அந் நகரத்தையும் அதில் விளங்கும் தேவாலயத்தையும் கண்டவுடனே அப்பிசாசுக்குத் தியாகேசரிடத்தில் முன் ஜன்மத்
ந்த பக்தியைக் காட்டிலும் அப்பிசாச ஜன்மத்தில்
பக்தி உண்டாயிற்று. அவ்விதமாய் தியாகேசரிடத்தில் பக்தியையடைந்த அந்தப் பிசாசானது தியாகராஜரது திருவிழாவுக்காக வேலைக்காரர்கள் பந்தல் மண்டபம் அலங்கரித்தல் முதலியவைகளைச் செய்ய ஆரம்பிக்கையில் ஒரே இரவில் அவ்வித வேலைகளை எல்லாம் வெகு அழகாய் முடிக்க ஆரம்பித்தது. மறுநாட் காலையில் முழு வேலையும் முடிக்கப்பட்டிருப்பதைக் கண்ட வேலைக்காரர்கள் வியப்படைவார்கள்.

இவ்விதமாய் அப்பிசாசானது வேலைக்காரர்கள் பத்துப்பதினைந்து தினங்களில் செய்யக்கூடிய கடின வேலைகளையெல்லாம் ஒரே இரவில் முடித்து வந்தது. சிற்சில சமயங்களில் அப்பிசாசானது மற்று சில பிசாசங்களை அழைத்துக்கொண்டு வந்து தமது மிக்க புஜபலத்தினால் ஒரே இரவில் சில மண்டபங்களைக் கட்டிவைத்தல் மற்றும் சில சமயத்தில் ஒரே இரவில் ராஜவீதிகளில் நெடிய பந்தல்களை அமைத்தல், தோட்டங்களிலிருந்து நானாவித புஷ்பங்களைக்

கூடை கூடையாய்க் கொண்டுவருதல் முதலான அமானுஷ வேலைகளை வெகு அழகாய்ச் செய்து வந்தது. மறுநாள் உதய காலத்தில் ஜனங்களெல்லோரும் அவ்வித அற்புத வேலைகளைக் கண்டு வியப்படைந்து இவ்வித வேலைகளைச் செய்கிறவர் யார்? என்று அறிய முடியாமல் அரசனிடம் தெரிவித்தார்கள்.

இவ்வற்புதச் செயல்களைச் செய்துவருகிறவர்கள் தேவர்களா; தனவந்தர்களா; சித்தர்களா; யாராக இருக்கக் கூடும்? என்பதைக்கண்டறிய வேண்டுமென்று அரசன் ஒருநாள் நடுஇரவில் நகரசோதனைக்காக மாறுவேஷத்துடன் வீதிகள் தோறும் சஞ்சரித்துக் கொண்டே தேவாலயத்தருகில் வரும்பொழுது ஆகாயத்தில் அநேக பிசாசுகள் நின்று வணங்கித் தியாகேச! பரிமளமுள்ள சந்தன மரங்கள் எவ்விடத்திலிருக்கின்றன. அவ்விடத்தைக் சொல்லுவீராகில் நாங்கள் இப்பொழுதே அம்மரங்கள் எல்லாவற்றையும் வேருடன் பிடுங்கி வருவோம் என்றுரைத்துக்கொண்டிருப்பதையும் அவைகளிடத்தில் கருணைசெய்து அப்பிசாசங்களின் மூலமாயும் தனது பணிவிடைகளைச் செய்துகொள்ளக்கருதிய தியாகராஜர் அப்பிசாச பாஷையினலேயே அவ்வித மரங்கள் இருக்குமிடத்தைக் குறிப்பிட்டு மொழிவதையும் கேட்ட சோழன் வியப்படைந்து இனி இங்கு நடக்கும் விஷயங்களையும் கவனிப்போமென்று நினைத்து உதயகாலம் வரையில் தங்கியிருந்தான்.

## 187. கற்புக் கெடாமல் மகளைக் காத்த லீலை.

ஒருநாள் ஒரு சூத்திரக் கிழவியானவள் தனது மகளை அழைத்துக்கொண்டு மருமகள் வீட்டுக்குச் செல்லவேண்டுமென்று புறப்பட்டுச் செல்லுகையில் சகல ஆச்சரியங்களுக்கும் இருப்பிடமாகிய திருவாரூர் நகரமானது அவர்களது வழியில் தோன்றிற்று. வெகு தூரத்தில் வரும்

பொழுதே ஆகாயத்தை அளாவியதாய் மிகவும் கம்பீர மாய் விளங்கும் கோபுரங்களின் தோற்றத்தைக் கண்டு களிப்படைந்த அக்கிழவியும் அவளது மகளும் கோட்டை வாசலின் வழியாய்ச்சென்று அத்திருவாரூர் நகர வீதிகளின் சிறப்பைப் பார்த்துக்கொண்டே பொற்கோயிலின் எதிரில் சென்று தியாகராஜ மூர்த்தியை மனதில் தியானித்துக் கொண்டே பணிந்துவிட்டு மறுபடியும் தனது வழியைப் பற்றிக்கொண்டே தென்திசையை நோக்கிச் சென்றார்கள்.

இவ்விதமாய் அவ்விருவர்களும் தியாகேசரைப் பணிந்துவிட்டுச் செல்லும்பொழுது அவர்களது வழியில் பகலோனும் தன்னுடைய கிரணங்களையெல்லாம் அடக்கிக் கொண்டு அஸ்தமன கிரியையடையும் தறுவாயிலிருந்தான். அவ்விதமாய் அந்திநேரம் தோன்றிய சமயத்தில் பறவை களும், பசுக்களும் மற்றுமுள்ள பிராணிகளும் தமது இருப் பிடத்துக்குத் திரும்புவதைக் கண்ட அவ்விரு மாதர்களும் தாம் அடையக்கூடிய இடமானது இன்னும் இரண்டு காத வழிக்கு மேல் இருப்பதாலும் அந்திநேரம் தோன்றிய தாலும் அவ்விரவை எங்குக் கழிக்கலாமென்று யோசனை செய்துகொண்டே சென்றார்கள். அவர்களுடைய கண் களுக்குச் சமீபத்தில் கிராமம் இருப்பதாகத் தோற்றவில்லை. அதனால் என் செய்வோமென்று திகிலையடைந்து மந்தகதி யாய் சென்று கொண்டிருக்கையில் காட்டில் திரியும் துஷ் டர்கள் சிலர் அவர்களது வழியில் துணைபோல் தோன்றி நீங்கள் இருவரும் இவ்விரவில் எங்களது குடிசையில் தங்கி யிருந்து மறுநாட்காலையில் உங்கள் வழியைப் பற்றிச் செல் லலாம் என்று அவர்களை அழைத்துக்கொண்டுபோய் தங்கள் வாசஸ்தானத்தை அடைந்து சிற்சிலவிதமாய்ப் பேசத்தொடங்கினார்கள்.

அவர்களின் பேச்சுக்களில் சந்தேகத்தை யடைந்த அக்கிழவியானவள் ஓ தியாகராஜரே! உமது மகிமையைப்

பலவாறு புலவர்களும் தொண்டர்களும் புகழ்ந்துகொள்ளு கிறார்கள். நீச சாதியில் பிறந்த நான் உமது மகிமையை அறியவில்லை. இத்தருணத்தில் நானும் எனது மகளும் நடு வழியில் இத்துஷ்டர்களின் பேச்சினால் மனம் தடுமாறுதலை யடைகிறோமே; எனது மகளின் கற்புக் கெடாமல் காப் பது உமது கடமை: உம்மையே நாங்கள் முழுமையிலும் நம்பினோம்; தியாகேச! இத்துஷ்டர்களிடமிருந்து இன்றிர வில் நீர் எனது மகளைக் காப்பாற்றாவிடில் நாங்களிருவரும் உயிரையிழப்பதாகவே துணிவு செய்தோமென்று தமது மனதில் ஈசனைச் சற்றுத் தியானித்துத் தியாகராஜரையே நம்பிக்கொண்டு அத்துஷ்டர்கள் மொழியும் துஷ்ட மொழி களுக்கு நியாய மொழிகளையே மறுமொழியாகக் கூறிவந் தார்கள். இவ்விரு மாதர்களும் ஈசனையே சரணென நம் பியபடியால் ஸர்வ ரக்ஷகனாகிய தியாகராஜர் துஷ்டர் களுடைய கண்களுக்குப் புருஷர்களாகத் தோன்றும்படி செய்தார் இவர்களை. அத்துஷ்டர்களுக்கு இவர்கள் புரு ஷர்களாய்த் தோன்றவே அவர்களுக்கு ஏற்பட்ட காமக் கருத்தும் மாறிவிட்டது. அவர்களை அந்தத் துஷ்டர்கள் அந்த நிமிஷம் முதல் புருஷர்கள் என்றே நினைத்து நற்புத்தி யையடைந்து உண்ணக் கனிகள் அளித்து அவர்களால் சொல்லப்பட்ட நற்கதைகளைக் கேட்டுக்கொண்டே அன் றிரவைக் கழித்தார்கள். மறுநாட் காலையில் கீழ்வானம் வெளுக்கும் சமயத்தில் அம்மாதரிருவரும் தமது வழியைப் பற்றிக்கொண்டு செல்லும்பொழுது துஷ்டர்கள் தம்மிடத் தில் கொண்டிருந்த கெட்ட புத்தியைப்பற்றியும், பிறகு அவர்கள் திடீரென்று மாறிய மனமுடையவர்களாய்த் தம்மைப் புருஷர்களென்றே நினைத்துக் கனியளித்து உபச ரித்து வந்ததைப்பற்றியும் பேசிக்கொண்டு செல்லும் தரு ணத்தில் அவ்விரு மாதரும் தம்மை இவ்வாறு காப்பாற்றி யவர் தியாகேசரே என்று மகிழ்ந்து தமதிருப்பிடம் சென்று சிறப்புடன் வாழ்ந்தார்கள்,

## 188. யௌவனத்தை யிழக்கச்செய்த லீலை.

அத்துஷ்டர்கள் நற்புத்தியையடைந்து தியாகராஜரைத் தர்சிப்பதற்காகப் புறப்பட்டு வந்தார்கள். அவர்கள் வரும் வழியில் சம்பகாரண்ணியத்தின் ஈசான பாகத்தில் குமேதக குண்டமென்னும் ஒரு புண்ணிய தீர்த்தத்தினருகில் ஒரு பர்ணசாலை அமைத்துக்கொண்டு தவம் செய்து கொண்டிருக்கும் ஈசுவரிபோன்ற ஒரு பெண்ணைக் கண்டார்கள். அப்பெண்மணியானவள் மூன் மூன்று ஜன்மங்களிலும் பார்வதி தேவியின் பாதமலரைப் பற்பல மலர்களால் பூசித்துவந்த ஒரு வைசியப் பெண். அவள் நாலாவது ஜன்மத்தில் பாண்டிய ராஜன் மகளாய்ப் பிறந்தாள்.

அப்பெண் பிறந்தவுடனே அப்பாண்டிய ராஜன் அரண்மனையில் நேரிட்ட பெரிய விபத்தைக் கண்ட தோழியர் அக்குழந்தையை மார்புடன் அணைத்துத் தமதிருப்பிடத்துக்குக் கொண்டுவந்து போஷணைசெய்து வந்தார்கள்.

வளர்பிறைச் சந்திரன்போல் ஒளி வீசப்பெற்றவளாய் வளர்ந்துவந்த அப்பெண்மணியானவள் ஏழாவது வயதையடைந்தவுடன் பார்வதி தேவியின் பாத பக்தியை ஹாரமெனப்பூண்டும் முன் ஜன்மங்களில் செய்த புண்ணிய வசத்தினால் ஈசுவர தத்துவத்தை யெளிதில் அறிந்துகொண்டும், தியாகராஜரையும் அம்பிகையையும் தவத்தினால் களிக்கச் செய்து அவர்களிடமிருந்து நல்வரம் பெற்றுத் தனக்குத் தகுந்த யுவராஜனை மணந்துகொள்ள வேண்டுமென்னும் கருத்துடனே அப்புண்ணியத் தீர்த்தத்தினருகில் பர்ணசாலை அமைத்துக்கொண்டு பரமேசுவரனைக் குறித்துத் தவஞ்செய்து வந்தாள். மதிமுகி என்னும் அப்பெண் மணியானவள் முனிவர்கள்போல் உணவைச் சுருக்கி ஐம் பொறிகளையும் வென்று மரவுரியுடை தரித்து, விபூதி ருத்திராக்ஷங்களை யணிந்தவளாய்க் கண்டோர் மனதைக் கவரக்கூடிய ரூபலாவண்ணியத்தை யுடையவளாய்த் தவம்

செய்துகொண்டிருப்பதை அந்த வஞ்சகர்கள் கண்டார்கள்.

அவர்களில் ஒருவன் அந்த மதிமுகியைக் கண்டு காம பாணங்களுக்கு இலக்காகி நின்று பூர்வ துஷ்டத்தன்மையி னுல் அவளது தவத்தை யழித்து அவளை அடைய வேண்டு மென்று முயன்முன். அத்துஷ்டனுடைய தீச்செயல்களைக் கண்ட மற்றவர்கள் ஆ! ஆ! தோழ! நீ அப்பெண்மணி யின் அருகில் செல்லாதே; அவள் ஈசனைக்குறித்துத் தவம் செய்கிருள். இச்சமயத்தில் நீ நெஞ்சினுலும் நினைக்காதே; நாமெல்லோரும் நமது கெட்ட குணங்களை முற்றிலும் விட்டுவிட்டுச் சிவபக்தர்களாய் ஈசனைக் காணக்கருதிச் செல்லுகையில் இம்மாதை நீ பழிக்க முயலாதே; சிலதினங் களுக்குமுன் ஓர் இரவில் நமது இருப்பிடம் வந்துசேர்ந்த இரண்டு மாதர்களை ஈசன் காத்த விதத்தை நீ மறந்துவிட் டாயா? அவ்வித ஈசனே இப்பெண்மணியையும் ரக்ஷிப்பார் என்று நாங்கள் நினைக்கிறோம் என்று அவர்கள் கூறிய வார்த்தைகளை அலக்ஷ்யம் செய்து அந்தத்துஷ்டன் அம் மதிமுகியினருகில் நெருங்கலானுன்.

அவ்விஷயத்தை யறிந்துகொண்ட அம்மாதும் கண் களைத்திறந்து பார்த்து, ஓ தியாகேச! ஸர்வரக்ஷக! இப் பாவி என்னைப் பங்கப்படுத்த நெருங்குகிருனே; என்னை நீரே காப்பாற்ற வேண்டும்; நீரே சரண்புகுந்தோர்க்குச் சரண் அளிக்கும் மலைக்குன்று என்றுரைத்துத் தியாகேச! என்னிடத்தில் சத்தியம், ஈசுவரபக்தி, கற்பு, இவைகள் இருப் பது உண்மையாயின் இத்துஷ்டனது சரீரத்தில் கிழத்தனம் தோற்றக் கடவது என்று உரைத்துவிட்டு ஈசனையே நம்பிக் கொண்டு மறுபடியும் தியானத்தில் ஈடுபட்டாள். உத்தமி களுள் சிறந்தவளாகிய அம்மதிமுகியும் இவ்வாறுரைத்த தைக்கேட்ட தியாகேசர் அப்படியே ஆகக்கடவது என்று ரக்க அத்தருணத்திலேயே அத்துஷ்டனது

மூப்பு உண்டாயிற்று. அதனால் அவனது முழங்கால்களி ரண்டும் சோர்வையடைந்து நடக்கமுடியாமல் தரையில் வீழ்ந்தான். அவனது முதுகு எலும்பும் வளைந்துவிட்டது. உடம்பில் நடுக்கமும் கண்மலினமும் பற்களின் சோர்வும் உண்டாயின. இவ்விதமாய்த்திடீரென்று அந்தத்துஷ்டன் கிழத்தனத்தையடைந்து, நடையிழந்து பூமியில் வீழ்ந்திருப் பதை அவனது தோழர்கள் கண்டு வியப்படைந்து இதுவே இவனுக்குத்தக்க தண்டனை என்று நினைத்து அவனுக்கு நற்கதியுண்டுபண்ணக்கருதி அவனை இழுத்துக்கொண்டே தியாகபதியின் மகிமையைப் புகழ்ந்துகொண்டு திருவாரூர் நகரையடைந்து அங்கு விளங்கும் சிறப்பைக்கண்டு ஆச்சரிய மடைந்து ஈசனைப்பணிந்து தமது வழியில் நேரிட்ட விஷயத் தையும் அன்றிரவில் தமது கண்களுக்குப் பெண்கள் ஆறு கத்தோற்றிய அற்புதத்தையும் அங்கு விளங்கும் பக்த ருடன் சொல்லி மகிழ்ச்சி அடைந்தனர்.



## 189. வழியைத் தடுத்தானுக்குச் சாபமளிப்பித்த லீலை.

தினங்களுக்கு முன் துஷ்டர்களாய்க் காட்டில் ந்துகொண்டிருந்த அவர்கள் ஈசுவர பக்தியை யடைந்து சிறந்த சிவபக்தர்களாய் ஈசனது திருக்கோயிலில் வந்து பணிந்ததையும் நடுவழியில் ஒரு பெண்மணியினால் அளிக்கப் பட்ட சாப விஷயத்தையும் தொண்டர்கள் மூலமாய் அறிந்துகொண்ட சோழவரசன் அப்பெண்மணியானவள் யார்? என்று விசாரிக்க விருப்பம்கொள்ளுகையில், அவ னது தவத்தின் சிறப்பைக் கண்டு மகிழ்ந்த தியாகேசர் ஆகாயவாணியின் மூலமாக அரசனைக் கூப்பிட்டு ஓ சோழ குலபதியே! அப்பெண்மணியின் தவச் சிறப்பைக்கண்டு நான் மகிழ்வடைந்து அவளது வேண்டுகோள் போலவே

வரமளித்துவிட்டேன். உனது குமாரனாகிய யுவராஜனை மணந்துகொள்ளும்படி நான் வரமளித்தது போலவே நீ அவ்விவாகத்தைச் செய்து முடிப்பாய் என்று உரைத்தார்.

அந்த அசரீரியைக் கேட்டு மகிழ்ந்த அந்தச் சோழன் அப்பொழுதே தனது மந்திரிமார்களையும் பரிவாரங்களையும் அப்பெண்மணியிடம் அனுப்பி அவளை அழைத்து வரும் படி அனுப்பினான். அவர்கள் அம்மதிமுகியின் அருகில் நெருங்குகையில் ஆகாய வாணியுரைத்தது போலவே அவ ளது எதிரில் விருஷபாரூடராய்த் தியாகேசர் தோன்றினார். ஈசனுடைய திவ்விய தர்சனத்தைப்பெற்ற அப்பெண்மணி யும் வரங்கேட்கவே அவளது விருப்பம்போல் வரமளித்து மறைந்தார். ஈசனிடமிருந்து வரம் பெற்று மனக்களிப்பு டன் அஞ்சலி செய்து ஆனந்தக்கண்ணீர் விட்டு மெய்ச் சிலிர்ப்பையெய்தி ஜன்மப்பயனையடைந்து, தவத்திலிருந்து திரும்பியபொழுது அப்பெண்மணியானவள் சோழநாட்டு மந்திரிகள் வேண்டி நிற்பதை யறிந்துகொண்டு மகிழ்வுடன் பல்லக்கில் ஏறி, நகர வலமாய் அரண்மனையை யடைந் தாள். அடைந்தவுடன் அம்மதிமுகியானவள் மாமனாகிய சோழனை வணங்கித் தனது விருத்தாந்தங்களை தோழியர் மூலமாய்த் தெரிவித்துத் தனது தந்தையாகிய பாண்டியனை யும், செவிலித்தாய்மார்களையும் விரைவில் அழைத்துச் சகலமான பந்துக்களும், முனிவர்களும், வேதியர்களும் நிறைந்து விளங்கும் விவாக மண்டபத்தில் சுப முகூர்த்தத் தில் அந்தச் சோழமகாராஜாவின் மகனை முறைப்படி மணந்து கொண்டு மகிழ்வெய்தினாள்.

சம்பகாரண்ணியத்தின் ஈசான திக்கில் தெய்வப்பெண் போல் தவம் செய்துகொண்டிருந்த அப்பெண்ணுக்கு ஈசனருளால் நேரிட்ட மகிமையை யறிந்துகொண்ட பக் தர்கள் மிகவும் ஆச்சரியமடைந்து தமது தோழனாகிய அந்தத்துஷ்டன் அகாலத்தில் அக்கொடிய கிழத்தன்மை

யினால் வருந்துவதைத் தீர்க்கலாகாதாவென்று அவர்கள் ஈசனது ஸன்னிதானத்தில் வேண்டி நிற்கையில் அவர்களது விருத்தாந்தங்களை அறிந்து கொண்ட ஒரு வேதியர் அவ்வாறு கிழத்தன்மையை யடைந்திருக்கும் அப்பாவியைக் கமலாலயத்தில் ஸ்நானம் செய்துவைக்கும்படி அவர்களுக்குக் கட்டளையிட்டார். அவர்களும் அவ்வேதியரது கட்டளையைச் சென்னியில் கொண்டு அப்பாவியைக் கமலைப் பொய்கையில் ஒரு மாத காலம் வரையில் நீராடச்செய்து வந்தார்கள். அத்தீர்த்தத்தில் ஸ்நானம் செய்த பலத்தினால் அவனது சரீரத்தில் அகாலத்தில் தோற்றிய கிழத்தனமும் கொஞ்சம் கொஞ்சமாய் நீங்கிவிட்டது.

அதனால் நற்புத்தியை யடைந்த அவனும் ஈசனைப் பலவாறு துதித்துத் தனக்குச் சாபமளித்த பெண்மணியே அப்பொழுது யுவராஜ பத்னியாய் விளங்குகிறாளென்று அறிந்து வியப்படைந்தான். அந்த மதிமுகி யென்னும் பெண்மணியும் தன்னிடமிருந்து சாபத்தையடைந்தவன் கமலையில் நீராடி அவ்வித கிழத்தனத்தை நீக்கிவிட்டுப் பரமேச பக்தனாய்த் தேவாலயத்தில் ஊழியத் தொழிலில் அமர்ந்து நற்புத்தியுடன் விளங்குகிறான் என்பதைச் சேடிமார் சொல்லக் கேட்டு ஆச்சரியத்தை யடைந்தாள். இவ்விதமாய்த் தினந்தோறும் சகல ஜீவராசிகளுக்கும் சிறந்த நன்மையையளித்துவரும் தியாகராஜரைப் புகழ்ந்து வணங்காதார் இல்லை. இவ்விதமாய் அக்காட்டில் சஞ்சரித்தவர்களும் நற்புத்தியையடைந்து தேவாலய ஊழியத் தொழிலில் மகாராஜனால் நியமிக்கப்பட்டவர்களாய் வாழும் நாளில், அவர்களில் ஒருவன் காட்டில் தங்கியிருக்கும் மற்றும் சிலரையும் நன்மையடைவிக்கக் கருதி ஒருநாள் அந்நகரத்திலிருந்து தான் முன்பு வசித்திருந்த காட்டிற்குச் சென்றான். அவ்விடத்தில் தங்கியிருக்கும் தனது பந்துக்களையும் கண்டு இரங்கி அவர்களுக்குத் தியாகராஜாவின் சிறப்பைக் கூறி அவர்களைத் திருவாரூருக்கு அழைத்து வரலானான்.

அவ்வித விருத்தாந்தத்தை யறிந்துகொண்ட மற்றொரு துஷ்டன் அவர்களுடைய மார்க்கத்தைத் தடுத்துச் சிவ பக்தி செய்ய வேண்டாம். அந்நகரில் உங்களுக்கு நன்மை நேரிடாதென்று கலகஞ்செய்ய ஆரம்பித்தான். திருவாரூர் நகரிலிருந்து அங்குச்சென்ற பக்தனானவன் அத்துஷ்ட னுக்கு முதலில் நன்மொழிகளைக் கூறினன். அம்மொழி களைக் கேளாமல் அந்தத்துஷ்டன் அவர்களது வழியைத் தடுத்து நின்றான். அதனால் கோபத்தையடைந்த அப் பக்தன் கடுஞ்சினங்கொண்டு ஓ துஷ்ட! ஈசுவரபக்தியை யடைந்து தியாகேசரைத் தரிசிக்கச்செல்வோர்களை நீ தடுக் கிறபடியால் மரம்போல் அசைவற்று நிற்கக்கடவாய் என்று சாபமளித்தான். அவனுமவ்வண்ணமே நிற்கலானான். சில நாட்களுக்கு முன் காட்டில் திரிந்து கொண்டு கெட்ட குணங்களுடன் கூடியிருந்தவன் ஈசுவரபக்தியை யடைந்து அப்படிப்பட்ட ஈசுவரபக்தியினால் தானே மற்றொரு துஷ்ட னுக்குச் சாபமளிக்கும் வல்லமையைப் பெற்றபடியால் அப் பக்தன் அவ்வனசரர்களை அழைத்துக்கொண்டு வந்து தியாகராஜரது திவ்விய மூர்த்தியின் தரிசனத்தைச் செய்து வைத்துத்தானும் நன்மையெய்தி அவர்களுக்கும் சிறப்பை உண்டுபண்ணினான். இவ்விதமாய்த் தியாகராஜரது திவ்விய லீலையானது வனசரர்களையும் பக்தி நெறியில் திருப்பும் விஷயத்தைக் கேட்டவரெல்லோரும் ஆனந்த மடைந்தார்கள்.

## 190. குருமூர்த்தியாய்ச் சோலையில் தோன்றிய லீலை

காத்தியாயனர், சாண்டில்யர், கௌதமர், அகஸ்தியர், பாரத்துவாஜர் முதலான மகரிஷிகள் ஒருசமயத்தில் ஸ்ரீராமலிங்கமூர்த்தியின் தரிசனத்துக்காக இமயமலையின் சார்பிலிருந்து கிழக்கரை மார்க்கமாய்ப் புறப்பட்டுவருகை யில் அம்மகரிஷிகள் மஹோததியின் கரையில் அங்கங்கு

விளங்கும் புண்ணிய க்ஷேத்திரங்களையடைந்து திவ்விய மூர்த்திகளின் தரிசனத்தைப்பெற்று ஜபம் முதலானவைகளை முடித்துக்கொண்டு சென்றுகொண்டிருக்கையில் பிமேசுவர க்ஷேத்திரத்தைத்தாண்டித் தெற்கு முகமாய் நூற்றைம்பதுயோசனை தூரம் வழிகடந்து புண்ணிய க்ஷேத்திரத்தையடைந்தார்கள்.

அம்மகரிஷிகள் அம்மண்டலத்தின் எல்லையில் காலடி எடுத்து வைத்தவுடனே அவர்களது சரீரத்தில் மயிர்க் கூச்சல் உண்டாயிற்று. கண்களிலிருந்தும் நீர்த்தாரைகள் வெளிக்கிளம்பின. மனதில் களிப்பு உண்டாயிற்று. இவ் விதமாய்த் திடீரென்று அவர்களுக்கு உண்டாகிய சந்தோஷக்குறிகளை அவர்கள் கண்டு ஆச்சரியப்பட்டுத் தமது மெய்ஞ்ஞானத்தினால் அப்புண்ணிய க்ஷேத்திரத்தின் மகிமையையும் அந்த க்ஷேத்திரத்துக்கதிபதியாகிய தியாகராஜரது மகிமையையும் அறிந்துகொண்டு மகிழ்ச்சியடைந்து நிற்கையில் திரிலோகஸஞ்சாரியும், தேவரிஷியாயுமுள்ள நாரதர் அத்தருணத்தில் அவர்களுக்கு நேராக ஆகாயத்தில் தோன்றி காத்தியாயனர் முதலான அம்மகரிஷிகளைப் பார்த்து, ஓ மகரிஷிகளே! இந்தப் புண்ணிய க்ஷேத்திரத்தின் மேல்திசையில் வடவனம் என்னும் திருவாலம்பொழிலின் ஒரு புண்ணிய சோலையில் இம்மண்டலாதிபதியாகிய தியாகேசர் குருமூர்த்தியாய்த் தோன்றப்போகிறார். அத்தருணத்தில் அந்தத் திவ்விய மூர்த்திக்கு விசேஷ உபசாரங்களைச் செய்வதற்காகத் தேவலோகத்தில் தேவர்கள் திவ்விய வஸ்துக்களைச் சேகரித்து வருகிறார்கள். இவ்விஷயத்தை நீங்கள் பூலோக பக்தர்களுக்கு அறிவித்து அவர்களுக்கு 'வன வழியை உபதேசிப்பீர்கள் என்று உரைத்து நாரதர் ஆகாய மார்க்கமாய்ச் சென்றார்.

'கால ஞானிகளில் முதல்வராயும், திரிலோக சஞ்சாரியாயும், தேவரிஷியாயுமுள்ள நாரதர் இவ்விதமாய்ச் சொல்லக் கேட்டு அம்மகரிஷிகளெல்லோரும் அப்பொழுது

தியாகராஜரது ஸன்னிதானத்தையடைந்து பணிந்து துதி செய்து நாரதரின் உபதேசத்தை அத்திருவாரூரில் உள்ள வேதியர்களுக்கும் மற்றுமுள்ள தொண்டர்களுக்கும் அறிவித்து அவர்களுடனே அத்திருவாலம்பொழில் சோலையை யடைந்து தியாகராஜர் எப்பொழுது குருமூர்த்தியாய் அவதரிக்கப்போகிறார் என்று எதிர்பார்த்துக்கொண்டு புண்ணியபுராதனது திவ்விய லீலைகளையும் க்ஷேத்திர மகிமையையும் புகழ்ந்துகொண்டு அச்சோலையில் வீற்றிருக்கையில் ஸர்வஸ்வரூபியாகிய தியாகராஜர் அத்தருணத்தில் சித்திரை சுத்த பௌர்ணமியும் விசாகா நக்ஷத்திரமும் கூடிய சுப முகூர்த்தம் தோன்றியபொழுது அத்திருவாலம்பொழிலின் மத்திய பாகத்தில் குருமூர்த்தியாய்த் தோன்றி விளங்கினார்.

தத்துவோபதேச முத்திரையையணிந்து ஆகுஞ்சிதபார்சுவமாயும், ரேவக நேத்திரமுமாயும், ஜடாதாரியாயும் விளங்கும் அக்குருமூர்த்தியை அத்தருணத்தில் அம்மகரிஷிகளும், வேதியர்களும் தொண்டர்களும் பணிந்து மெய்மறந்தவர்களாய்த் துதிசெய்கையில் ஆகாயத்தில் தேவதுந்துபி வாத்தியங்கள் முழங்கின. இந்திரன் முதலியவர்கள் தமது பரிவாரங்களுடன் அங்குவந்து தேவகங்காஜலத்தினால் அக்குருமூர்த்திக்குத் திவ்விய அபிஷேகம் செய்துவைத்து ஸுவர்ணதாமரைகளினால் பாதத்தில் பூஜித்துத் தோத்திரம் செய்தார்கள். அச்சமயத்தில் மூவுலகிலுள்ள சகல தேவதைகளும் மனக்களிப்பையடைந்து தமது தொண்டர் வேண்டிய வரங்களையும் அற்புத சக்திகளையும் அளித்தார்கள். வானவரும் தானவரும், மண்ணவரும், சகல ஜீவராசிகளும் பேரின்பத்தையடைந்து அக்குருமூர்த்தியின் திவ்விய தர்சனத்தையும் தத்துவோபதேசத்தையும் பெற்று மகிழ்வெய்தினர்.

## 191. சமணரை ஓட்டிய லீலை

ஆதிகாலம் முதல் தியாகராஜாவின் அருளைப்பெற்று மேன்மையடைந்துவந்த சோழவம்சமானது ஒருசமயத்தில் க்ஷீணமடைந்திருந்தது. அச்சமயத்தில் மன்னுயிர்களைக் காத்துவரும் இந்திரராஜ சோழன் என்னும் மகாராஜன் ஜ்வரத்தையும், மூப்பையுமடைந்திருக்கும் சமயத்தில் மகத தேசத்தரசனும் கார்த்தவீரியனுடைய வம்சத்தில் பிறந்தவனுமாகிய பரந்தமன் என்னும் ஒரு அரசன் தனது பெரிய சேனைகளையேவி அச்சோழனை உயிருடன் சிறையில் அடைப்பதற்கு நினைத்துப் பிடித்துவரும்படி கட்டளையிட்டான். அம்மகதநாட்டரசனது ஏவலால் அப்படையாளரும், சேனாபதிகளும் விரைவாய்த் தனது தேசத்தின்மீது வருகிறார்கள் என்று அறிந்துகொண்ட சோழன் தியாகராஜாவின் பாதமலரை மனதில் நினைத்து ராஜ தர்மத்துக்குரிய ஒப்பற்ற தைரியத்தை யிழக்காமல் தனது பெரிய சேனையை இழுத்துக்கொண்டு எதிர் சென்று தனது நாட்டில் அப்பகைவர் புகுவதற்குள் அவர்களை எதிர்த்துப்போர் செய்யலானான்.

பகைமன்னனாகிய பரந்தமன் என்னும் அவ்வரசன் அவ்விதமாய்ச் சோழவரசனால் தடுக்கப்பட்ட வேகமுடையவனாகக்கடும் போர்செய்ய முயன்றபோது சோழராஜ்யத்தின் செல்வப்பெருக்கைக்கண்டு நெடுநாளாகப் பொறாமை கொண்டிருந்த கர்னாடக மகாராஜனும் அவனது சாமந்த பூபாலர்களும் அத்தருணத்தில் அப்பரந்தமனுக்கு உதவி செய்யக்கருதித்தமது சேனைகளையேவி அவனுடன் தாங்களும் சேர்ந்து அச்சோழனின் சேனையைச் சூழ்ந்து கொண்டு முறியடித்தார்கள். இரண்டுநாள்வரையில் அச்சோழன் அப்பகைமன்னவரெல்லோரையும் மடக்கிக்கொண்டு கடும் போர்புரிந்தான். சோழனை உயிருடன் பிடிக்கக் கருதிய அப்பகைமன்னவர்கள் ஐந்துநாள்வரையில் இரவும் பகலும் ஓயாமல் கடுஞ்சண்டை செய்து அச்சோழனைத் தனியாகப்பிரித்து யானைச்சண்டையிலும் குதிரைச்சண்டையி

னும் தோற்கச்செய்து அவனை உயிருடன் பிடித்துச் சிறையிலிட்டுத் திருவாரூர் நகரம் முதலான சோழமண்டலத்தைத் தமதடிமைப்படுத்திக்கொண்டு சாதுஜனங்களையும் ஈசுவர பக்தர்களையும் நிந்தனைசெய்து கர்வமடைந்து அட்டகாசம் செய்து அநியாயவழியிலிறங்கி அதர்மத்தையே தழுவி பொருளையெல்லாம் கொள்ளையடித்துக் கொண்டு அச்சோழநாட்டில் சமணர், பௌத்தர் முதலியவர்களை நிலைபெறச்செய்து பாவத்தொழிலைச் செய்துவரத் தொடங்கினார்கள்.

இவ்விதம் கர்னாடகவரசனும், மகததேசத்தரசனும் தர்மத்தை யழித்துச் சமணரையேவி ஈசுவரமகிமையைப் பழிக்கும்படி செய்துவரும் நாளில் திருவாரூரிலிருக்கும் தொண்டர்களும், வேதியர்களும் சோழனுக்கு நேரிட்டிருக்கும் சிறையைநீக்கி மறுபடியும் உலகில் தர்மத்தை நிலைநாட்டவெண்ணி ஸர்வமந்திர ஸ்வரூபியாய் விளங்கும் தியாகேசனைத் தியானித்துக் கண்ணீர்மல்க நின்று வாடி கதியற்றவர்களாய் வரங்கேட்கையில் ஆகாயவாணி :— பக்தர்களே! நீங்கள் மனக்கலக்கத்தை யடையாமல் சிறிது காலம் இருப்பீராகில் நன்மை யுண்டாகுமென்று சொல்லக்கேட்டு மகிழ்வுடன் வாழ்ந்திருந்தார்கள்.

சிலநாள் சென்றபிறகு தியாகேசர் சோழனையும் சாதுஜனங்களையும் காக்கக் கருதித் தனது திவ்யசக்தியை யேவினார். அப்படிப்பட்ட ஈசுவரசக்தியினால் கருந்தேள்களும், செந்தேள்களும், நாகங்களும், செந்நாய்களும், கருங்குரங்குகளும், காட்டுப்பன்றிகளும் கணக்கற்றவைகளாய் உண்டுபண்ணப்பட்டன. கொடியவிஷங்களையும், கோரப்பற்களையும், நீண்ட நகங்களையுமுடைய அக்கொடிய ஜந்துக்களெல்லாம் சீறிக்கொண்டு அச்சோழநாட்டில் நிலைபெற்ற சமணரின்மீதும் பகைமன்னவரதிகாரிகளின் மீதும் பாய்ந்து கடிக்கவும், கொட்டவும், பாயவும் ஆரம்பித்தன. கொடுமையுள்ள விஷப்பூச்சிகள் தாங்கள்

நிலைபெற்றிருக்கும் இடங்களிலெல்லாம் கும்பல் கும்பலாய் வரக்கண்டு நடுக்கத்தையடைந்த சமணர் முதலியவர்கள் அவைகளை எவ்வகையிலும் அடக்கமு          சோழ நாட்டைவிட்டு ஓடத் தலைப்பட்டனர்.

சாதுக்களின் மீதும் சைவபக்தர்களின் மீதும் பாயாமல் அச்சமணர் முதலானவர்களிடமே பாய்ந்து வருவதைக்கண்டு மனவருத்தத்தை யடைந்தும், தைரியத்தையிழந்தும், வாய் உளறியும், குரல் தழைத்தும் அப்பகைவரும் சமணரும் வெகுதூரம் ஓடினர். இவ்விதமாய் அந்தத் துஷ்டஜந்துக்கள் சமணரை ஓட்டுவதற்குள் வானரங்கள் எல்லாம் ஒன்றுசேர்ந்து பகைமன்னரின் நகரையழித்துக்கனலிட்டுச் சிறைச்சாலையை நாசஞ்செய்து அதிலுள்ள சோழனை மீட்டுப்பாதுகாப்புடன் தியாகராஜாவின் சன்னிதானத்துக்குக் கொண்டுவந்து சேர்த்தன. நாலைந்து தினங்களுக்குள் இவ்விதமாய் துஷ்டஜந்துக்கள் கூட்டம் கூட்டமாய்க்கிளம்பி சமணரையும் பகைவரையும் துரத்திவிட்டு மறைந்தன. இவ்வதிசயங்களைக் கண்ட சிவபக்தர்களெல்லோரும் தியாகராஜாவின் மகிமையைப் புகழ்ந்து மகிழ்ந்தார்கள்.

## 192. மாயப்பாம்புகளைப் புஷ்பமாக்கிய லீலை

தரிதங்கன் என்னும் சமணன் ஒருவன் அச்சோழவம்சத்தையும், அச்சோழவம்சத்துக்குக் கடவுளாகிய தியாகேசனையும் அழிக்கக்கருதி ஆறுமாசகாலம் வரையில் பகற்காலத்தில் கழுத்தளவு தண்ணீரில் மூழ்கியிருந்தும், ஆறுமாசகாலம் வரையில் இராக்காலத்தில் கழுத்தளவு தண்ணீரிலிருந்தும் கடோர மந்திரங்களையுச்சரித்து அம்

மந்திரங்களுக்கதிபதியாகிய நாகராஜன் முதலிய சிற்சில தேவர்களை மகிழச்செய்து மந்திர சித்தியையடைந்து தன் விருப்பிடத்துக்குவந்து மாறுவேஷம் பூண்டு திருவாரூர் நகருக்குள் பிரவேசித்து அந்நகரில் விளங்கும் வீதிகளின் சிறப்பையும், தேவாலயத்தின் மகிமையையும் கண்டு மனக் கொதிப்பையடைந்தவனாய்த் தனது மந்திரசக்தியினால் அன்றுமுதல் மூன்றுநாள் வரையில் அந்நகரவாசி ஜனங்கள் அணியும் ஆபரணங்களும், உடைகளும் புஷ்பங்களும் கால கூட நாகங்களாக மாறக்கடவதென்று மகாமந்திரத்தை ஏவியும், அவ்விதநாகங்கள் அந்நகரவாசிகளுக்குத் தோற்ற மல் இருக்கும்படியும் சக்தி பந்தமும் கட்டிவிட்டு ஒரு சோலையில் புகுந்து மறைந்திருந்து அங்கு நடக்கப்போகும் சம்பவத்தைக்கண்டு மகிழலாமென்று எண்ணியிருந்தான்.

மகாமந்திரவாதியாகிய அச்சமணன் மந்திரசக்தியினால் அந்நகரவாசி ஜனங்களை அழித்துவிடலாமென்று எண்ணி சோலையில் புகுந்து மறைந்திருக்கும் காலத்தில், இவ்வித சூதுமார்க்கத்தை அறியாதவர்களாயும் கபடமற்றவர் களாயும், ஈசனுக்கே தொண்டராயும் விளங்கும் ஜனங்க ளில் சிலர் மறுநாட்காலையில் ஸ்நானம் செய்துவிட்டு உடை களையணிந்தார்கள். அவ்விதவுடைகள் எல்லாம் அணிந்த வுடனே மலர்களாய் மாறின; இஃதென்ன ஆச்சரிய மென்று நினைத்து இவ்விஷயத்தை மற்றும் சிலருடன் சொல்லச்சென்றபோழுது சிலர் அவர்களுக்கெதிரில் தோன் றித்தாம் அணிந்த ஆபரணங்கள்யாவும் மலராக மாறின; இது என்ன ஆச்சரியமென்றுரைத்தார்கள் இவ்விதமாக திருவாரூர் நகரவாசிகள் யாவரும் கும்பல் கும்பலாய் அங்கங்கு ஒன்றுகூடி சிலர் தாமணிந்த உடைகள் மலர் களாக மாறினவென்றும், சிலர் தாம் பூசிக்கொண்ட கலவைச்சாந்து மலர்களாக மாறினவென்றும் ஒருவருக் கொருவர் பேசிக்கொண்டு ஆச்சரியத்துடன் அரண்மனை யின் வாயிலையடைந்து நின்றார்கள்.

இவ்வண்ணமாகவே அவ்வரண்மனையில் நடந்த ஆச்சரியங்களைக்கண்ட சோழனும் மந்திரிகளும் வெளியேவந்து அம்மகாஜனங்களுடன் ஒன்றுசேர்ந்து புரோஹிதர்களையும் பிராமணர்களையும் அழைத்துக்கொண்டு ஆலயத்திற்குச் சென்று தியாகராஜரைப் பணிந்து துதிசெய்கையில் கருணைக் கடலாகிய தியாகேசர் சொன்னதாவது;—"கேளீர் பக்தர்களே! நீங்கள் அணியத்தக்க உடைகளையும், ஆபரணங்களையும், பூச்சுக்களையும் நாகங்களாக மாறும்படி மகாமந்திர சக்தியை ஏவிவிட்டு ஒரு சமணன் இந்நகரின் சோலையில் புகுந்து மறைந்திருக்கிறான். அவனது மந்திர சக்தியினால் அந்நிமிஷத்திலேயே உடைகள் முதலான யாவும் ஸர்ப்பங்களாய் மாறிவிட்டன. அச்சூதையறியாத நீங்கள் வழக்கம்போல் அவைகளை அணிவீராகில் உங்களுக்கு ஆபத்து நேரிடுமே என்று உடை முதலானவைகளைப் புஷ்பங்களாக மாற்றினேன்" என்றார்.

விஷயத்தையறிந்த மகாஜனங்கள் தமக்கு ஆபத்து நேரிட்ட காலத்தில் இவ்விதமாய் ஈசன் தம்மைக் காப்பாற்றி வருவதைப்பற்றிப் பலவாறு ஈசனைப் புகழ்ந்து மகிழ்ந்து தமதிருப்பிடமடைந்தனர். மறுநாட் காலையில் அம்மந்திரவாதி சமண மதத்தோனும் அச்சோலையின் ஒரு பாகத்தில் ஜீவனையிழந்து பிரேதமாய்க் காணப்பட்டான். அதைக்கண்ட ஜனங்கள் இவனே மந்திரவாதியாயிருக்கலாமென்று நிச்சயித்து அவனைப் பள்ளத்தில் புதைத்து மகிழ்ந்தார்கள்.

## 193. மணலைப் பூஜா திரவ்யங்களாகச்செய்த லீலை.

சமுத்திரபுரியில் மகேசுவரதாஸர் என்னும் சிவபக்தர் ஒருவர் இருந்தார். அவர் குருகுலத்தையடைந்து வேதங்களையும், சாஸ்திரங்களையும் புராணாதிகளையும் கற்றுக்கொண்ட பிறகு குருவின் விடை பெற்றுக்கொண்டு இரண்

டாவது ஆச்ரமம் என்னும் இல்லற தர்மத்தில் அமர்ந்து தாமரையிலையில் நீர்த்துளிபோல் ஸம்ஸார பந்தத்தில் ஆழ்ந்த பற்றையடையாமல் வேதாந்த தத்துவங்களை ஆராய்ந்துகொண்டு நிகரற்ற ஈசுவர பக்தியுடன் மனக் களிப்பையடைந்து வாழ்ந்துவந்தார்.

ஒரு நாள் அந்த மகேசுவரதாஸர் திருவாரூர் நகரத் துக்குச் சென்றுகொண்டிருக்கும் ஒரு யோகீசனைக் கண்டு பணிந்து அவரால் அறிந்துகொள்ளப்பட்ட தியாகராஜ மகிமையை யுடையவராய்க்கொண்டு புண்ணியபுரத்தை யடைந்து தியாகராஜாவின் திருமேனியைத் தர்சித்துப் புளகமடைந்து கண்ணீர்மல்கக் கைகூப்பி வணங்கி வலம் வந்து தியாகராஜரைக்காட்டிலும் சிறந்ததொரு தெய்வ முண்டோவென்று அலற்றிப் புலம்பி அதுமுதல் தினந் தோறும் அம்மூர்த்தியையே முக்கிய தேவதையாகப் பற்றிக்கொண்டு பூஜித்துவரலானார். அவரது பக்தி விசே ஷத்தைக்கண்ட ஜனங்கள் யாவரும் அவரைச் சிறந்த தொண்டரென்றே நினைத்து அவருக்குத் தக்கவாறு மரி யாதைசெய்து வந்தார்கள்.

அம்மகேசுவரதாஸரும் இவ்விதம் நெடுநாளாய் வொரு திவ்விய க்ஷேத்திரங்களையுமடைந்து அங்கங்கு விளங்கும் லிங்கேசமூர்த்திகளையும், ஸ்வயம்புமூர்த்திகளையும் தர்சித்து இப்படிப்பட்ட மகாலிங்க மூர்த்தி ஸ்வரூபத்தின் தர்சனத்தைப்பெற்ற இம்மானிட ஜன்மமும், இம்மானுஷ லோகமுமே சுவர்க்கத்துக்கும் தேவருக்கும் நிகராகுமென்று துதிசெய்து போற்றினர். இவ்விதமாய் அந்தத் தொண்டர் தனது மனைவி மக்களுடன் காசிக்குச் செல்லும் மார்க்கத் தில் ஒரு நாள் நடுவழியில் ஆகாரப்பொருள் முதலியவைகள் ஒன்றுமில்லையேயென்று மனைவியுரைக்கக் கேட்டார். அவ் வேதியர் சென்றுகொண்டிருக்கும் அக்காட்டில் அநேக யோசனை வழிதூரம்வரையில் நிழலுமில்லை மரங்களுமில்லை;

வகைகளும்

சிலவிடங்களில் மேடுகளாயும் சிலவிடங்களில் ஆழ்ந்த பள்ளங்களாயும், சிலவிடங்களில் கற்பாறைகள் புதைந்த பூமிகளாயும், துஷ்ட ஜந்துக்களின் வாஸஸ்தானமாயுமிருந்தன.

அக்கொடிய வனத்தில் மனைவி மக்களுடன் நடந்து செல்லுகையில் பசியினாலும் தாகத்தினாலும் எவ்வித உணவுப் பொருள்களும் கிடைக்காமையாலும் மிக்க வருத்தத்தையடைந்து திகைத்து நின்றார். வாடிக் களைத்துப் பெருமூச்சுவிட்டுப் பசியினால் வருத்தமுறும் மனைவி மக்களைக்கண்டு மனமிரங்கித் தேறுதல்கூறித் தானும் ஒருவாறு தேறுதலையடைந்து அவ்வித மணற்பிரதேசத்திலேயே மந்திரஸ்நானம் விபூதி ருத்திராக்ஷ மாலைகளையணிந்து தனது நித்தியபூஜா லிங்கமூர்த்தியை அம்மணலினால் ஏற்படுத்தப்பட்ட ஓர் ஆஸனத்தில் விற்றிருக்கச்செய்து தியாகராஜரது பாதகமலங்களை மனதில் தியானித்துக்கொண்டு க்ஷணகாலம் நிஷ்டையிலமர்ந்தார். பிறகு கண்களைத் திறந்து ஸங்கல்பம் செய்துகொண்டு நாம ஸ்மரணை செய்தார். பிறகு 'வேதங்களால் காணமுடியாத மரகத மணியே! தியாகேச! நான் செய்யத் துணிந்த பூஜைக்குப் பூஜோபகரணத் திரவியங்களை இக்கொடிய காட்டில் நீரே அளிக்க வேண்டும்' என்று நினைத்து முதலில் ஒரு பிடி மணலை அப் பூஜாமூர்த்தியின் எதிரில் அது அர்க்கியம் என வைத்தார்; பிறகு இதுவே பாத்யம் என்றும் இவையே ஆசமன ஜலம் என்றும் ஒவ்வொரு பிடியாய் மணற்குவியலை அம்மூர்த்தியின் எதிரில் வைத்தவுடனே அவைகளெல்லாம் அவ்வண்ணமே சுத்தோதகமாகக் காணப்பட்டன.

இவ்விதமாய்ப் பூஜையை நிறைவேற்றிய பிறகு அத்தொண்டர் நாலைந்து பிடி மணலைக் குவியலாக்கித் 'தியாகேச! இதுவே, நைவேத்தியத்துக்குரிய பஞ்சகவ்வியப் பொருள்; இவையே தேன், இவையே கனிகள்' என்றுரைத்துக்கொண்டே மணலை எடுத்து வைக்கும்பொழுது தயாநிதியாகிய தியாகராஜர் அக்கொடிய காட்டில் எவ்வித

உணவுமின்றி உயிர் தவித்து வாடுமவ்வேதியனது பக்தி ஸத்தியம் முதலிய நற்குணங்களைக்கண்டு அவரது விருப்பப் போல் அம்மணற்குவியல்கள் மாறக்கடவது என நினைக்க அவ்வண்ணமே அமிர்தத்தைப் பழிக்கும் ருசியுள்ள கனி களாயும் க்ஷீரமாயும் மாறின. அவைகளைக் கண்டு களிப் படைந்த அவ்வேதியர் அப்பூஜையைச் சாங்கமாய் முடித்து விட்டுப் பசியினால் வாடும் தமது மக்களுக்கும் மனைவிக்கும் அவ்வித உணவையளித்து ஈசுவர நாமத்தைச் சொல்லிக் கொண்டு காசிக்குச் செல்லும் வழியைப் பற்றினர்.

## 194. கம்பமாய் நின்றவனுக்கருள் செய்த லீலை.

கரந்தகன் என்னும் ஒரு சூத்திரன் தியாகராஜ பக்தியை யடைந்து ஒவ்வொரு புண்ணிய க்ஷேத்திரங்களிலும் விளங்கும் சிவபிரானைத் தொழுதுகொண்டும் தனது ஜாதியின் இகழ்ச்சியைப்பற்றி நிந்தனை செய்துகொண்டும், பாவியேனாகிய எனது பிறவியைக் களைவாய் என்று ஈசனை வேண்டிக்கொண்டும் திவ்விய க்ஷேத்திர யாத்திரைசெய்து வரலானன். அக்கரந்தகன் என்பவன் சூத்திரவம்சத்தில் பிறந்தவனாயினும் தியாகராஜாவின் பாதகமலத்தில் அவன் வைத்திருக்கும் பக்தி விசேஷத்தையும், காமம், கோபம் முதலிய துர்குணங்கள் ஒழிந்து விளங்கும் அவனைக்கண் டவரெல்லோரும் அவனைச் சிறந்த தொண்டனென்றே கருதலாயினர். சிற்சில சமயங்களில் அத்தொண்டன் பரவசனாய்த் தியாகராஜனது திவ்விய லீலைகளைப் புகழ்ந்து கொண்டு வீதிகளில் துள்ளி எழுந்தாடிப் பாடுகையில் கண்டவரெல்லோரும் வியப்படைந்து அவனை வணங்கு வார்கள்.

இவ்விதமாய் அந்தக்கரந்தகன் காஞ்சி நகரிலிருந்து புறப்பட்டுத் தென்திசையை நோக்கி அத்திசையில் விளங்கும் சிவக்ஷேத்திரங்களை யடைந்து லிங்கமூர்த்திகளைத் தரிசனம் செய்துகொண்டு தோணிபுரத்துக்கருகில் வருகையில் சில சிவபக்தர்கள் கும்பலாய் நின்றுகொண்டு வாடிய முகத்தை யுடையவர்களாய்த் தோற்றுவதைக்கண்ட அந்தக்கரந்தகன் விபூதி ருத்திராக்ஷமாலைகளால் விளங்கும் திருமேனியை யுடைய மகேசுவர பக்தர்களே! எதற்காக நீங்கள் இவ்விடத்தில் கும்பலாய் நின்றுகொண்டு காந்தியிழந்த முகத்தையுடையவர்களாய் விளங்குகிறீர்கள்? இத்தருணத்தில் உங்களது முகம் வாட்டத்தை யடைந்திருந்தபோதிலும் உங்களிடத்தில் ஒப்பற்ற சுடரொளி வீசுகிறதே! ஆகையால் நீங்கள் ஈசுவரபக்தி நிறைந்த மகானுபாவர்களாய் இருக்கவேண்டும். இப்படிப்பட்ட உங்களுடைய தரிசனத்தினால் எனது மனதுக்கும் களிப்பு உண்டாகிறது. ஆகையால் நீங்கள் துயரப்படுவதற்குக் காரணத்தை மொழிவீராகில் என்னால் கூடும் வரையில் நான் அவ்விடர்களை நீக்க முயல்வேன் என்று உரைத்தான்.

கரந்தகன் உரைத்ததைக் கேட்டு அச்சிவபக்தர்கள் அக்கரந்தகனது வடிவத்தை யுற்றுநோக்கி, ஏ பக்தனே! எங்களது மனக்கருத்தை நீர் குறியினால் அறிந்துகொண்டு இவ்வாறு மொழிந்தபடியால் இத்தகைய மேன்மைவாய்ந்த நீர் ஈசுவராம்சமாகவே இருக்கவேண்டும். உமது தரிசனத்தினாலும் எங்களது ஜன்மம் பயன்பெற்றது. எங்களது முகச்சோர்வுக்குக் காரணம் என்னவென்று கேட்பீராகில் இத்தலத்தில் இதோ எதிரில் ஒரு ஜீர்ணமான தேவாலயம் தோற்றுகிறதே; இவ்வாலயத்திற்குள் தேவ லிங்கமூர்த்தி ஸ்வரூபி விளங்குகிறார். இவ்வாலயமானது தினந்தோறும் கொஞ்சம் கொஞ்சமாய் ஜீர்ணதசையை யடைந்து ஸ்தூபி, சிகரம், கொட்டுக்கால், நாகபந்தம் இவைகளெல்லாம் இடிந்து விழுந்து வருகின்றனவே; என்

செய்வோம். இத்தேவ லிங்கமூர்த்தியின் தேவாலயம் இவ் விதமாய்ப் பாழாகி வருவதைக்கண்டு நாங்கள் ஆற்ற மன முடையவர்களாய் மனந்தடுமாறிக் கலங்குகிறோமென்று சொன்னார்கள்.

அச்சிவபக்தர்கள் இவ்வாறு மொழிந்துகொண்டிருக் கையில் அத்தேவாலயத்தின் எதிர்பாகத்திலிருந்த பூர்வ மண்டபத்தின் ஸ்தம்பமானது முறிவையடைந்து அதன் மேலுள்ள கற்கள் எல்லாம் விழ்வதால்த் தொங்கலாயின. அத்தேவாலயத்தின் அவ்வித நிலையைக்கண்டும், கேட்டும், மனத்துயரத்தை யடைந்த அக்கரந்தகன் வெகுவிரைவாய் நடந்துசென்று அம்மண்டபத்தின் மேலுள்ள கற்கள் பூமியிற் வீழ்வதற்குள் அந்த ஸ்தம்பம் நிற்குமிடத்தில் தான் ஒரு கம்பம்போல் நின்று தனது சென்னியினல் அக்கற்பாறைகளைத் தாங்கிக்கொண்டு "தியாகராஜ! உமது திவ்யாம்சமாகிய இத்தேவாலயத்துக்கு முன்முகம் மூடா மலிருக்கும்வண்ணம் இம்மண்டபத்தில் கம்பமாய் யான் நிற்கின்றேன்; எனக்கு அருள்செய்வாயாக" என்று சொல் லிக்கொண்டே கம்பம்போல் அசைவற்று நின்றான்.

அத்தருணத்தில் தியாகேசர் அத்தொண்டன்மீது கருணைசெய்து அம்மண்டபத்தின் பாரம் அவனது சென் னியில் விழாமலிருக்கும்படி ஸங்கல்பம் செய்தார். அத் தொண்டன் அம்மண்டப பாரத்தைத் தாங்கிக்கொண்டு நிற்பதைக் கண்டவரனைவரும் ஹா! ஹா! இம்மகாபுரு ஷனுடைய பக்தியின் சிறப்பை எவ்வாறுரைக்க முடியும்! என்று வியப்படைந்தார்கள். அத்தருணத்தில் அவர்களில் சிலர் வெகுவேகமாய் ஓடிச்சென்று சோழனிடம் உரைத் தார்கள்.

அவ்வுரையைக்கேட்ட சோழனும் குதிரையின்மீது ஏறி விரைவாய் வந்து அத்தோணிபுரத்தின் தேவாலய மண் டபத்துக்குக் கம்பமாய் நிற்கும் தொண்டனது மனேபாவத்

தையும், பக்தியின் சிறப்பையும் கண்டு வியப்படைந்து அவ்விதபாரத்தினால் அத்தொண்டனது சரீரம் சிதறுமல் வாட்டமின்றி விளங்குவதினால் அத்தொண்டன்மீது தியாகேசர் அருள்பாய்ந்திருப்பதையும் ஊகித்து வேலையாட்கள் மூலமாய் அம்மண்டபக் கற்பாறைகளைக் கீழ் இறக்கி வைத்து அத்தொண்டனை விடுவித்து, கர்பகிருஹம் பூர்வ சாலை, அபிஷேகமண்டபம் முதலிய திருப்பணிகளைச் சிறப்புடன் செய்து அத்தேவலிங்க மூர்த்தியின் பிரதிஷ்டாபனத்தையும் செய்துவைத்து அவ்வீசனது அருள் பெற்றுச் சிறப்புடன் விளங்கினன். அத்தொண்டனும் மற்றுமுள்ள சிவபக்தர்களும் வெகு சந்தோஷத்துடன் பரமேசனது பக்தியாகியதேனை யுண்டு மகிழ்ந்து தேசங்கள் தோறும் சஞ்சரித்துத் தங்களது கானங்களால் ரசிக ஜனங்களின் செவிக்கு அமுதூட்டி விளங்கினர்கள்.

## 195. அக்னிப்பிரவேசம் செய்தோனுக்கருள்செய்த லீலை.

சாந்தன் என்னும் சண்டாளன் ஒருவன் தியாகராஜாவின் சிறப்பைக்கேட்டு உருகிய மனமுடையவனாய்த் தனது யஜமானனது சொற்படி வேலை செய்துகொண்டிருக்கும் பொழுது அவனது மனதில் கொஞ்சம் கொஞ்சமாய் ஈசுவர பக்தி பெருக ஆரம்பித்தது.

அந்தச் சண்டாளன் நீச சாதியில் பிறந்தவனாய் இருந்தபோதிலும் பாலப்பிராயம் முதல் வேதியர்களிடத்திலும், பரமேசத் தொண்டர்களிடத்திலும், பரமேசனிடத்திலும் பக்திசெய்து வந்தபடியாலும், பூர்வ ஜன்மத்திரளாலும் அச்சண்டாளனுக்கு அத்தருணத்தில் அளவற்ற பக்தி யுண்டாயிற்று. தாமரை மலரில் மகரந்தத் தேன் பெருகுவதுபோல் அவனது மனத் தாமரையில் தியாகேச பக்தி

ரசமானது பெருகும்பொழுது அவனது கண்கள் ஆனந்தக் கண்ணீரைச் சொரிந்தன. அப்பொழுது செய்துவந்த வேலையை முற்றிலும் மறந்துவிட்டான். "சகல ஜீவராசிகளாலும் துதிக்கப்படும் தியாகேச! உமது திருமேனியின் வடிவழகை யான் கண்டதில்லையே; நான் செய்த அளவற்ற பாப ராசியினால் இவ்வித நீச யோனியில் பிறந்து ஜீவனுதாரத்தையே முக்கியப் பொருளென்று நினைத்துழல்கின்றேனே; இந்த நீச சரீரத்துடன் உமது தேவாலயத்துக்குள் எவ்வண்ணம் புகுவேன்? உமது ஸன்னிதானத்தை எவ்வண்ணம் அணுகுவேன்? சகல ஜீவராசிகளுக்குப் நன்மையளிக்கும் சுடரே! இப்பாவியேன்மீது உமது கருணையை ஏவலாகாதா?

தாய், தந்தை, தாரம், மக்கள், பசுக்கள், தானியங்கள் என்னும் அழியும் பொருளுக்கே உழைத்து ஏழையாய் நிற்கும் என்மீது கருணைபுரிவாய். கல்பகோடி காலம்வரையில் அனுபவித்துத் தீர்க்கக்கூடிய பாபங்களைச் செய்து வரும் என்னை ஆண்டருள்வாய்; தியாகேச! நாய்போல நீச ஜன்மத்தை யடைந்திருக்கும் நான் உமது திவ்விய பாதத்தை நினைத்திடினும் உமது புகழுக்கு எவ்வாறு களங்கம் நேரிடுமோவென்று அஞ்சுகிறேன். பரமேச! நான் பற்பல உயிர்களைக் கொன்றேன்; நல்லறமொன்றும் செய்ததில்லை. பாலகனுய்ப் பற்பல தீமைகள் செய்தேன். உயிருக்குயிராய் விளங்கும் சம்போ! சங்கர! தயாநிதே! என பாபங்களை நீக்கி உமது கைவல்லியச் செல்வத்தை எனக்களிக்கலாகாதா?" என்று மனமுருகியவனாய் உணவருந்தாமலும் குடும்பத்தில் பற்று இல்லாமலும் யோகிபோல ஈசுவரத் தியானத்துடன் காட்டிலேயே நிலைபெற்று இருந்தான்.

சிற்சில சமயங்களில் மலைகளையும், மரங்களையும் மேகங்களையும் ஜீவராசிகளையும் கண்டு நமது நாதனுகிய தியாகராஜரை நீங்கள் பார்த்தீர்களோவென்று இயம்

லானன். இவ்விதமாய் அந்தச் சண்டாளனுக்கு நாடோறும் பக்தி அதிகரிக்கவே ஒருநாள் அவன் தனது நீசவுடலைத் தீயில் ஹோமஞ் செய்துவிட்டாவது தியாகேசனைச் சுத்த சரீரத்துடன் தரிசனம் செய்வோம் என்று நினைத்து ஒரு பில்வ மரத்துக்கெதிரில் அக்னிகுண்டத்தை ஏற்படுத்தித் தீயை உண்டுபண்ணி, "தியாகேச! நான் இவ்வக்னியில் குதித்து எனது நீச சரீரத்தையழித்து விடுகிறேன். மறு பிறப்பிலாகிலும் உமது வடிவழகைக்கண்டு நான் மகிழும் படி அருள்புரிவாய்" என்றுரைத்துக்கொண்டே அஞ்சலி செய்து கொண்டும், கண்களை மூடிக்கொண்டும் அத்தியில் நான்.

தனது நீசசரீரத்துடன் தியாகராஜனது ஸன்னிதானத்தை அடைய முடியாதென்று நினைத்த அச்சண்டாளன் இவ்விதமாய்த் தியாகராஜரது பாதாரவிந்தங்களை மனதில் தியானித்துக் கொண்டே அக்னிப்பிரவேசம் செய் வதையறிந்த பரம்பொருள் அத்தருணத்தில் ஆகாய வாணியின் மூலமாக "ஓ பக்தனே! இந்த ஜன்மத்தில் நீசஜாதியில் தோன்றியபோதிலும் பக்தி விசேஷத்தினால் மெய்யன்பர்காணும் எனது பதத்தை நீ காண்பாய். நீ இவ்வக்னி குண்டத்தில் விழ வேண்டாம். உனக்கு எதிரில் இந்த வில்வ மரத்தடியில் விளங்கும் இந்த லிங்கமூர்த்தியின் தரிசனத்தை யடைவாய்" என்று சொல்ல அந்தச்சண்டாளனாகிய பக்தன் அக்னியில் விழாமல் தனது ஆன்மாவைத் தடுத்துக்கொண்டு கண்களைத்திறந்து பார்க்கும் பொழுது அவ்வாறே அந்தப் பூலிங்கமூர்த்தியின் அருகில் தியாகராஜரது திவ்விய திருமேனி விளங்கக்கண்டு மனங்களித்து வலஞ்செய்து பணிந்து துதித்துச் சன்மப்பயனையடைந்தேனென்றுரைத்துக் கண்ணீர்மல்க நின்று தியாகேசரது கீர்த்தியைப்புகழ்ந்து மகிழ்ந்தான். அவ்வண்ணம் தோற்றிய பரமேசனும் மறைந்த பின்பு அவன் சிறந்த சிவபக்தனாய் உலகில் வாழ்வையடைந்தான்.

## 196. சன்னியாசிக்கு முடி சூட்டிய லீலை.

சித்யோகி யென்னும் வேதியர் ஒருவர் தியாகராஜா வின் பாதாரவிந்தத்தைப் பூஜித்துக்கொண்டு பாலப்பிரா யம் முதல் ஜோதிஷ சாஸ்திரத்தையே சாங்கமாய்க் கற்று வந்தார். குருவின் கடாக்ஷத்தினாலும், நற்புத்தியினாலும் தியாகராஜ பக்தியாலும் சோதிட சாஸ்திரத்தின் மர்மார்த் தங்களையறிந்த அவ்வேதியன் தன்னை வந்தடையும் ஜனங் களின் ஜாதகங்களைக் கணக்கிட்டுப்பார்த்து நவக்கிரக சார ங்களின் முறைப்படி அவரவர்களுக்கு நடைபெறப்போகும் தசா பலன்களையும், சுகதுக்க ஹேதுக்களையும் உபதேசித்து வரலானார்.

சித்யோகி யென்னும் அவ்வேதியர் இவ்விதமாய் அவர வர்களின் ஜாதக பலனையுரைத்து வருகையில் ஒரு நாள் அவருக்குத்தனது ஜாதகப்பலனையே தான் அறிந்து கொள்ள வேண்டுமென்னும் விருப்பமுண்டாயிற்று. தனது தந்தையாரால் குறிக்கப்பட்ட ஜாதகத்தை அவ்வேதியர் உற்றுநோக்குகையில் அந்தந்த தசாபலன்களின் மர்மார்த் தங்களை நன்ராய் அறிந்திருந்தபடியால் தான் ஜாதியில் அந் தணராயிருந்த போதிலும் மூன்றுமாத காலம் வரையில் சிம்மாஸனத்தில் முடிசூடப்பெற்றவனாய் மன்னவர் தொழும்படி ஒருக்ஷத்ரியயோகம் உண்டாகப்போகிறதாகத் தன் ஜாதகப்பலனைத்தானே அறிந்துகொண்டார். அது முதல் அவரது மனதில் வேதியர் ஜாதியிலுதித்த தனக்கு மன்னர் பதவி எவ்வாறுகிடைக்கும்? இவ்வையகத்தில் இது வரையில் அந்தணருக்கு முடி சூட்டுதல் நடந்தேறியதாக ஏற்படவில்லையே? ஜாதகப்பலன் பொய்யாகுமோ? அல்லது மெய்யாகுமோ? இந்நகரில் இவ்விதமாகவே இல்லறதருமத் தில் அமர்ந்திருப்போமாகில் தியாகேசனருளால் ஏதாவது ஒரு சமயத்தில் இம்மன்னர்பதவி கிடைக்கினும் கிடைக்கும். ஆகையால் நாம் இந்த இரண்டாவது ஆச்ரமத்தை யொழித்துவிட்டு நான்காவது ஆச்ரமமாகிய ஸன்னியாச

பதவியை யடைந்திருப்போமாகில் அவ்விதம் நமக்கு எவ்வாறு பூபாலர்பதவி கிடைக்கக்கூடும். அவ்விதத்திலும் ராஜ முடி கிடைக்குமாயின் நாம் கண்டறிந்த ஜாதகப் பயன் உண்மையாகும். இல்லாவிட்டால் பொய்யாகுமென்று தனக்குள் நிர்ணயம் செய்துகொண்டு மறுநாட்காலையில் கமலையில் சங்கல்ப பூர்வமாய் ஸ்நாநம் செய்து ஜபாதிகளை முடித்துவிட்டு ஒரு முகூர்த்தகாலம் வரையில் ஸமாதியைப் பெற்றுப் பிறகு தியாகேசரை மனதில் தியானித்துக் கொண்டு காஷாய தண்டத்தைப் பெற்றுக்கொண்டு பகவந் நாமோச்சாரணத்துடன் அத்திருவாரூர் நகரிலிருந்து தேச ஸஞ்சாரியாய்ச் செல்லலானார்.

ஜோதிஷம் பொய்யாகுமா? அல்லது தான் கற்றறிந்த சோதிஷ ஞானம் பொய்யாகுமா? இவ்விரண்டில் ஒருவாறு நிர்ணயத்தை யறியக்கருதிய சித்யோகி என்னும் அவ்வேதியர் காஷாய வஸ்திரத்தை யணிந்து ஸன்னியாசியாய்த் தேசாடனம் செய்துகொண்டு நர்மதா தீரவனத்தில் சென்றுகொண்டிருக்கையில் சகலலோக சிருஷ்டி கருத்தாவாயும், சகல சாஸ்திர நிர்மாதாவும் சகல சைதன்ய ஸ்வரூபியாயும் விளங்கும் பரமேசுவரனுடைய அருள்பெற்று விளங்கிய கோகர்ண மண்டலாதிபதியாகிய பரவிதாரண மகாராஜன் திடீரென்று சிவபிரானுடன் ஐக்கியச் செல்வத்தையடைந்தபடியாலும், அம்மன்னவனது பட்டமகிஷியின் பிரசவ காலம் நெருங்கியிருக்கிறபடியாலும், அப்பட்டமகிஷியின் வயிற்றிலிருக்கிற ராஜகுமாரன் உதிக்கும் வரையில் அக்கோகர்ண மண்டலத்தைப் பகை மன்னர் கைப்பற்றுவண்ணம் இருப்பதற்கு யோசனைசெய்த மந்திரிமார்களால் ஏவப்பட்ட பட்டத்து யானையானது தும்பிக் கையிலேந்திய புஷ்ப மாலையுடன் அந்தச் சன்னியாசியின் எதிரில் ஓடிவந்தது.

எதிர்முகமாய் ஓடிவந்த அந்த யானையானது அச்சன்னியாசியின் எதிர்நின்று வணங்கித் தனது துதிக்கையி

விருக்கும் அப்புஷ்ப மாலையை அந்த யோகியின் கழு
விட்டு அச்சன்னியாசியைத் தனது முதுகின்மேல் ஏற்றிக்
கொண்டு வெகு வேகமாய்ச் சென்று கோகர்ணபுரத்தில்
விளங்கும் பூபாலனுடைய அரண்மனை வாயிலையடைந்தது.
அவ்விதமாய் அப்பட்டத்து யானையினால் குறிப்பிட்டு
எடுக்கப்பட்ட அச்சன்னியாசியை மந்திரி முதலானவர்கள்
வணங்கிக் கைகூப்பி நின்று மண்டலாபிஷேகம் செய்து
வைத்து ராஜமுடியைச் சூட்டிக் கவரிவீசி ராஜோபசாரங்
களைச் செய்து அவரது ஆக்கினையினால் செழிப்பையடைந்த
அம்மண்டல முழுவதையும் முறைப்படி பாதுகாத்துவந்
தார்கள். சில வருஷங்களுக்கு முன்பு தான் கண்டறிந்த
ஜோதிஷ ஞானப்படியே தியாகராஜரருளால் தனக்கு ராஜ
முடி கிடைத்ததை மனமகிழ்ச்சியுடன் அங்கீகரித்துக்
கொண்ட அந்தச் சன்னியாசியானவர் நாளடைவில் அம்
மந்திரி முதலானவர்களுக்குத் தியாகராஜாவின் மகிமை
யைப்பற்றியும், தான் சன்னியாசம் செய்துகொண்டதற்கு
இன்ன காரணம் என்பதையும் புகழ்ந்துபேசி அம்மண்டல
வாசிகளுக்குத் தியாகராஜ பக்திப் பாலை விசேஷமாய்
ஊட்டிவந்தார். பிருகஸ்பதிக்கொப்பாகிய தனது புத்தி
யின் திறமையினால் மனுநீதி வழுவாமல் சிம்மாசனத்தில்
அமர்ந்து விளங்கும் அச்சன்னியாசியினால் உரைக்கப்பட்ட
தியாகராஜ லீலைகளைக் கேட்ட அக்கோகர்ண மண்டலவாசி
கள் யாவரும் அதுமுதல் தியாகராஜரது பாதாரவிந்தத்தில்
நிறைந்த பக்தியைச் செலுத்தி வாழ்ந்து வந்தார்கள்.
ஜோதிஷ சாஸ்திரத்தில் சிறந்த ஞானத்தைப் பெற்றவ
ராயும், தியாகேசரருளால் ஜோதிட முறை பொய்க்காவண்
ணம் மன்னர் பதவியில் முடி சூடப்பெற்ற அச்சன்னியாசி
யானவர் தனது ஜோதிஷ ஞானத்தினுலுரைத்த சிறந்த
சுப முகூர்த்தத்திலேயே அம்மகாராஜனது பட்டமகிஷியும்
குமாரனைப் பெற்றாள். அக்குமாரனுக்குச் செய்யவேண்டிய
வைதிக காரியங்களைப் புரோகிதர் மூலமாய் முறைப்படி
நடத்திவைத்து அக்குமாரனுக்கு முடிசூட்டிவிட்டு அச்

சன்னியாசியானவர் தியாகராஜத் தியானத்துடனே தேச சஞ்சாரம் செய்யலானூர்.

வானா நின்று தொழுமடி யார்கள்
வாறு ளப்பெறும் வார்த்தையைக் கேட்டும்
நாளு ளும்மல ரிட்டு வணங்கார்
நம்மை யாள்கின்ற தன்மையை யோரார்
கேளா நான்கிடந் தேயுழைக் கின்றேன்
கிளைக்கொ லாந்துணை யாமெனக் கருதி
ஆளா வான் பலர் முன்பழைக் கின்றேன்
ஆரூ ரானை மறக்கலு மாமே.



## 197. பட்டாடைகளைக் காண்பித்த லீலை.

கொங்குமண்டல வாசிகளான அமைச்சர்களும், வேதியர்களும், ராஜகுலவிருத்தர்களும் மற்றுமுள்ள தொண்டர்களனைவரும் அச்சந்நியாசி மகாயோகியினுல் உபதேசிக்கப்பட்ட தியாகராஜ தத்துவத்தை யறிந்து தியாகராஜ பக்தியையே அணியாகப்பூண்டு அந்நாட்டிலுண்டாகிய சிறந்த பட்டாடைகளையும், நவரத்தினுபரணங்களையும், கஸ்தூரி, அகில், குங்கிலியம், சந்தனம் முதலிய வாசனைத்திரவியங்களையும் தியாகராஜரது பாதாரவிந்தத்தில் காணிக்கையாக அளிக்க வேண்டுமென்று பக்தியினுல் அவைகளைப் பல்லக்கிலேற்றிக்கொண்டு திருவாரூர் நகருக்குச் செல்லலா

இவ்விதமாய் அக்கொங்குமண்டல வாசிகள் திரவியங்களைப் பல்லக்கிலேற்றிக்கொண்டும், ஈசுவரநாம சங்கீர்த்தனம் செய்துகொண்டும் கொடிய காடுகளையும், மலைமுகடுகளையும், பள்ளத்தாக்குகளையும் தாண்டி ஸித்தகிரியின் அடிவாரத்தில் வருகையில் சில நாட்களாய் வழிநடையினுல் தளர்ந்த சரீரமுடைய அக்கொங்குமண்டல பக்தர்கள் மந்தகமனத்துடன் சென்றுகொண்டிருக்கையில் அவர்களது

வழியில் ஒருநாள் அந்திநேரமாக இருந்தது. அவ்வித இரவில் அத்தொண்டர்கள் மேடுள்ள பூமியையும் பள்ளமுள்ள பூமியையும், மலையினடிவாரத்தையும் அறியாதவர்களாய் அன்றிரவில் தங்குமிடத்தையும் அறியாதவர்களாய் நெடுநேரம் வரையில் மேடுபள்ளங்களில் அலைந்து திரிந்து முடிவில் ஒரு குகையின் வழியைக்கண்டு அவ்வழியாய் அக்குகைக்குள் நுழைந்து தியாகராஜரது நாமஸங்கீர்த்தனத்தையே உணவாகக்கொண்டு அன்றிரவை அக்குகைக்குள் கழிக்கலாயினர்.

அத்தொண்டர்கள் யாவரும் திருவாரூருக்குச் செல்லக் கருதி நடுவழியில் அச்சித்தர் மலையினடிவாரத்தில் தங்கியிருந்து அன்றிரவைக்கழித்து வருகையில் அவ்வித பக்தஜனங்களின் சஞ்சாரக்குறிப்பை யறிந்துகொண்ட சிலதுஷ்டவேடர்கள் அக்குகையின் அருகில்வந்து அவ்விடத்தில் அப்பக்தர்கள் தியாகராஜருக்காகப் பல்லக்கில் ஏற்றிவந்திருக்கும் பட்டாடை முதலியவைகளைக் கவரவேணுமென்று முயற்சி செய்தார்கள். அன்றிரவில் அக்குகையில் அக்காட்டுச் சோரர்களின் பாய்தலைத்தடுக்கச் சக்தியற்றிருக்கும் அத்தொண்டர்களை அச்சோரர்கள் ஒதுக்கிவிட்டு அவ்வித சிறந்த பொருள்கள்யாவையும் அபகரித்துச் சென்றார்கள்.

அவ்விதமாய் அக்காட்டுச் சோரர்கள் அத்தொண்டர்கள் சேகரித்து வந்த பொருள்களையெல்லாம் கைப்பற்றிச் சென்றவுடனே கதிரவனும் கீழ்த்திசையில் விளங்கினான். சோரபயமும் இருளும் தணிந்தபிறகு உபகாரத் திரவியங்களை யிழந்த அத்தொண்டர்கள் யாவரும் பிளக்கப்பட்ட மனமுடையவர்களாய் அழுது புலம்பித் தியாகராஜரது பாதமலரைத் தியானித்துக்கொண்டே புண்ணிய புரிக்குச் செல்ல மனமில்லாதவர்களாயும், தமதிருப்பிடத்துக்குச் செல்ல மனமில்லாதவர்களாயும் மனத் தடுமாற்றத்தை யடைந்து முடிவில் ஒருவாறு மனத்துணிவையடைந்து அங்கிருந்து புறப்பட்டு அநேக கிராமங்களையும் நகரங்களையும் நதி

களையும் தாண்டி அப்புண்ணியபுரியை யடைந்தார்கள். அம்மண்டலத்தில் புகும்பொழுதே அளவற்ற மனக் களிப்பை யுடையவராய்ப் புண்ணிய புரியை யடைந்து புண்ணிய தீர்த்தங்களில் நீராடி விபூதி ருத்திராக்ஷ மாலை களை மந்திர பூர்வகமாய் அணிந்துகொண்டு பிரபுவின் ஸன்னிதானத்தை யடைந்து திவ்வியவடிவத்தைத் தரிசித்துப் பணிந்து கைகூப்பித்துதி செய்யலாயினர்.

அக்கொங்குமண்டல பக்தர்கள் அவ்விதமாய் அள வற்ற பக்தியுடன் துதிசெய்கையில் பூஜகரில் ஒருவர் வந்து ஓ பக்தர்களே! சில நிமிஷங்களுக்கு முன் தியாகராஜரது திருமேனியில் இல்லாத சிறந்த பட்டாடைகளும் நவரத்தின ஹாரங்களும் இப்பொழுது விளங்குகின்றனவே; இவ்வற்புத தரிசனத்தைக் காண்பீர்கள் என்றுரைக்கவே மந்திரியார் முதலிய தொண்டர்கள் அப்பொழுது தியாக ராஜரது திருமேனியை உற்று நோக்குகையில் தாம் கொண்டுவந்த பட்டாடைகளும், ஆபரணங்களும் ஈசனது திருமேனியில் விளங்கக்கண்டு ஆச்சரியப்பட்டு அன்றிர வில் சித்தகிரியின் அடிவார குகையில் சோரர்களால் கவரப்பட்ட தமது காணிக்கைத் திரவியங்களே இவை கள் என்று நிச்சயித்து அவ்வதிசயத்தை அங்குள்ள தொண்டர்களுக்கறிவித்தார்கள். அந்தக்ஷணத்தில் உண் டாகிய ஆகாயவாணியினால் அத்தொண்டர்களெல்லோ ரும் தாம் கொள்ளையிழந்த அப்பொருள்கள் யாவும் அச் சோரர்களின் எதிரில் ஒரு வீரனாய்த் தோன்றிய தியா கேசராலேயே கவரப்பட்டு இவ்விதமணியப்பட்டதென் றறிந்து கொண்டு பரமானந்த மடைந்தார்கள்.



## 198. பாரம் தூக்கிய லீலை.

சக்கன் என்னும் சண்டாளன் ஒருவன் ஈசுவர பக்தி யையடைந்தும், தனது ஜாதித் தொழிலாகிய புற்கட்டு விற்பனையைச் செய்துகொண்டு காலம்கழித்து வந்தான்.

சக்கன் என்னும் அச்சண்டாளன் காலை நேரத்தில் எழுந்திருக்கும் தருணத்தில் தென் திசையை நோக்கிப் பணிந்துவிட்டுச் சமீபத்திலுள்ள புல்லுள்ள பூமியில் சென்று பசும்புற்களை வெட்டிக் கட்டித் தனது தலையின் மீது அப்புற்கட்டை வைத்துக்கொண்டு அருகிலுள்ள அசுவபாலகர்களுக்கு அப்புற்கட்டுகளை விற்று அவன் குடும்ப ரக்ஷணம் செய்துவந்தான். தியாகராஜரின் சிறப் பைப் பலவாறு பக்தர்கள் சொல்லக் கேட்டது முதல் அச் சண்டாளனது மனதில் ஊற்று நீர்போல் கொஞ்சம் கொஞ்சமாய் ஈசுவர பக்திரஸம் பெருகலாயிற்று. அதனுல் அச்சக்கன் என்பவன் சிவமே! சிவமே! சிவமே! தியாக சிவமே! என்று இவ்விதமாய் இடைவிடாமல் எவ்விடத் திலும் எந்நேரத்திலும் சொல்லிக்கொண்டே புற்களைச் சேகரிப்பான். அவ்வித புற்கட்டுகளைத் தூக்கிச்செல்லும் பொழுதும் சிவமே! சிவமே! என்றுரைத்துக்கொண்டே செல்வான். குதிரைகளுக்காக அப்புற்கட்டுக்களை வாங்க வெண்ணி அவனருகில் வந்தவர்கள் இப்புற்கட்டின் விலை என்ன என்று வினவும்பொழுதும் சிவமே! சிவமே! என்றுரைப்பான். அவனது பக்தியைக் கண்டவர்கள் வியப்படைந்து அப்புல்லுக்குத் தக்கவாறு திரவியத்தை யளித்துவருவார்கள்.

இவ்வண்ணம் அந்தச் சக்கன் சிவமே! சிவமே! என்று நாமங்களை உச்சரித்துக்கொண்டே தியாகேசரிடத்தில் ஒப் பற்ற பக்தியுடையவனுய்க் குடும்பத்தை நடத்திவருகையில் ஈசுவர நாமோச்சாரணத்தின் மகிமையினுல் அவனது மன தில் கொஞ்சம் கொஞ்சமாய் உலக தத்துவங்களும், பக்த

ரின் சிறப்பும் தியாகேசரது தத்துவச் சிறப்பும் வளர்ந்து வந்தன. பஞ்சபூதங்களின் சம்பந்தத்தையடைந்த மனுஷ்ய சரீர ரக்ஷணத்துக்காக அவன் தினந்தோறும் புல்லைச் சேகரித்து விற்றுவருகையில் ஒரு நாள் அவனுக்கு ஜ்வரம் வந்தது. நாடிகள் மெலிவையடைந்தன. சரீரத்தில் பலக் குறைவும் உண்டாயிற்று. அதனால் அத்தருணத்தில் சரீர சக்தியையிழந்திருக்கும் அந்தச் சக்கன் நாலைந்து நாள்வரையில் புல்லைச் சேகரிக்கச் செல்லாமையால் அவனது மனைவி மக்கள் ஜீவனத்துக்குப் பொருளில்லாமையால் இரண்டொருநாள் பட்டினியாயிருக்கவும் நேரிட்டது. மக்களும், மனைவியும் உணவுப்பொருளின்றி இரண்டொரு தினங்களாய்ப்பசியினாலும், களைப்பினாலும் வாடுவதைக் கண்டு மனம் நொந்துவாடிய சக்கன் தனது ஜ்வரத்தைப் பொறுத்துக்கொண்டு சிவமே! சிவமே! என்று சொல்லிக் கொண்டே சென்று மெதுவாய்ப் புற்களைச் செதுக்கி ஒரு கட்டாகக்கட்டிய பிறகு அக்கட்டைத்தனது தலையின்மீது தூக்கி வைத்துக்கொள்ளுவதற்காகப் பலவாறு முயன்றான்.

அந்தச்சக்கன் ஜ்வரத்தின் வேகத்தினால் தளர்ந்த நாடிகளையுடையவனாய் அப்புற்கட்டைத் தனது தலையில் தூக்கி வைத்துக்கொள்ளமுடியாமல் கண்ணீர் மல்க நின்று "சிவமே! சிவமே! இப்புற்கட்டை நான் எவ்விதத்திலாவது நகருக்குக் கொண்டுபோய் விற்பனை செய்து உணவுப் பொருளைத்தேடி யளிக்காவிடில் எனது குடும்பத்திலுள்ளவரனைவரும் எவ்வித அவஸ்தையையடைவார்களோ? அதை நீரே அறிவீர்" என்று தியாகேசரைத்தியானிக்கையில் அவன் மீது கருணைசெய்த தியாகேசர் அப்பொழுது அவன் எதிரில் ஒரு புருஷன்போல் தோன்றி அப்புற்கட்டை அவனது தலையில் தூக்கிவைத்துவிட்டுத்திருவாரூர் நகரின் கோபுரவாசலில் இப்புற்கட்டை விற்பாய் என்று உரைத்துவிட்டு மறைந்தார். ஈசனது கரத்தினால் தொடப்பட்ட அப்புற்கட்டானது அத்தருணத்தில் அவனது தலை

யில் மாலைபோல் லேசாக விளங்கக்கண்டு தனது தெய்வ மாகிய சிவக்கொழுந்தின் அருளாலேயே இக்கட்டுப்பமு வற்றதாய்த் தோன்றுகிறதென்று நினைத்துக்கொண்டே அவன் அவ்விடம் சிவநாம கீர்த்தனையுடன் சென்று கொண்டிருந்தான்.

## 199. மாளமுயன்றோனுக் கருள்செய்த லீலை.

மாதங்கன் என்பவன் தியாகராஜ பக்தியையடைந்து ஈசுவர நாமத்தை உச்சரித்துக்கொண்டு சந்திரசேகர தரி சனத்திற்காகச் செல்லும் பக்தர்களுக்குப் பலவாறு உப சாரங்கள் செய்துவரலானான். அந்த மாதங்கன் க்ரீஷ்ம காலத்தில் தொண்டர்களுக்கு விசிறி அளிப்பான். அவர் கள் தங்கியிருந்து செல்வதற்காக நடுவழியில் பந்தல்களைப் போட்டு நிழலளித்து வருவான். க்ரீஷ்ம காலத்தில் பர மேசுவர பக்தர்களின் பாதங்கள் கொடிய வெய்யிலினால் வாடாவண்ணம் பாதரக்ஷையளித்து வருவான். இவ்வண் ணம் அம்மாதங்கன் பக்தர்களுக்குப் பற்பல சமயங்களில் தக்கவாறு உபசாரங்களை முறைப்படி செய்துவந்தான்.

அந்த மாதங்கன் மற்றொரு சமயத்தில் திருவாரூர் நகருக்குத் தொண்டர்கள் செல்லும் வழியில் முட்கள் பரவிப் படர்ந்திருக்கக் கண்டு அவ்வித முட்களை ஆயுதங் களினால் வெட்டியெறிந்து அவ்வித பாதைகளை நன்றாய்ச் சுத்திசெய்து நடுவழியில் சிற்சிலவிடங்களில் பந்தல்களை நாட்டி நிழலையுமளித்து வெகு சுகமாய் ஈசுவர பக்தர்கள் செல்லும்வண்ணம் செய்துவைத்து ஈசுவர நாமத்தை மன னம் செய்துகொண்டே தொண்டர் வரவை எதிர்பார்த் திருந்தான். அந்த மாதங்கன் முட்களைக் கொய்து தனது கையினால் சீர்திருத்தம் செய்யப்பட்ட வழியில் தொண்டர் களின் வரவை எதிர்பார்த்திருக்கையில், அத்தருணத்தில்

மூன்று நாள் வரையில் ஈசுவர பக்தரில் ஒருவரேனும் அவ் வழியாகச் செல்லவில்லை. அதனால், மனம் நொந்து வாடிய அம்மாதங்கன் மிகவும் வருத்தத்தையடைந்து முகம் கருகிக் கண்ணீர் ததும்ப, "ஓ தியாகேச! நான் இதுவரையில் உமது பாதாரவிந்தத்தில் பக்தியைச் செலுத்தி, உமது பக்தர்களுக்குக் கோடை காலத்தில் உபசாரங்களைச் செய்துவந்து, அவர்களின் தரிசனத்தைப்பெற்று, ஆன்மா வுக்குப் பயனை அடைந்துவந்த நான் இப்பொழுது மூன்று நாளாய் உமது பக்தர்களின் தரிசனத்தையடையவில்லையே, உமது பக்தர்கள் நடந்துசெல்லும் இவ்வழியிலுள்ள முட் களை நீக்கி, மணல் பரப்பிப் பந்தலிட்டுப் பாதரக்ஷை செய்து வைத்திருக்கிறேனே; இவைகளை அங்கீகாரம் செய்துகொள்வதற்கு உமது பக்தரில் ஒருவரும் இவ்வழி யில் வரவில்லையே; என் செய்வேன் தியாகேச!" என்று அழுதான்.

இரண்டு மூன்று முகூர்த்த காலங்கள் கழியும் வரை யில் இவ்விதமாய் ஈசனைப்பற்றிப் பலவாறு கதறிய போதிலும், அவ்வழியில் ஒரு சிவபக்தரும் தோற்றவில்லை. அதனால் மனவருத்தத்தையடைந்த அச்சண்டாளன் தான் ஈசனிடத்திலும், ஈசுவர பக்தரிடத்திலும் ஏதோ ஒரு பெரிய குற்றம் செய்திருக்க வேண்டும். இல்லாவிடில் ஏன் இவ்வாறு சிவபக்தர் தோற்றவில்லை? என்று நினைத்து இவ்வித மகாபாபத்தைத் தொலைக்கமுடியாதென்று நிர்ண யம்செய்து தான் செய்துவந்த விரதத்துக்கு நற்பயனுண் டாகாமலிருக்கிறபடியால் நிந்திக்கக்கூடிய தனது ஆன் மாவை வைத்திருப்பதைக் காட்டிலும், இறப்பதே நலம் என்று துணிந்து, அந்த மாதங்கன் அருகிலிருந்த கற் றையில் தனது தலையை மோதிக்கொள்ளவும் துணிந்து ாகேச! எனது சரீரமுடிவில் நற்கதியளிப்பாயென்று வர ஸ்மரணத்துடன் அக்கற்பாறையில் தலையை நாட்டு யில் அவனது பக்தியின் சிறப்பைக் கண்டு தியாகேசர்

'நீ விரும்பியவாறே உனது சரீரமுடிவில் நற்பதவி கிடைக்கும்; நீ இப்பொழுது வீணாய் உயிரைமாய்க்காதே" என்று ஆகாயவாணியின் மூலமாகக்கூற, அதைக்கேட்டுத் திரும்பிய அப்பக்தன் அதுமுதல் தடையற்றதாய் விளங்கும் அத்தொழிலேயே விரதமாகக் கொண்டு சிறப்புடன் பக்தர்கள் கோஷ்டியில் விளங்கலானான்.



## 200. சாபத்தைப் பெற்றவருக்குச் சன்மமொழித்த லீலை.

மிருகண்டு மகரிஷியின் தபோவனத்தில் சிலகாலம் தங்கியிருந்த காச்யபமகரிஷியானவர் தமது சிஷ்யர்களுக்குச் சாஸ்திரப் பிரவசனம் செய்துவந்தார். அச்சிஷ்யர்களுள் சாமுண்டதேவனென்பவனும் வாமதேவன் என்பவனும் சிறந்த புத்தியையுடையவர்கள். அவ்விருவர்களும் சாஸ்திரார்த்தங்களைக் கற்றுணர்ந்து வருகையில் சில தினங்களில் சாமுண்டதேவனுக்கு நுட்பமான விஷயங்கள் புலப்படும். அப்பொழுது அவன் தனக்கு வாமதேவன் நிகரல்லவென்று தன்னைப் புகழ்ந்துகொள்வான். சிலதினங்களில் வாமதேவனுக்கு நுட்பமான விஷயங்கள் புலப்படும். அப்பொழுது அவன் தனக்குச் சாமுண்டதேவன் நிகரல்லவென்று தன்னைப்புகழ்ந்து கொள்வான்.

இவ்விதமாய் அவ்விரண்டு சிஷ்யர்களும் மோகத்தினால் தமது மேதையின் சிறப்பைபற்றித்தாமே புகழ்ந்து வருகையில் அவ்விஷயத்தை அறிந்துகொண்ட காச்யப மகரிஷியானவர் பாடம் நடக்கும்பொழுது அவ்விருவருக்கும் நற்புத்தி யளிக்கவேண்டுமென்று நினைத்து "அருவுருவின் மெய்ப் பொருளைக்கற்றவராயினும், அருங்கலைகளைக்கற்றவராயினும், வேதப்பொருளுரைக்க வல்லவராயினும், இரு

வினைகளையும் களையவல்ல வல்லமையை யடைந்தவராயி னும் சாந்தகுணத்தை அணியாகப்பூண்டு தம்மைத்தாமே புகழ்ந்து கொள்ளாமலிருப்பது விசேஷமான சிறப்பின் பொருட்டாகும். மலருக்கு வாசனையிருக்குமாயின் அப் பரிமளமானது தானகவே திசையில் வீசும். அதுபோல் தம்மிடமிருக்கும் ஞானவொளியை வெகு சுலபமாய் ஞானி கள் கண்டறிந்து புகழ்வார்கள். ஆகையால் தம்மைத் தாமே புகழ்ந்து கொள்ளாமலிருப்பது விசேஷச் சிறப்பின் பொருட்டாகும்" என்று இவ்விதமாய் நற்புத்தியை உண்டு பண்ணக்கூடிய உபாக்யானங்களைச் சொன்னபோதிலும் அவ்விரு சிஷ்யரும் தமது புத்தியின் சிறப்பைத்தாமே புகழ்ந்துவந்தார்களே தவிர, குருவின் உபதேசப்படி ஆத்ம ஸ்துதியை விடவேயில்லை.

தத்தமது ஞானச் சிறப்பைப்பற்றித் தாமே புகழ்ந்து கொள்ளும் அவ்விருவர்களுக்கும் நாளடைவில் ஒருவருக் கொருவர்மீது பகையுமுண்டாயிற்று. அப்பகையைத் தணிக்க வேண்டுமென்று அவர்களது குருவானவர் எவ்வித முயற்சி செய்தபோதிலும், அம்முயற்சி அவர்களது விஷ யத்தில் பயன்படவில்லை. அவ்விருவர்களும் ஒரு நாள் மாலை நேரத்தில் பிரதோஷ காலம் நெருங்குவதற்கு முன்பு அக்குருவையடைந்து "எங்கள் இருவர் ஞானத்துக்குள் யாருடைய ஞானம் சிறந்தது? இவ்விஷயத்துக்கு நீரே சாக்ஷி; தாங்களே சொல்லவேண்டும். இல்லாவிடில் எங் களது பகைக்கு முடிவு நேரிடாது" என்று நிர்ப்பந்தம் செய்தார்கள். ஞானத்திலும், தாரணை, தியானம், ஸமாதி, யோகம் முதலான அஷ்டாங்க யோகத்திலும் தெளிவை யடைந்த அந்தக் காச்யப மகரிஷியானவர் சற்று நேரம் வரையில் கண்களை மூடித் தியானம்செய்து யோகக் கண் களால் அவர்களுக்கு நேரிடப்போகும் விஷயத்தையறிந்து கொண்டு "ஓ சிஷ்யர்களே! உங்களது ஞானச் சிறப்பை நான் நாலைந்து தினங்கள் செல்வதற்குள் உரைக்கிறேன்;

அதுவரையில் நீங்கள் பொறுமையுடன் என்னுடன் வரு விர்கள்" என்றுரைத்துவிட்டு மற்ற சிஷ்யர்களுடன் அவ் விருவர்களையும் அழைத்துக்கொண்டு திருவாரூர் நகருக்கு வந்துசேர்ந்தார்.

சிஷ்யர்களுடன் புண்ணியபுரியையடைந்த காச்யப மகரிஷியானவர் புண்ணிய தீர்த்தங்களில் நீராடி ஜபம் செய்துகொண்டிருக்கையில் அவ்விருவரில் வாமதேவன் என்னும் சிஷ்யன் காலவிளம்பத்தைச் சகிக்காதவனாய்த் தனது ஸத்திய ஞானத்தைப் பழிக்கும் சாமுண்டன் இந் நிமிஷம்முதல் சுவானமாய் மாறக்கடவது என்று கொடிய சாபத்தைக் கொடுத்துத் தான் கற்ற ஸத்திய ஞானத்துக் கும் ஸத்திய சாஸ்திரத்துக்கும் பரமேசனே சாக்ஷியென் றுரைத்துத் தணிந்த கோபமுடையவனாய்த் திகைத்து நின்றான். இவ்விதமாய்த் தன்மீது வாமதேவன் சாபமளிக் கப்போகும் விஷயத்தை முன்னமே அறிந்துகொண்ட சாமுண்டனும் அவ்வாறே வாமதேவனுக்குக் கொடிய சாபத்தைக் கொடுத்தான். ஜபத்தை முடித்துக் கண் களைத் திறந்த மகரிஷியானவர் தனது சிஷ்யர்களுடைய சாப விஷயத்தை யறிந்துகொண்டு சகலலோக நாயகனும் மண்ணுலகில் புண்ணிய ராசியென புண்ணியபுரியின் மத்தி யில் விளங்குகிறவராயும் உள்ள தியாகேசரது பாதாரவிந் தங்களைச் சற்றுநேரம் மனதில் நினைத்து மெய்ம்மறந்து நிற்கும்பொழுது தியாகேசர் ஆகாயவாணியின் மூலமாக "கேளீர் காச்யப மகரிஷியே! உமது சிஷ்யர்களாகிய இவ் விருவர்களும் கல்விச் செருக்கையடைந்து மோகத்தினால் ஒருவர்மீது ஒருவர் ஏவிய சாபத்துக்குப் பயன் உண்டாகா மல் போகக்கடவதென்று நீர் விரும்பியவாறே யானும் செய்தேன். இதுமுதல் இவ்வுலகில் இவர்கள் போன்றவர் களின் மனதில் சாந்தி ஏற்படும்படி நீர் நற்சாஸ்திரோப தேசம்செய்து, அகங்காரம், மமகாரம், டம்பம், பொறாமை, [illegible], ஆத்ம ஸ்துதி முதலான கலியுக குணங்கள் அழி

யும்படிசெய்து எனது பக்தியை உலகில் பரவச் செய்வீர்" என்று கூற, அதைக் கேட்ட அவ்விரு சிஷ்யர்களும் சரத் கால ஜலம்போல் தெளிந்த மனமுடையவர்களாய்க் கொண்டு தியாகேசரைப் பலவாறு புகழ்ந்து, குருவின் பாதத்தில் பணிந்து அதுமுதல் நற்குணங்களுக்குப் பாத் திரர்களாய் விளங்கலானார்கள். காச்யப மகரிஷியும் ஆனந் தக் கண்ணீர் சொரிந்து சாபத்தைப்பெற்ற சிஷ்யருக்கு நேரிடக்கூடிய நீச ஜன்மத்தைத் தடுத்து ஈசன் காத்த மகிமை முதலிய திவ்விய குணச் சிறப்புக்களைத் தொண்டர் களுக்கு உபதேசம் செய்துகொண்டே க்ஷேத்திராடனம் செல்லலானார்.



## 201. ருத்திராக்ஷத்தை நிறைகட்டச்செய்த லீலை.

காஞ்சி நகரில் விளங்கும் சந்திர மௌளீசுவரருடைய பாதாரவிந்த வந்தனைகளால் சகல பாபராசிகளையும் நீக்கித் தூய்மையான மனமுள்ள வேதியர் ஒருவர், திரு வாரூர் நாதனது திவ்யலீலைகளின் அற்புதங்களைக் காதி னால் பானம் செய்தார். நந்திதாஸர் என்னும் அவ் வேதியர் அதுமுதல் செல்வத்திருவாரூரையடைந்து தியா கேசரைத்தர்சிக்க வேண்டும் என்ற அவாவினால் இடை விடாமல் அவ்விசனை மனக்கமலத்தில் புகச்செய்து வந்த மையால் ஒருநாள் தியாகேசர் அவ்வேதியரது கனவில் தோன்றித்தமது திவ்ய ஒளியைக்காட்டி மறைந்தார். அவ் விதமாய் ஈசுவர தரிசனத்தைப்பெற்ற அவ்வேதியர் மறு நாட்காலையில் நித்திய கர்மானுஷ்டானங்களை நிறைவேற்றி விட்டுக் காஞ்சிநாதனைத் தர்சித்துவிட்டுக் கனவில் தோன் றிய தியாகேசனது திருமேனியின் சிறப்பை மனதில் ஸ்மரித்துக் கொண்டு திருவாரூருக்குச் செல்லலானார்.

நந்திதாசர் என்னும் அவ்வேதியர் இவ்விதம் தென் திசையில் விளங்கும் திவ்ய க்ஷேத்திரங்களையடைந்து அங் கங்கு விளங்கும் பரமேசுவரனுடைய தர்சனத்தைப் பெற்றுப் பரிபூர்ணமாய் ஆனந்தத்தை யனுபவித்துக் கொண்டே திருவாரூரை யடைந்து அங்கு விளங்கும் வீதி விடங்கன் என்னும் விலையற்ற நன்மணியைக் கண்ணாரக் கண்டு தொழுது துதித்து ஆனந்த பரவசராய் இரண்டு பக்ஷங்கள் செல்லும்வரையில் தியாகேசனது திருமேனியை அடிக்கடித் தரிசனம்செய்து முன்பு தனது கனவில் தோன் றிய திருமேனிக்கும் இங்குத் தேவபீடத்தில் விளங்கும் திரு மேனிக்கும் உபமிப்பையனுசந்தித்து அந்நகரின் புண்ணிய தீர்த்தக்கரைகளில் வாசம் செய்துவரும் மகரிஷிகளை யடைந்து, தியாகேச லீலையின் அற்புதங்களைக்கேட்டு மது உண்ட வண்டுபோல் மனக்களிப்பையடைந்து அந்நகரில் சிலகாலம் வாசம் செய்துவந்தார்.

அத்தருணத்தில் அம்மண்டலாதிபதியாகிய சோழன் தான் வார்த்தக தசையிலிருப்பதால் தான் சுவர்க்கம் செல்வதற்கு முன் இவ்வுலகிலுள்ள ஜனங்கள் யாவருக்கும் சிறந்ததோருதவி செய்ய வேண்டுமென்று கருதி அன்று முதல் ஆறு மாத காலத்துக்குள் யார் யார் எவ்வளவு வெள்ளி, சுவர்ணம், ரத்தினம் இவைகளைக் கொண்டுவரு கின்றார்களோ அவரவர்களுக்கு அவ்விதப் பொருளின் நிறையைக்காட்டிலும் மூன்று பங்கு அதிகப் பொருள் அளிப்பதாயும், கொஞ்சமேனும் திரவியமற்றிருக்கும் ஜனங்களுக்கு அவர்கள் வேண்டியவாறு பொருள் அளிப்ப தாயும் இவ்வித மகாதான விஷயத்தைப் பறையறைந்து நாடெங்கும் பரவச்செய்தான். செல்வத்தினால் குபேர னுக்கு நிகராகிய சோழன் சகல ஜனங்களுக்கும் மகா தானம் செய்யப்போவதாய்ப் பரவிய சமாசாரத்தைக் கேட்ட ஜனங்கள் கணக்கற்றவர்களாய்ப் புண்ணியபுரத் தைச் சூழ்ந்துகொண்டார்கள்.

அவ்வித ஜனங்களில் சிலர் தமது வசத்திலிருந்த வெள்ளிக்கட்டிகளையும், சிலர் சுவர்ணக்கட்டிகளையும், சிலர் நவரத்தினங்களையும், சிலர் இவைகளால் செய்த ஆபரணங்களையும், எடுத்துக்கொண்டுவந்து அச்சோழனுடைய கொலுமண்டபத்தில் வந்துநின்று அங்குவிளங்கும் பூபதியினாலும், அமைச்சர் முதலியவர்களாலும் மரியாதை செய்யப்பட்டவர்களாய் அங்கு விளங்கும் ஒரு துலாக்கோலில் தமது பொருளைவைத்து நிறுத்த பிறகு அதைக்காட்டிலும் மூன்று பங்கு அதிகமான பொருளைப் பெற்றுக்கொண்டு மனக்களிப்புடன் ஆசிகூறிச்செல்லலாயினர். வெள்ளி, சுவர்ணம் முதலிய பொருளற்ற ஜனங்களும் அவ்வாறே சோழனின் அருகில்சென்று மரியாதையைப்பெற்ற பிறகு வாடித்தாழ்ந்த முகத்தினால் தமதிடம் எவ்விதப் பொருளும் இல்லையென்றுரைத்த முயற்சியுடன் அம்மகாராஜனால் அளிக்கப்பட்டவைகளில் சில ஏழைகள் பட்டாடைகளையும் சிலர் பொற்கட்டிகளையும், சிலர் வெள்ளிக்கட்டிகளையும், சிலர் வெள்ளிப்பாத்திரங்களையும், சிலர் முத்துஹாரங்களையும் சிலர் ஹாரங்களையும் இவ்வாறு தமது விருப்பம் போல் திரவியங்களைப் பெற்றுக்கொண்டு அச்சோழனை புவியில் விளங்கும் கற்பகம் என்று போற்றித்திரும்பலாயினர்.

இவ்விதமாய் எண் திசைகளிலிருந்தும் கணக்கற்ற ஜனங்கள் தினந்தோறும் நற்பொருளை வாங்கிச் செல்வதைப் பார்த்திருந்த நந்திதாசர் தானும் பிறவியில் ஏழ்மையை யடைந்திருப்பதால், அம்மகாராஜனிடம் சென்று தனது குடும்பத்துக்கேற்ற பொருளைப் பெறலாமென்று சிந்தித்துத் தேவாலயத்தை வலஞ்செய்து தியாகேசனைத் தர்சித்து அவரது திருமேனியை மனதில் தியானித்துக் கொண்டே அச்சோழனுடைய கொலு மண்டபத்தை யடைந்து பூஜையைப்பெற்ற பிறகு அந்த நந்திதாசர் தன்னிடத்தில் எவ்விதமான பொருளுமில்லையென்று விளம்ப

முயன்ருர். அத்தருணத்தில் அவரது மனதில் குடிகொண்டிருந்த தியாகேசர் அவ்வேதியர் மூலமாய் உலகிலுள்ள ஜனங்களுக்குப் பக்தியை யுண்டுபண்ண வேண்டுமென்று நினைத்து அவ்வேதியரது மனதை மாற்றிவிட்டார். இவ்விதம் ஈசனுல் மாற்றப்பட்ட மனமுடைய அவ்வேதியர் தன்னிடத்தில் எவ்விதமான பொருளும் இல்லையென்று சொல்லாமல் தனது கழுத்தில் அணிந்திருந்த ருத்திராக்ஷ மாலையிலிருந்து ஒரு ருத்திராக்ஷத்தைக் கழற்றி எடுத்து அங்குள்ள துலாக்கோலில் வைத்தார். அதைக் கண்ட சோழன் மற்ருெரு தட்டில் சுவர்ணத்தை வைத்தான். அப்பொழுது ருத்திராக்ஷ நிறைக்குச் சுவர்ண நிறை குறைந்து காணப்பட்டது. அதைக்கண்டு வியப்படைந்த சோழன் கொஞ்சம் கொஞ்சமாய் மலைராசியாயுள்ள சுவர்ணத்தையும், வெள்ளியையும் நன்மணிகளையும் வைத்து நிற்கும்பொழுதும் ருத்திராக்ஷ நிறைக்குக் குறைவாகவே காணப்பட்டதைப்பற்றி அங்குள்ளவர்கள் ஆச்சரியப் பட்டுத் திகைத்து நின்ருர்கள்.

அச்சபையிலிருந்த சோழ பூபாலன் முதலியவர்கள் எத்தனை திரவியங்களை திராசிலிட்டபோதிலும் மற்ருெரு தட்டில் நிலைபெற்றிருக்கும் ருத்ராக்ஷ மணியின் நிறைக்கு குறைவாகவே தோற்றக் கண்டு ஆச்சரியத்துடன் மெய் மறந்து நிற்கையில் காஞ்சி நகர பக்தனுகிய அந்த நந்தீசன் என்னும் வேதியன் க்ஷணகாலம் கண்களை மூடி தியானம் செய்திருந்து சொல்லலுற்ருர். "கேளீர் பூபாலர் முதலிய ஆஸ்திகர்களே! இவ்வுலக வாழ்க்கைப் பற்றையே சிறந்ததென்றெண்ணிய ஜனங்கள் யாவரும் இந்த ராஜ சபையிலிருந்து அளவற்ற செல்வத்தைப் பெற்றுக்கொண்டு போவதைக்கண்டு நானும் மோஹத்தையடைந்து அவ்வாறே செல்வத்தையடைய வேண்டுமென்று நினைத்தே இவ்விடம் வந்தேன். நான் தியாக கற்பகத்தையும் காஞ்சீ நகருக்கு மணியென விளங்கும் சந்திரமௌளி நாதனையும்

ஸ்மரித்துக்கொண்டே இவ்விடத்தை யடைந்தபிறகு என் மீது கருணைசெய்த தியாகநாதன் எனக்கு வைராக்ய செல்வத்தையளிக்க விரும்பி இவ்வண்ணம் ருத்திராக்ஷ மணியை நிறைகட்டும்படி என்னை ஏவினார். இதனால் ஈசுவர பக்தியின் சிறப்பையும் ஈசுவர பக்தர்கள் அணியும் ருத்திராக்ஷத்துக்கும் உலகச் செல்வங்களுக்குமுள்ள பேதத்தையும் தியாகேசர் இப்பொழுது நன்றாக எடுத்துக்காண்பித்து அருள் செய்கிறார்போலும்" என்றிவ்விதமாய் அவ்வந்தணர் உரைக்கவே அவ்விஷயத்தைக் கேட்டவர்களில் ஒவ்வொருவரும் வைராக்யத்தையும் ஈசுவர பக்தியையுமே சிறந்ததனமாக நினைத்து தங்களுக்கு மஹாராஜன் அளித்த செல்வத்தை எல்லாம் தர்ம வழியில் செலவிட்டு ஆனந்தமடைந்து சுகவாழ்வு எய்தியிருந்தனர். தியாக பூபாலனது இந்த அற்புத லீலையால் ருத்திராக்ஷத்தின் மஹிமையானது ஏனைய உலகச் செல்வங்களைக்காட்டிலும் சிறந்தது, முக்திச் செல்வத்தை அடைவிப்பதற்கு ருத்ராக்ஷ மணி வடமே ஜாமீன்போல் விளங்குகிறது என்னும் உண்மைகளை வேதியன் மூலமாய் வெளியிட்டது முதல் தேசங்கள் எங்கும் ஆஸ்திகர்கள் யாவரும் இந்த ஈசுவர பக்தியின் சின்னமாகிய ருத்ராக்ஷ மணியையே முக்ய அணிகலமாக அணிந்து விளங்கலானார்கள். ஈசுவர நாம உச்சாரணையே முகாபரணமாகவும் கொண்டு களித்தனர்.

**மறப்படுமென் சிந்தைமரு ணீக்கினான் காண்**
**வானவரு மறியாத நெறிதந் தான்காண்.**

**—திருத்தாண்டகம்.**

## 202 மாலை கட்டியைக்காத்த லீலை.

பிறப்புமுதல் நொண்டியாய்ப் பிறந்த சூத்திரன் ஒருவன் திருவாரூர் நகரின் அருகிலுள்ள கிராமங்களில் சென்று பயிர்த்தொழிலைச்செய்ய சக்தியற்றிருந்தவனானபடியால் தனது ஜாதிக்குரிய தொழிலைச்செய்யாமல் ஈசுவர பக்தியையே அணியாகப்பூண்டு தியாகராஜாவின் திருக்கோயிலின் முன் சென்று கோயிலிலும், வீதிகளிலுமுள்ள குப்பைகளை வெளிப்படுத்தியும், மாலைநேரங்களில் புஷ்பமாலையைக்கட்டி, அதைத்தியாகேசனுக்கு அளித்தும், விடியற்காலத்தில் ஈசனுடைய நாமசங்கீர்த்தனங்களைச் செய்து உறங்குவோர்களை எழுப்பிக்கொண்டும் வந்தான்.

ஒரு சமயத்தில் கொடிய வெய்யிற்காலம் அந்நாட்டில் தோன்றிய படியால் அங்கங்குத் தடாகங்களிலுள்ள ஜலம் முற்றிலும் வற்ற ஆரம்பித்தபொழுது அவைகளிலுள்ள புஷ்பங்களும் நாளடைவில் குறைந்துவிட்டன. இவ்விதம் திருவாரூர் நகரிலும் அந்நகருக்குச் சமீபத்திலுமுள்ள தடாகத்திலும் புஷ்பங்கள் குறைந்துவிடவே அச்சூத்திரன் ஒருநாள் தான் ஈசனுக்கு இடைவிடாமல் நெடுநாளாகச் செய்துவரும் கைங்கரியத்துக்கு இடையூறு நேரிடுமோ வென்று பயந்து அழகிய புஷ்பங்களிருக்குமிடத்தைப் பக்தரின் மூலமாய் அறிந்துகொண்டு மெதுவாக நொண்டி நொண்டி அவ்விடம் சென்று அங்குள்ள புஷ்பங்களைக் கொய்து வந்து ஒப்பற்ற பக்தியுடன் மாலைகட்டியளித்து வந்தான்.

பக்தியினால் சிறந்த அந்தச் சூத்திரன் இவ்விதமாய் வெகு கஷ்டப்பட்டு அக்கோடைக்காலத்தில் தியாகராஜாவின் திருமார்புக்கழகாக மாலையளித்து வருகையில், ஒரு நாள் அந்தச் சூத்திரன் கதிரவன் உதிப்பதற்கு முன்னமே புறப்பட்டுத்தென் திசையை நாடி வெகுதூரம் செல்லுகையில் அத்தினத்தில் அத்திசையில் சமீபத்தில் எங்கும்

வாவிகளும் தோற்றவில்லை. கண்களுக்குப் புலப்பட்ட தடாகங்களில் புஷ்பங்களும் தோற்றவில்லை. அதனால் வாடிய மனத்துடன் அந்தப்பக்தன் சூரியன் நடுவானத்தில் இருக்கும் வரை இங்குமங்குமலைந்து புஷ்பங்களையடையாமல் மனவருத்தத்தை யடைந்து வாடிச் செல்லுகையில் அக்காட்டில் கொடிய கதிரவனுடைய கிரணங்கள் வீசுதலைக்கண்ட அந்தப் பக்தன் அத்தருணத்தில் அவ்விடத்தில் அலை வீசுவதுபோலவும், அவ்வலைகளுள்ள பெரிய மடுவுகளில் புஷ்பங்கள் மலர்ந்திருப்பதுபோலவும், நினைத்தான்.

இவ்விதம் அந்தப் பக்தன் அக்காட்டில் கானலை ஜலமென்று நினைத்து அக்கானலுக்கு எதிர்முகமாய்ச் சென்றான். அவன் எவ்வளவு தூரம் சென்றபோதிலும், அக்கானலானது அவனது கண்களுக்கு அலைபோலவும் மலர்கள்போலவும் தோற்றுவதால் அவன் வெகுதூரம் ஓடிப் பார்த்தும் [illegible] மலர்கள் இல்லாததைக்கண்டு ஏங்கி வாடிக் கலங்கி [illegible] தொண்டரின் கற்பகமே! நான் [illegible] நெடுநேரம் அலைந்து ஓடியபோதிலும் மாலைக்குரிய புஷ்பங்கள் இன்று எங்கும் கிடைக்கவில்லையே; ஏழை பாவியாகிய நான் என் செய்வேன். தியாகேச! நான் உமது சரண பங்கயத்தையே சரணெனப் பற்றினேன் என்று இவ்விதமாய் அந்தச் சுத்திரன் பரம்பொருளின் நாமங்களை உச்சரித்துக்கொண்டு அக்காட்டிலிங்குமங்கும் ஓடியலையும்பொழுது சூரியனும் மேற்குத் திக்குக்குச் செல்லலானான்.

பசியினாலும், தாகத்தினாலும் மாலைக்குரிய புஷ்பங்கள் கிடைக்காத மனக் குறையினாலும், வெகுதூரம் நடந்து சென்ற களைப்பினாலும், வருத்தமுற்று வாடிவரும் அத்தொண்டனது பக்தியின் சிறப்பைக்கண்டு தியாகேசர் அத்தருணத்தில் ஒரு தேவதா ரூபமெடுத்துக்கொண்டு அவனது முன் நின்று ஓ பக்த! நீ இதுவரையில் செய்துவந்த மாலை

கட்டிய கைங்கர்யத்தைக் கண்டு தியாகேசர் களித்திருக்கிறார். இன்றைய தினத்தில் உனக்குப் புஷ்பம் கிடைக்காதபடியால் நீ மிகவும் மனம் நொந்து வாடியதைக் கண்டு அப்பரம்பொருளே என்னையனுப்பி இம்மாலையை உன்னிடம் அளிக்கச் சொன்னார். இப்பொழுது நீ வழிதடுமாற்றத்தையடைந்து நிற்கின்றாய், நான் காட்டும் இவ்வழியைப் பற்றிக்கொண்டே வடக்கு முகமாய்ச் செல்லத் திருவாரூரையடைவாய் என்றுரைத்துவிட்டு மறைந்தார். நடுக்காட்டில் வழிதடுமாற்றத்தையடைந்த அப்பக்தன் ஈசனைத் துதிக்கையில், ஈசனருளால் கிடைத்த அம்மாலையைச் சென்னியில் வைத்துக்கொண்டு வந்து திருவாரூர் நாதனது திருமார்பில் அம்மாலையை அளித்து ஆனந்தமடைந்தான். ஜன்மத்தில் அங்கக் குறைவையடைந்த அந்தச் சூத்திரன் தியாகேசரிடத்தில் ஒப்பற்ற பக்தியையடைந்து புஷ்பங்களுக்காகக் காட்டில் வாடுகையில், ஈசனே தனக்கெதிரில் தோன்றி மாலையை யளித்திருக்கலாமென்று நாளடைவில் நினைத்திருக்கையில் ஒருநாள் அந்தப் பக்தனுக்கு அருகில் உண்டாகிய ஆகாயவாணியைக் கேட்டவர்களெல்லோரும் வியப்பையடைந்து அவனது பக்தி விசேஷத்தைக் கண்டு புகழ்ந்து மகிழ்ந்தார்கள்.

## 203. நியாயத்தைக் கையிலெடுப்பித்த லீலை.

பரமேசனுடைய ஆகாயவாணியைக் கேட்ட மாலைகட்டியானவன் அவ்வண்ணமே திருவாரூர் நகரத்துக்கு வடதிசையில் ஒருயோசனை தூரத்திலுள்ள வைத்தியநாதபுரத்தின் அருகில் சென்றான். அத்தருணத்தில் அந்நகரத்தில் இருந்த சந்திரபாலன் என்னும் சாமந்தராசனும் கிரிநாதன் என்னும் அமைச்சனும் மூன்றுமாதகாலமாய் நியாயமுறை விஷயமாய் ஒருவருக்கொருவர் வாக்குவாதம் செய்து

கொண்டு அந்த மூன்றுவது மாதத்தின் முடிவில் மாலை நேரத்தில் பரமேசனுடைய ஸன்னிதானத்தை அடைந்து உலகிலுள்ள சகல நியாயங்களின் திரள்களையும் கையில் கனிபோலக் காட்டாவிடில் தாமிரண்டுபேரும் சரீரத்தை யொழித்து விடுவதாய்க்கொடியதவம் செய்து கொண்டிருக்கையில் அவர்களின் நியமத்தவத்தின் சிறப்பைக்கண்டு மகிழ்ந்த தியாகேசர் அவர்கள் எதிரில் தோன்றி அவர்கள் விரும்பியவாறே ஆறு முகூர்த்த நாழிகை காலம் செல்லும் வரையில் அவர்களுக்கும் அவர்தோழர்களுக்கும் யாஸ்கம், நிருக்தம், ஔதும்பரம், சதபலாக்ஷ்யம், மௌத்கல்யம், சாகடாயனம், சாகபூணி, காலவம், கார்க்கியம், அநுமானம் முதலான பிராசின தர்மசாஸ்திர அர்த்தசாஸ்திர நீதிசாஸ்திர வேதாந்த சாஸ்திரங்களின் திரள்களை நான்கு பதரிக்கனிபோலவே கையிற் எடுத்துத்திரட்டிக் காண்பித்து, அவைகளின் உள் மர்மார்த்தங்களையும் விவரமாய் மொழிந்து கொண்டிருப்பதைக் கண்டான்.

அந்தப் பக்தனானவன் இவ்விதமாய் வைத்தியநாதபுரத்தின் எல்லை வாயிலில் மந்திரிமார்களுக்கும், அரசர்களுக்கும் சகல சாஸ்திரத் தத்துவோபதேசம் செய்து கொண்டு நிர்மலமான முக கமலத்துடன் விளங்கும் திவ்ய புருஷனைக்கண்டு இவரே புண்ணியபுர நாதனை இருக்கவேண்டும் என்று நிச்சயித்து வெகுதூரத்திலிருந்து பணிந்துகொண்டே அருகில் சென்று தனது கையிலுள்ள மல்லிகை மாலையை அவ்வனைவரும் கண்டு களிக்கும்படி தியாகராஜாவின் திரு மார்பில் சாத்தினான். அவ்விதமாய் அம்மாலையைப் பெற்றுக்கொண்ட தியாகேசர் அப்பொழுதே அவ்விடத்திலேயே மறைந்துவிட்டார். அந்தப் பக்தனும் அந்தப் பூபாலனும் மற்று முள்ளவர்களும் அவ்வண்ணம் தோற்றிய ஈசனது திவ்யகுணங்களைப் பற்றிப் பலவாறு துதித்துப் பணிந்து போற்றுகையில் ஆகாயத்தில் வானவரும் மலர்மாரி சொரிந்தனர். தேவதுந்துபிகள்

ஒலித்தன. இவ்விதமாய் அங்கு நடந்த அதிசயத்தை நாம் உணரும்வண்ணம் அந்தப் பக்தசிகாமணியே விரைவாய் நமக்குச் சொல்லுகிறார் பாருங்கள் என்றுரைத்ததைக் கேட்டவரனைவரும் ஆனந்தமெய்தி ஆலயத்தில் புகுந்து பார்க்கும்பொழுது முன்போலவே தியாகராஜர் தேவவேதிகையின்மீது விளங்கினார். அதைக்கண்ட தொண்டரனைவரும் வியப்படைந்து அநுமுதல் பூஜோபசாரங்களை முறைப்படி நடத்தி மேன்மையை யடைந்தார்கள்.

## 204. நாக்கை யழித்த லீலை.

ஒருநாள் ஒரு தொண்டர் சோதிலிங்கமங்கலத்தை அடைந்து அங்கு விளங்கும் சோதிலிங்கச்சுடரையும் தொழுது அங்குள்ள ஜனங்களுக்குத் தியாகராஜரது திவ்ய சக்தியின் சிறப்பைப்புகழ்ந்து கூறுகையில் துஷ்டனொருவன் அத்தொண்டரை எதிர்த்துப்பேசி ஈசனையும், ஈசனது தொண்டரையுமிகழ்ந்து மஹாலிங்க மூர்த்தியின் மகிமைகளையும் மறைத்துக்கூறி அத்தொண்டருக்கு வருத்தத்தை யளித்தான். மோகத்தினால் கவரப்பட்ட மனமுடைய அத்துஷ்டனது துர்மொழிகளுக்கு மறுமொழிகூறாத பக்தர் மௌனத்துடன் தியாகேசரது பாதாரவிந்தங்களை மனதில் தியானித்துக்கொண்டே மனங்கலங்கித் தடுமாறி மற்றோரிடத்துக்குச் செல்லலானார்.

இவ்விதமாய்த் தனது பக்தருக்கு மனக்கொதிப்பை யுண்டுபண்ணிய அக்கொடியவனது தீச்செயலையறிந்து கொண்ட தியாகராஜர் தன் பக்தியின் சிறப்பையும், தனது பக்தரின் தூஷணையின் தீமையையும் உலகில் பரவச் செய்யக்கருதி அக்கொடியவனைச் சபித்தார். தியாகராஜரது சாபத்தைப்பெற்ற அக்கொடியவன் அன்றிரவில்

உறங்கி மறுநாட்காலையில் எழுந்திருக்கும்பொழுது தனது நாக்கில் புற்றுப்போல் புண்கள் உண்டாகி நரகவேதனைக்கு நிகராகிய துன்பத்தை விளைவிப்பதைக்கண்டு மனந்துடித்து அழுதுபுரண்டு இந்திரிய வாட்டங்களையடைந்து உணவு முறக்கமுமின்றி வாடலானான்.

தனக்கு இவ்வண்ணம் புண்கள் நாவில் உண்டானதற்குக் காரணத்தையறிந்து கொள்ளாமலிருந்த அக்கொடியவனைக் கண்டவரெல்லோரும் ஈசுவர பக்தர்களது அபசாரமே இக்கொடியவனுக்கு இவ்வித வேதனையை அளித்து வருகிறதென்று ஊகித்தார்கள். சிலர் அவனுக்கு ஈசுவர பக்தி யுண்டாகும்வரை இக்கொடிய புண்களின் பிணி தணியாதென்று நினைத்தார்கள். மற்றும் சிலர் இக்கொடியவன் மோகத்தினால் அபசாரப்பட்டபடியால் இவ்வண்ணம் நேர்ந்தமையை அவனுக்கு அறிவித்து நாம் நன்மை வழிகளைக்காட்டுவதே நமது கடமையென்றுரைத்தார்கள். மற்றும் சிலர் இக்கொடியோன் முன்ஜன்மங்களிலும் இச்சன்மத்திலும் அளவற்ற பாபங்களைத்தேடியவனாகையால் இவனுக்கு இவ்வண்ணம் கெட்டபுத்தியும் பொறுக்கமுடியாத வேதனையுமுண்டாயின. ஈசனருளாலேயே இவனுக்கு நன்மை நேரிடக்கூடுமேயன்றி நமது சொற்களை இப்பொழுது இவன் கேட்கமாட்டான் என்றுரைத்தார்கள். இவ்விதமாய் அந்நாட்டிலுள்ள தொண்டரனைவரும் அவனது கொடிய நோவுக்காக வருந்துகையில் ஒருவேதியன் அக்கொடியவனை அணுகி ஈசுவர பக்தியாகிய ஔஷதத்தினால் உனது நாவின்புண்ணை நிவர்த்தி செய்துகொள்வாய் என்று கூறியபோதிலும் அக்கொடியோனது மனமானது நல்வழியில் செல்லவில்லை. ஈசுவர பக்தியை உற்ற மருந்தாகப்பற்றவில்லை. அதனால், அந்தத் துஷ்டன் நாவிலுண்டாகிய புண்களின் வலியினால் உயிரையிழந்தான்.

இவ்விதமாய் ஈசன் விஷயமாயும், ஈசனது தொண்டர் விஷயமாயும் தூஷணையாகப்பேசிய குற்றத்தினால் அக் கொடியவன் ரணவேதனைகளையனுபவித்து யமநகருள் சென்று யமபடர்களால் வதைக்கப்பட்டவனாய் நெடுநாள் வரையில் கணக்கற்ற நரகக்குழிகளில் வீழ்ந்து வாடினான் என்னும் இவ்வித விஷயத்தை யமநகரிலிருந்து மற்றொரு சமயத்தில் பூவுலகுக்குத் திரும்பிய நாரத மகரிஷியினிடமிருந்து கேள்வியுற்ற வேதியர்முதலான நான்கு வருணத்தோரும் பரமேசுவரபக்தியையும் பரமேசுவரத் தொண்டர்களின் அன்பையுமே அணியாகப்பூண்டு தொண்டுசெய்வதையே முக்கிய தொழிலாகக்கொண்டு எவ்வித பாபங்களையும் முக்கரணத்தினாலும் செய்யாதவர்களாய் நீதிவழியில் நிலை பெற்றுத் தியாகராஜரது கருணையினால் நலமெய்தி வாழ்ந்தார்கள். நாவிலமும் நான்மறையும் நலமெய்தி வாழ்ந்தன. பகையுள்ள ஜந்துக்களும் பகையையொழித்துப் பாங்குடன் களித்தன. இவ்வித நன்மைகளுக்கெல்லாம் வீதிவிடங்கத்தேவனது திருவிளையாடல்களே காரணமென்று ஆராய்ந்து முனிவர்கள் ஆனந்தக்கடலில் ஆழ்ந்து களித்தார்கள்.

## 205. ஞானத்தையும் செல்வத்தையுமளித்த லீலை.

த்ரிலோக ஸஞ்சாரியான நாரதர் தக்ஷிண கங்கை என்று புவியோரால் புகழப்படும் காவிரியில் ஸ்நாநாதி ஜபாதிகளை முடித்துவிட்டுப் புண்ணியபுராதனாகிய தியாகேசரைப்பணிந்து வீணாகானத்தினால் துதிசெய்து தனது ஆன்மாவுக்குச் சிறப்பைத்தேடிக்கொண்டு வானுலகுக்குச் சென்று கொண்டிருந்தார்.

அவ்விதமாய் நாரத மகரிஷியானவர் பூவுலகிலிருந்து விரைவாய் வானுலகுக்குச் செல்லும்பொழுது நடுவழியில் ஆகாயத்தில் விமானத்திலேறிக்கொண்டு செல்லும் ஒரு கின்னர மிதுனத்தைக் கண்டார். விரைவாய்ச்செல்லும் அவ்விமானத்தில் வீற்றிருந்த அக்கின்னர தம்பதிகள் தமது எதிரில் தோன்றிய நாரதமகரிஷிக்குக் காலோசித வுபசாரங்களினால் பூஜை செய்து அவரது ஆசிர்வாதத்தைப்பெற்ற பிறகு நெடுநாளாகச் செய்துவந்த தவத்தின் சிறப்பைக்கண்டு சந்தோஷித்த லக்ஷ்மிதேவியினால் தமக்கு அளிக்கப்பட்ட செல்வச்சிறப்பை மகரிஷியிடம் அறிவித்தார்கள். அக்கின்னரர்களது செல்வவரத்தைக் கேட்ட நாரதர் லக்ஷ்மிதேவியின் கடாக்ஷத்தினால் அடைந்த செல்வத்தினால் உங்களுக்குச் சிறப்பு எவ்விதம் உண்டாகும்? அவ்வித செல்வத்துக்குரிய ஞானத்தையும் நீங்கள் பெறுவீர்களாகில் அப்பொழுதல்லவா அவ்விரண்டும் உங்களிடத்தில் முத்தும் பவழமும் ஒத்தமைபோல் ஒத்து விளங்குமென்றுரைத்தார்.

இவ்விதம் நாரதர் உரைக்கக்கேட்ட அந்தக் கின்னர தம்பதிகள் தாங்கள் வரத்தினால்பெற்ற செல்வத்தின்மீது அன்பைக் குறைத்து மனக்கவலையையடைந்து அவ்வித செல்வத்துக்கேற்ற ஞானத்தையும் பெறுவதே நலமென்று நினைத்து அதைப் பெறுவதற்குரிய வழியையறிந்துகொள்ளக்கருதி நாரதரிடம் பேசத் தொடங்குவதற்குள் அந்த மகரிஷியானவர் வீணையை மீட்டிக்கொண்டு விரைவாய் மற்றோரிடம் சென்றுவிட்டார். நாரதரைக்காணாத கின்னர மிதுனங்கள், தாங்கள் செல்வத்தையடைந்த போதிலும் சிறந்த ஞானத்தையுமடையக்கருதிக் கந்தர்வ லோகத்தையடைந்து ஸகலவித ஞானத்துக்கும் காரணமாகிய சாரதாதேவியைக் குறித்துத் தவம் செய்தார்கள். மூன்று வருஷ காலம் சென்ற பிறகு அவர்களது

சிறப்பைக்கண்டு மகிழ்ந்த தேவியானவள் அவர்கள் எதிரில் தோன்றி ஞானத்தையளித்துச் சென்றாள்.

அந்தக் கின்னர தம்பதிகள் நாரதரின் உபதேசம் போலவே செல்வத்தைப் பெற்றபிறகு ஞானத்தைப் பெற்றபோதிலும் அந்தக்கின்னர தம்பதிகளிடத்தில் அவ்விரண்டும் ஓரே காலத்தில் நிலைபெற்று விளங்கவில்லை. சில சமயத்தில் அந்தக்கின்னரர்களுக்கு லக்ஷ்மிதேவியின் கடாக்ஷத்தினுல் செல்வப்பெருக்கே அதிகமாயிற்று. அத்தருணத்தில் அந்தக் கின்னரர்களுக்கு ஞானம் குறைந்து புத்தியும் குறைந்து மூடர்கள்போலவே காணப்பட்டார்கள். சில சமயத்தில் அந்தக் கின்னரர்களுக்கு சாரதாதேவியின் கடாக்ஷத்தினுல் ஞானப்பெருக்கே அதிகமாய்த் தோற்றிற்று. அத்தருணத்தில் அந்தக் கின்னரர்களுக்குச் செல்வம் குறைந்து சரீரம் இளைத்து மிகவும் ஏழைகள் போலவே காணப்பட்டார்கள். இவ்விதம் அவர்கள் சகடம்போல் மாறிமாறிவரும் செல்வச் சிறப்பையும், ஞானச் சிறப்பையும் ஓரேகாலத்தில் எப்பொழுதும் இடைவிடாமல் அடையக்கருதி ஸித்தலோகத்தையடைந்து அங்குத் தவம் செய்தார்கள். அப்பொழுதும் அவர்களது மனோரதம் பலிக்கவில்லை. அவ்விடத்திலிருந்து சுவர்க்கம் சென்றும், அவ்விடத்திலிருந்து ஸத்தியலோகம் சென்றும் அவ்விடத்திலிருந்து விஷ்ணுலோகம் சென்றும் அங்கங்கு நிலைபெற்று அரிய தவஞ்செய்தபோதிலும் அந்தக் கின்னர தம்பதிகளிடத்தில் ஓரே காலத்தில் லக்ஷ்மியின் நோக்கும், ஸரஸ்வதியின் நோக்கும் நிலைபெற்று விளங்கவில்லை.

அத்தகைய தருணத்தில் மிகவும் மனம் நொந்து வாடிய அந்தக் கின்னரதம்பதிகள் மனவருத்தத்தை யடைந்து தமக்கு வரமளித்த அவ்விருதேவியரையும் பலவாறு துதித்தார்கள். அவர்களது துதியைக்கேட்டு மகிழ்ந்த அவ்விருதேவியரும் தத்தமது கடாக்ஷத்தின் பயனை

விளங்கும்படி செய்ய முயன்றார்கள். ஸ்ருஷ்டிகாலம் முதல் அவ்விருமாதரும் ஓரிடத்தில் நிலைபெறாதவர்களான படியால் அத்தருணத்தில் அவ்விருவருக்கும் ஒருவர்மீது ஒருவர் பொறாமையையும், கோபத்தையும் செலுத்தத் தொடங்கினார்கள். இவ்விதமாய் அவ்விருதேவியருக்கும் சினம் உண்டாகிய தருணத்தில் லக்ஷ்மியானவள் தனது கடாக்ஷத்தைப் பூவுலகில் ஒருபுருஷன்மீது செலுத்தினாள். அத்தருணத்தில் அப்புருஷன் சென்றுகொண்டிருக்கும் வழியில் பூமியெங்கும் ஸ்வர்ணக் கட்டிகளாய் மாறி விளங்கின. அவ்வித ஸ்வர்ணக்கட்டிகளைக்கண்டு மகிழ்வடைந்த அப்புருஷன் அவைகளை வாரியெடுத்துக்கொள் வோமென்று நினைக்கையில், லக்ஷ்மிதேவியின்மீது கோபங் கொண்டு தனது கடாக்ஷத்தின் சிறப்பை விளக்கக் கருதிய கலைமகள் தனது கடாக்ஷத்தை அப்புருஷன்மீது விழாமல் தடுத்துவிட்டாள்.

சாரதாதேவியின் கடாக்ஷத்தைப்பெறாத அப்புருஷன் அஞ்ஞானத்தையடைந்து தனது காலின்கீழ் வீழ்ந்து கிடக்கும் ஸ்வர்ணராசிகளை மண்கட்டிகளென்று நினைத்துப்பயித்தியக்காரன்போல் திரியலானான். இவ்விதமாய் அவ்விருமாதர்களின் இருவிதநோக்கும் ஒன்றுக்கொன்று தடுக்கப்பட்டதாய்க்கொண்டு பயனற்றதாய் விளங்கும் பொழுது அவ்விரு தேவிமாருக்கும் கடுஞ்சினமுண்டாயிற்று. அவ்விருமாதர்களும் தமது கடாக்ஷத்தினால் உலகை யழித்துவிடுவோம், காத்தளித்தலாவது செய்வோமென்று எண்ணினார்கள். அதனால் சகல தேவர்களும், சகல சித்தர்களும், சகல தானவரும், சகல முனிவர்களும் பயந்து நடுக்கத்தை யடைந்தார்கள். எண் திசைகளும் சுழன்றன. கதிரவனும் ஒளியிழந்து காணப்பட்டான். ராக்ஷஸர்களும் திகைத்தார்கள்.

இவ்விதம் அவ்விரு தேவிமாருக்கும் கடுஞ்சின முண்டானதற்கு ஆதிகாரணம் நாரத பகவானாகவே யிருக்க

வேண்டுமென்று அறிந்துகொண்ட திருமாலும், திசை முகனும், வாஸவனும் மற்றுமுள்ள ஸகலதேவர்களும் ஒன்று சேர்ந்து யோசித்து ஆந்நாரதர் மூலமாகவே மூன்று லோகங்களுக்கும் நன்மை செய்யக்கருதினர்கள். அது போலவே திருமால் முதலான தேவர்களின் விருப்பத்தை யறிந்துகொண்ட நாரதர் அந்நிமிஷத்திலேயே தனது தாய் மாராகிய லக்ஷ்மியையும், ஸரஸ்வதியையும் அழைத்துக் கொண்டு தியாகராஜரது ஸன்னிதானத்தை யடைந்தார். அவ்விருமாதரும் வீதிவிடங்க நாதனைப் பணிந்து துதித்துப் போற்றி நிற்கையில் பூவுலகிலுள்ள அப்புருஷனுக்கும், அக்கந்தர்வ தம்பதிகளுக்கும் ஒரேகாலத்தில் இடைவிடாத செல்வமும், ஞானமும் தியாகேசரருளால் உண்டாகக் கண்ட சகல தேவர்களுமீசனைப் பணிந்து திவ்ய லீலையைப் புகழ்ந்து தமதிருப்பிடமடைந்தார்கள்.

> பொன்னு மெய்ப் பொருளும் தருவானைப்
> போகமும் திருவும் புணர்ப் பானை
> பின்னையென் பிழையைப் பொறுப் பானைப்
> பிழையெலாம் தவிறப் பணிப் பானை
> இன்னதன்மையன் என்றறி யொண்ணு எம்மானை
> எளிவந்த பிரானை
> அன்னம் வைகும் வயற் பழனத் தணியா ரூரானை
> மறக்கலும் மாமே. —சுந்தரர் தேவாரம்.



## 206. கனி திருடியைக்காத்த லீலை.

வேதியர் ஒருவர் தியாகராஜ பாதாரவிந்தத்தில் ஒப் பற்ற பக்தியையடைந்து மனமுருகிக் கண்ணீர் ததும்பத் தொழுதேத்திப்பாடியாடி தூயமனதினுல் ஈசனையே நினைத்து, ஈசனது திவ்ய லீலைகளின் சிறப்பையும், அற்பு தங்களையும் மாமுனிவர் சொல்லக்கேட்டுப் பரமானந்தம் அடைந்து வாழ்நாட்களைக் கழித்து வந்தார். அவ்வேதிய

ஹிதயத்தில் சரத்கால பங்கயம்போல் தியாகராஜ பக்தியானது நாளடைவில் வளர்ந்தோங்கிவரவே, ஈசனிடத்தில் ஒப்பற்ற அன்புவைத்த அவ்வந்தணன் காலந்தோறுமீசனருளால் காவிரிநதியின் தீரத்தில் பழுத்த கனிகளையும், மற்றுமுள்ள மதுரவகைகளையும் பக்தியுடன்கொண்டு வந்து தியாகேசரது திவ்யாலய அதிகாரிகளிடம் நைவேத்தியத்திற்காக அளித்துவரலானார்.

தேவாமிர்தத்துக் கொப்பாகிய பலாக்கனிகளையும், மாங்கனிகளையும், வாழைக்கனிகளையும், திராக்ஷைக்கனிகளையும், மற்றுமுள்ள ருசியான கனிவர்க்கங்களையும் தினந்தோறும் தடையின்றித் தியாகராஜருக்கு நைவேத்தியத்துக்காக அளித்துவரும் அவ்வந்தணர் இக்கைங்கரியத்தை நெடுநாள்வரையில் நடத்திவந்தார். ஈசனிடத்தில் வைத்த அளவற்ற பக்தி விசேஷத்தினால் அவ்வந்தணர் சிற்சில சமயங்களில் சோரத்தொழிலைப் பாவமெனக் கருதாமலே பிறரது உத்தரவின்றியே அவர்களது தோட்டங்களில் இருக்கும் கனிவர்க்கங்களைச் சோரஞ்செய்து தியாகேசருக்கு அளித்துவந்தார்.

இவ்விதமாய் அவ்வேதியர் ருசியுள்ள கனிகளை ஈசனுக்கு அளித்து வருவதில் சோரத்தன்மைக்குப் பயப்படாமலும், பிறருடைய தண்டனைக்குப் பயப்படாமலும் கனிகளைத் திருடி ஈசனுக்கு அளித்துவரும்பொழுது அவரது பக்தி விசேஷத்தைக்கண்டு களித்த தியாகராஜர் நெடுநாள் வரையில் அவ்வந்தணர் அளித்துவரும் கனிகளை நைவேத்திய சமயத்தில் அன்புடன் புஜித்தும், அவ்வித கனிவர்க்கங்களை அவ்வந்தணர் திருடும்பொழுது அவரைப் பிறர் காணாவண்ணமும் காப்பாற்றிவந்தார். இவ்விதமாய்க் கனிகளை அங்கங்குள்ள துர்க்கங்களைத் தாண்டிச் சென்று பறித்து அளித்துவரும்பொழுது நற்புத்தியளிக்க வேண்டுமென்று கருதிய தியாகராஜர் ஒருநாள் தான் ஒரு வேலைக்

காரன் போல் உருவமெடுத்துக்கொண்டு அவ்வந்தணர் கனி திருடச் செல்லும் வழியில் மறைந்திருந்தார்.

நடு இரவில் உலகமெங்கும் உறங்குகையில் வீரபுருஷர் களும், வேட்டைக்காரர்களும் பாய்ந்து தாண்டமுடியாத முள்வேலிகளையும், மதிள் சுவர்களையும் புரவிபோல் தாவிக் குதித்துப் பூபாலனது அரண்மனைத் தோட்டத்திலுள்ள கனிகளைப்பறித்துச் சிதறாமல் மூட்டையாய்க்கட்டி மார்பு டன் அணைத்துக்கொண்டு அவ்வந்தணர் திரும்புகையில் லோகபாலகனாகிய தியாகேசர் அவர் எதிரில்சென்று சோரப் பொருளையுடைய அவரைப் பிடித்துக்கொண்டு நீர் ஏன் இவ்வண்ணம் கனிகளைத்திருடிச் செல்கிறீர் என்றுரைத் தார். அத்தருணத்தில் அவ்வேதியர் அப்புருஷனைக் கண்டு சற்றும் பயப்படாமல் "ஓ வீரபுருஷ! நான் தியாகராஜ ரிடத்தில் வைத்திருக்கும் பக்தியாகிய கயிற்றால் இழுக்கப் பட்டவனாய் இவைபோன்ற கொடியவழிகளில் நுழைந்து இதுவரையில் ஈசனுக்குக் கனிவகையளித்து வந்தேன். என்னை இதுவரையில் ஒருவரும் கண்டுபிடித்ததில்லை. அதற்குக்காரணம் ஈசனருளே; ஓ வீரபுருஷ! நீ சாதாரண மனிதனாகத் தோற்றவில்லை; நீ என்னைப்பிடிப்பதற்காக வந்த தேவனோ, தேவதேவனோ; உன்னைப்பார்க்கும் பொழுது எனது சரீரத்தில் மயிர்க்கூச்சல் உண்டாகிறது. ஓ வீரபுருஷ! உனது இருப்பிடத்தையுரைப்பாய்" என்று சொல்லிக்கொண்டே அப்புருஷனது கொடியபார்வையைக் கண்டு பயந்து அவனது பாதத்தில் வீழ்ந்து புலம்பலுற்றார்.

சற்றுநேரம்வரையில் சாந்தமூர்த்தியாயும், பிறகு காள பயங்கர மூர்த்தியாயும் தோற்றிய தியாகேசர் அத்தருணத் தில் தனது பாதத்தில்வீழ்ந்து பணிந்து பயந்து நடுக்கமுறும் அவ்வேதியருக்கு அபயமளித்து இனி நீ இவ்விதமாய்க் கனி களைத்திருடி ஈசனுக்கு அளிக்கவேண்டாம். தூயமனதி னால் பக்திசெய்வதே நன்மையென்று பற்பல தத்துவோப தேசங்களைச் செய்துவிட்டுத் தனது நிஜஸ்வரூபத்தையும்

சற்றுநேரம் காட்டி மறைந்தார். யோகிகளும், தவத்தோ ரும் காணக்கூடிய கைலாசபதியின் தரிசனத்தையடைந் அவ்வேதியர் ஈசனது தரிசனத்துக்காக உருகிய மனமுடை யவராய்ச் சற்றுநேரம் தங்கியிருந்து, பிறகு அக்கனிகளு டனே தேவாலயத்தை யடைந்து அக்கனிகளை நைவேத் தியத்திற்காகச் சேர்த்து வைத்தார்.

## 207. மனதைச் சோதித்த லீலை.

ஒருநாள் தியாகராஜரும் பார்வதிதேவியும் விருஷப வாகனத்தின் மீது ஏறிக்கொண்டு நடு இரவில் லோகரக்ஷ ணத்துக்காகப் புறப்பட்டு ஒவ்வொரு கிராமங்களையும், ஒவ்வொரு நகரங்களையும், ஒவ்வொரு புரங்களையும், ஒவ் வொரு தேசங்களையும் பார்வையிட்டுக்கொண்டே சென் ருர்கள். தவம் செய்துகொண்டிருக்கும் மகரிஷிகளையும், யோகிகளையும், ஞானிகளையும் அவர்களது ஆச்ரமங்களை யும் பார்த்துக்கொண்டும், அவரவரது தவச்சிறப்பைப் பற்றிப் புகழ்ந்துகொண்டும், அவரவரது மனத்தூய்மை யைப் பற்றிப் புகழ்ந்துகொண்டும் பலவிதமாய்ப் பேசிக் கொண்டு ஆகாய மார்க்கமாய் வெகுதூரம் வடதிசையை நோக்கிச் சென்ருர்கள்.

லோகநாயகனுகிய தியாகராஜர் இவ்வண்ணம் தேவி யாருடன் கூடி அன்றிரவில் ஆகாய மார்க்கமாய் வெகு தூரம் வடதிசையை யடைந்து பற்பல தோற்றங்களைக் கண்டுகளித்துத் தனது திவ்விய ஆலயத்துக்குத் திரும்பும் பொழுது சந்திரனும் மேற்குத் திசையை யடைந்தான். சூரியனது பிம்பமும் கிழக்குத் திசையில் தோன்றிற்று. அத்தகைய தருணத்தில் ஈசுவர நாமத்தைச் சொல்லிக் கொண்டே வேதியர் ஒருவர் நீராடி உதயகால ஜபங்களை

முடிப்பதற்காகப் புண்ணிய நதியைக் குறித்துச் சென்று கொண்டிருந்தார். அவரைக்கண்ட கமலநாயகி தேவியார் இவ்வந்தணரது மனது சுத்தி நிலை பெறுமோ? சலனத்தை யடையுமோ? என்று ஈசனது திருக்காதிலுரைத்தாள். தேவியாரின் அவ்வித வுரையைக்கேட்ட தியாகேசர் "தேவி! நம்மிடத்தில் செலுத்தப்பட்ட பக்தியையுடைய மனமுடைய இவ்வந்தணரது மனத்தின் நிலைமையைப் பற்றி எனக்குச் சற்றும் சந்தேகமில்லை. ஆகிலும், உனக்குச் சந்தேகமுண்டாயின் நீ பரீக்ஷித்துக் கொள்வாய்" என்று கூறினர்.

இவ்விதமாய் ஈசனது சொற்களைக்கேட்ட கமலநாயகி தேவியார் அவ்வந்தணரது மனநிலைமையைப் பரிசோதிக்கக் கருதித் தனது மார்பில் அணிந்திருந்த ஒரு ரத்தினபரணத்தைக் கழற்றிப் பூமியில் நடந்து சென்று கொண்டிருக்கும் அவ்வேதியரது முன்னிலையில் விழும்படி தள்ளி விட்டாள். அப்பொழுதே உதயகாலம் நெருங்கியபடியால் ஈசனும் தேவியும் தமது வாகன வேகத்தினால் அரைநொடியில் திவ்யாலயத்தை யடைந்து தேவபீடத்தில் வீற்றிருந்தார்கள். ஆகாயத்திலிருந்து தனது எதிரில் வீழ்ந்த அவ்வாபரணத்தைக் கண்ட அவ்வேதியர் முதலில் தனது மனதினால் அதைக்கவர நினைத்தார். பிறகு தனது தீர்க்க புத்தியின் சிறப்பினால் ஆலோசனை செய்து தனது பாபமனதைப் பலவாறு நிந்தனை செய்து, அம்மனதைப் புத்தியினால் வென்று அவ்வாபரணத்தை யுற்றுப்பார்த்து இது தேவர்களுடையதோ? கின்னரர்களுடையதோ? திரிமூர்த்திகளுடையதோ என்று சந்தேகப்பட்டு அதைக் கையில் எடுத்துக் கொண்டு புண்ணிய நதியை யடைந்தார்.

அவ்வேதியர் தனது உதயகால ஸ்நான ஜபாதிகளின் காலம் கடப்பதற்கு முன்னமே முறைப்படி ஸங்கல்பம் செய்துகொண்டு கங்காதேவியையும், கைலையையும், கைலாச நாதனையும் மனதில் தியானித்து ஸ்நானம் செய்து

சூர்யோபாஸனே முதலானவைகளைக் கால முறைப்படி நிறைவேற்றிய பிறகு கிழக்கு முகமாய் அமர்ந்து ஓர் ஆஸனத்தையும் செய்து பிராணாயாமத்தையும் செய்து ஈசனது பாதமலரை மனதில் நினைத்துத் தான் பரமேசனிடத்தில் பக்தி வைத்திருப்பது ஸத்தியமாயின், தான் கர்மானுஷ்டானம் செய்து வந்தது ஸத்தியமாயின் தனது மனதுக்குச் சுத்தி விளங்கவேண்டும். இவ்வாபரணமும் இதற்குரியவரிடமே சென்று விளங்கவேண்டுமென்று பரமேசனை வேண்டிக்கொண்டே ஒரு மந்திரத்தை உச்சரித்தார். அப்பொழுதே அம்மந்திர சக்தியினால் அவ்வாபரணமானது திசைகளில் ஒளி வீசிக்கொண்டே ஆகாயத்தில் பறந்து சென்று திருவாரூர் நகரில் விளங்கும் கமலநாயகி தேவியாரின் திருக்கோயிலின் முன்பு ஆகாயத்திலிருந்து விழுந்தது.

அவ்விதமாய் அந்தச் சுத்தமான மனமுடைய வேதியரால் ஏவப்பட்ட அவ்வாபரணமானது வானத்திலிருந்து தேவியாரின் முன் திடீரென்று வீழ்ந்ததைக் கண்டவரனைவரும் ஆச்சரியமடைந்து ஈசுவரியைக் குறித்துத் துதி செய்து நிற்கையில் ஒவ்வொரு சமயத்திலும் தனது திவ்ய லீலையை உலகில் பரவச் செய்யவேண்டுமென்று ஸங்கல்பம் செய்து கொண்டிருக்கும் தியாகேசரது ஏவலால் ஆகாயத்தில் ஒரு வாக்கு உண்டாயிற்று. அதைக் கேட்டவரனைவரும் ஆனந்தமடைந்தும், தேவியாரின் ஆபரணத்தின் வரலாற்றை யறிந்துகொண்டும், அவ்வேதியரது மனநிலைமையைப்பற்றிப் பலவாறு புகழ்ந்தும், அவ்வந்தணருக்கு நற்புத்தியளித்த தியாகநாதனைத் துதித்தும் தமக்கும் இவ்வண்ணமே தடுமாறும் காலங்களிலே நற்புத்தி யளிப்பீரென்று ஈசனைப் பணிந்தும் மகிழ்வுடன் வாழ்ந்தார்கள்.

## 208. மந்தாரமரத்தைப் பட்டமகிஷியாக்கிய லீலை.

ஒருசமயம் சோழமண்டல மகாராஜனாகிய விக்கிரம வீரன் என்பவனது பட்டமகிஷியானவள் அகாலத்தில் ஜ்வரத்தினால் பீடிக்கப்பட்டவளாய் அசாத்திய ரோக பீடிதையாய்ச் சுவர்க்கலோகத்தையடைகிறாள். அதனால் அச்சோழன் அப்பட்டமகிஷியினிடமிருந்து குலக்கொழுந்தாகிய புதல்வனை யடையாதபடியாலும் அப்பட்டமகிஷி வானுலகையடைந்த படியாலும் மனவருத்தத்தையடைந்து தைரியத்தையிழந்து மந்திரிமார்களின் தைரியமொழிகளை முற்றிலும் கேளாமல் மதிமயங்கி ஸிம்மாசனத்தைத் துறந்து பயித்தியக்காரன்போல் சிலநாள்வரையில் வீதிகளில் ஓடிச்சென்று அலைந்து திரிந்து பிறகு காட்டில் நுழைந்து வேடன்போல் உருவமாறுதலையுமடைந்தான். அவ்விதமாய் அச்சோழன் காட்டில் திரியும்பொழுது அந்தச்சூரியவம்ச சிம்மாசனத்தில் விளங்கக்கூடிய மன்னவனை யடையாத அம்மண்டலத்தோரும் மந்திரிகளும் மனவருத்தத்தையடைந்து மூன்றுமாதகாலம் செல்லும்வரையில் தியாகேசருக்குத் திவ்வியாபிஷேகம் செய்துவைத்து வேத வாக்கியங்களால் துதிசெய்து மகாநிவேதனங்களையும் அளித்து வந்தார்கள்.

இவ்விதமாய் அச்சோழமண்டலவாசிகளின் பூஜோபசாரங்களைக்கண்டு மகிழ்வெய்திய தியாகராஜர் அவர்களது மனக்குறையை நிறைவேற்றிச் சோழராஜ்ய சிம்மாசனத்தை மறுபடியும் உலகில் நிலைநிறுத்தக்கருதித் தனது மனதில் ஸங்கல்பம் செய்தார். அத்தருணத்திலேயே ஈசுவர தாசர் என்னும் ஆபரணத்தைத்திருப்பிய அவ்வேதியர் திருவாரூர் நகரின் அருகிலுள்ள வனத்தில் சென்று புஷ்பம், சமித், தர்ப்பை முதலிய ஆஹுதித் திரவியங்களைச் சேகரிப்பதற்காகக் காட்டில் நுழைந்து அவைகளைக் கொய்து திரும்பும்பொழுது அவ்வேதியரது எதிரில் ஒரு மந்

தாரமரம் தோன்றிற்று. அம்மரத்தின் அழகிய கிளைகளையும், புஷ்பக்கொத்துக்களையும் பார்த்துக்கொண்டே அவ் வேதியர் அம்மரத்தின் அருகில் நெருங்குகையில் மனைவி இறந்த பிறகு பயித்தியக்காரன்போல் காட்டில் அலைந்து திரிந்து உருவம் மாறிய அச்சோழன் பசிதாகத்தினால் மூர்ச்சையடைந்து அம்மந்தாரமரத்தின் கீழ் விளங்கும் சிவலிங்க மூர்த்தியின் பாதத்தில் விழுந்திருப்பதைக் கண்டார்.

இவன் சோழமகாராஜனல்லவா? எதற்காக இவ்வண்ணம் இங்கு இவ்விதமாய் விழுந்திருக்கிறனென்று வியப்புடன் அவனை உற்று நோக்கிக்கொண்டிருக்கையில், சோழனது சென்னியானது அவசமாய் அச்சோதிர்லிங்க மூர்த்தியினடியில் பட்ட புண்ணியவசத்தினால் அவனது புத்திக்குத்தெளிவு உண்டாயிற்று. அப்பொழுதே நல்லறிவையும் திவ்விய ஞானத்தையும் பெற்றசோழன் கண்களைவிழித்துக்கொண்டு எழுந்து சென்னியில் கூப்பிய கையுடன் எதிரில் விளங்கும் லிங்கஸ்வரூபியைத் துதிசெய்து நின்றான். அத்தருணத்திலேயே அச்சோதிர் லிங்கத்துக்கு நிழலையளித்த அம்மந்தாரமரமானது ஒரு திவ்விய ராஜகுமாரியாய் மாறி அந்த லிங்கமூர்த்தியைப் பிரதக்ஷிணம்செய்து பணிந்து துதித்த பிறகு அச்சோழனது பாதத்தில் பணிந்து நாத! சாபத்தினால் நாமிருவரும் இவ்வளவுகாலம் பிரிவையடைந்திருந்தோம். இப்பொழுது உமது மணிமகுடமானது இவ்வீசனது பாதாரவிந்தத்தில் படிந்ததினால் உமக்கும் மோகம் விலகியது. எனக்கும் சாபம் நீங்கியது என்னுரைத்து வெட்கி நின்றாள்.

இவ்விதமாய் அந்த ஈசுவரதாசர் என்னும் வேதியர் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே மந்தாரமரம் ராஜனுக்குரிய பட்டமகிஷியாய் மாறியதற்கும், சோழனுக்கு நல்லறிவு உண்டானதற்கும் அச்சிவலிங்கமூர்த்தியினருளே காரணமென்று நினைத்தார். அத்தருணத்தில் ஆகாயத்தில்

உண்டாகிய ஆகாயவாணியினால் இவ்வித நன்மைகளுக்கு எல்லாம் மூலகாரணம் தியாகராஜரது அருள் என்று அறிந்துகொண்ட அவ்வேதியர் அப்பொழுது அச்சோழனது அருகில் சென்று தனது வரவையுமுரைத்து ஈசனது திவ்விய குணங்களைப் புகழ்ந்துகொண்டே அவர்களையும் அழைத்துக்கொண்டு புண்ணியபுரியை யடைந்தார். அம்மகாராஜனுக்கும் அவனது பட்டமகிஷிக்கும் பூர்ணகும்பம் முதலிய உபசாரங்களினால் நன்மொழி பகன்ற ஜனங்களின் ஆசியைப்பெற்ற சோழனும் அவனது பட்டமகிஷியும் தமது பூர்வ சிங்காதனத்தில் விளங்கி ஈசுவரபக்தியினால் அளவற்ற சுபங்களை அடைந்து வாழ்ந்தார்கள்.

## 209. தலை மொட்டையிட்ட லீலை.

ஏகவேதி என்னும் வேதியன் ஒருவன் பாலப்பிராயத்திலேயே குருவினிடமிருந்து ஸாங்கோபாங்கமாய் வேதத்தைக்கற்றறிந்து குருவின் விடைபெற்றுக்கொண்டு இல்லறத்திலமர்ந்து வாழ்ந்தான். பூர்வஜன்ம பாபத்தினால் அவ்வேதியனுக்குக் கொடிய வறுமையுண்டாயிற்று. பொறுமை யென்னும் மகாகுணத்தினால் அவ்வித ஏழ்மைத் தன்மையை யடக்கிக்கொள்ளாத அவ்வேதியர் தனதிடத்திலிருந்த ஸத்வகுணத்தைக் கொஞ்சம் கொஞ்சமாய் இழக்கலானான்.

இவ்விதமாய் அவ்வேதியனுக்கு நற்குணம் குறைந்து ரஜோகுணமும் தமோகுணமும் வளர்ந்து வரவே அதனால் அவ்வேதியன் பற்பல பாபத்தொழிலைச் செய்யத் துணிந்தான். பிறரது பொருளைச் சோரம் செய்யலானான்.

உண்ணத்தகாதவர்களின் வீட்டில் உண்டான். தொடக் கூடாதவைகளைத் தொட்டான். மோகத்தினால் மதுபா னம் செய்தான். சுவர்ணங்களைச் சோரம் செய்தான். வேதியர் பொருளையும் நாதனற்று அழுதுகொண்டிருக்கும் ஏழைகளின் பொருளையும் திருடிவந்தான். சிற்சில சம யங்களில் பாலர்களின் அணிகளையும் *சுவரனது ஆடை களையும் சோரம் செய்தான். இவ்விதமாய் அவ்வேதியன் கல்பகோடி காலம்வரையில் நரகில் அனுபவிக்கக் கூடிய மகாபாவங்களையும் மிகவும் கொடியதாகிய பஞ்சமகா பாபங்களையும் செய்துகொண்டு வந்தபோதிலும் பாலப் பிராயத்தில் தான் கற்றறிந்த வேதத்தின் பெருமையையும் பொருளையும் மறவாமல் தனது பிராமணச் சின்னங்களை யொழிக்காமல் புண்ணிய காலானுஷ்டானங்களைக் கைவிடாமல் தமது அந்தணர் குலத்தின் சிறப்பையும் தனது கல்வியின் சிறப்பையும் பலவாறு புகழ்ந்து வந்தான்.

இவ்விதமாய் ஏகவேதி என்னும் அவ்வந்தணன் நாடக வேஷக்காரர் போல் உருவம் மாறிமாறிச் சில சமயத்தில் கொடிய பாபத்தொழில்களைச் செய்துகொண்டும், சில சம யத்தில் உயர்ந்த பிராமணன்போல் அபிநயம் செய்து கொண்டும் வாழ்ந்து வரும் நாளில் அத்திருவா[illegible] நகால சிலர் அவனது வேஷத்தைக்கண்டு உயர்ந்த பிராமண னாகவே மதித்தார்கள். சிலர் அவனது நடவடிக்கையில் சந்தேகமடைந்து அவனை ஹீனகுல வேதியனென நினைத் தார்கள். இவ்விதமாய் அவ்வொரு வேதியன் மீது இரு வித அபிப்ராயம் ஏற்பட்டிருப்பதை ஊகித்து அறிந்த சோழ மந்திரியானவன் தமது சிறந்த நாட்டில் அவ்வித மாய் அந்தணரில் வேஷக்காரர் போன்றவர் ஒருவருமிருக்க லாகாதென்று நிலைநிறுத்த விருப்பமடைந்தவனாய்த் தான் அறிந்த விஷயத்தைச் சோழனுக்கு அறிவித்து வேஷக் காரர்போல் விளங்கும் வேதியனை எவ்விதமாய்க் கண் டறியலாமென்று நெடுநாள் யோசனைசெய்து பிறகு

வாறு தேறுதலை யடைந்து புண்ணிய புரத்தின் மணியென விளங்கும் தியாகராஜரது ஸன்னிதானத்தின் எதிரில் ஒரு ஸத்தியப்பலகையைப் பூமியில் பதியவைத்து ஈசனைப் பணிந்து தியாகேச! இப்பலகையில் ஏறி இறங்கும் வேதியர்களின் குற்றங்களை வெளிப்படுத்த உமதுகருணையே துணையென நம்பினோம் என்றுரைத்துத் துதிசெய்து தனது தேசத்திலுள்ள சகல வேதியர்களையும் அழைப்பித்துப் பூஜித்துப் போஜனமளித்துத் திரவியதானம் செய்தபிறகு அப்பலகையின்மீது ஒவ்வொரு வேதியரையும் ஏறி இறங்கச் செய்தான்.

வேதியர்களின் கபடங்களை மாற்றி அவர்களை நற்செய்கைகளில் திருப்ப எண்ணியமந்திரியினால் ஈசனது எதிரில் ஸ்தாபிக்கப்பட்ட பலகையில் வேதியர்கள் முறையாக ஒவ்வொருவராய் ஏறி இறங்கும் தெய்வத்தன்மைவாய்ந்த அப்பலகையானது அவரவர்களுடைய பாபங்களுக்குத்தக்க வாறு சிற்சில அடையாளங்களைக் காட்டிக்கொண்டே விளங்கிற்று. அச்சமயத்தில் அங்குக்கூடியிருக்கும் பெருங் கூட்டாத்தாரின் நடுவில் அவ்விதமாய் உண்டாகிய குறிகளைக்கண்ட சில வேதியர்கள் மாத்திரம் தம்மிடத்திலிருக்கும் பாபங்களை இனி தீர்த்துக்கொள்வோமென்று உறுதியுடன் கூறிச்சென்றார்கள். லக்ஷக்கணக்காயும், கோடிக் கணக்காயும்உள்ள வேதியர்கள் அப்பலகையில் ஏறி இறங்கும்பொழுது எவ்வித கெட்டகுறிகளும் அவர்களின்மீது தோற்றவில்லை. அதைக்கண்ட சோழனும் மந்திரியும் தமது நாட்டில் தூய்மையுள்ள சுத்த வேதியர்கள் வசிக்கிறார்களென்று மனமகிழ்வுடனிருக்கும்பொழுது மகாபாதகனாகிய அந்த ஏகவேதி என்னும் வேதியன் கடைசியாய்ப் பயந்து கொண்டே அத்தெய்வப்பலகையின் மீது ஏறி இறங்கினான். அவ்வேதியன் அவ்வாறு இறங்கும்பொழுதே அவனதுதலை மொட்டையாகக் காணப்பட்டது. அவனது உடம்பில் மயிர்ச்சிலிர்ப்பு உண்டாயிற்று; முகம் குனிந்து

னின்றான். அவனிடத்தில் தோன்றிய குறிகளைக்கண்டவர் எல்லோரும் அவனை மகாபாபி என்று நினைத்து அவனுக்குத்தக்கவாறு பிராயச்சித்தமும் செய்துவைக்க வேண்டும் என்று நினைத்திருக்கையில் அப்பலகையும் ஆகாயத்தில் பறந்து சென்று மறைந்தது.

## 210. மாம்ஸ போஜியைக் காத்த லீலை.

அநேக ஜன்மகாலங்களில் செய்த பாபத்திரளால் துர்ப்புத்தியையடைந்த ஒரு வைசியன் காவிரிநதியில் நீராடி வரும் வேதியரொருவரைக்கண்டு நமஸ்கரித்து, அவரது க்ஷேமங்களை விசாரிப்பதுபோல் பலவிதமாய் அவரை நிந்தனை செய்து பேசத்தொடங்கினான். இக்கலியுகத்தில் வேதியர்கள் செய்துவரும் கர்மானுஷ்டானங்கள் யாவும், கபடவேஷதாரிகளின் அபிநயம் போலாகுமென்றுரைத்தான். இவ்விதமாய் அவ்வைசியன் அவ்வேதியரைப் பலவாறு தூஷணை செய்தபோதிலும், அவரைக்காணும்பொழுதெல்லாம் அவனுக்கு வந்தனமளித்து வந்தான். அவ்வேதியர் தன்னை அவ்வைசியன் நிந்தனை செய்யுங்காலங்களில் மனக்கலக்கத்தை யடையாமல் அவனுக்கு ஆசிர்வாதம் செய்துவந்தார். அவ்வாசிர்வாதத்தின் சிறப்பினால் அவ்வைசியனுக்கு அவ்வந்தணரிடத்தில் அன்பும், பூர்வ ஜன்மத்தில் செய்த பாபத்திரளால் அவ்வந்தணரிடத்தில் வெறுப்பும் உண்டாகி அவ்விரண்டும் ஸமமாகவே வளர்ந்து வந்தது.

இவ்வண்ணம் அவ்வந்தணரிடத்தில் வெறுப்பையும், அன்பையும் ஸமமாகக்கொண்டு அவ்வைசியன் வாழ்ந்து வரும்நாளில் ஒருநாள் அவ்வேதியர் காவிரியின் கரையை யடைந்து அங்கு விளங்கும் அழகைக்கண்டு ஜபதபங்கள்

செய்வதற்கு இதுவே தக்க தலமென்று நினைத்துத் தனது குடும்பத்தாருடன் சேராமல் ஒருவருஷகாலம்வரையில் அக் காவிரிக்கரையில் ஒரு பர்ணசாலையை யமைத்துக்கொண்டு எதிரில் விளங்கும் வாருணாலிங்கமூர்த்தி முதலான திவ்விய மூர்த்திகளின் தரிசனத்தைப் பெற்றுக்கொண்டு ஜபம் செய்து வந்தார். அவ்வைசியனும் விடியற்காலத்தில் அக் காவிரிக்கரைக்குவந்து அவ்விடத்தில் ஜபம் செய்துகொண் டிருக்கின்ற வேதியரைக்கண்டு வழக்கம்போல் நமஸ்காரம் செய்த பிறகு துர்ப்புத்தியினால் உடனே அவரை நிந்தித்து விட்டுத் தானும் அக்காவிரியில் நீராடி வீட்டுக்குச் சென்று கொண்டிருந்தான்.

ஒருநாள் அவ்வைசியன் அவ்வேதியரது பர்ணசாலைக் கருகில் வரும்பொழுது அவர் ஜ்வரத்தினால் பீடிக்கப்பட்ட வராய் மெய்யின் பலமிழந்து கண்கள் சோர்ந்து களைப் புடன் பூமியில் படுத்துழலுவதைக்கண்டான். வாதபித்த தாதுக்களின் கோபத்தினால் வருத்தமுறும் அவ்வேதியர் நாலைந்து நாள்வரையில் எவ்விதஉணவுமின்றி அந்நோயை பொறுத்திருந்தார். பிறகு மிகவும் மேனிமெலிவையடைந்த அவ்வேதியர் தனது சரீர ஸ்திதியைத்தானே நன்றாக அறிந்துகொண்டு ஏதாவது கொஞ்சம் உணவை உட் கொண்டால்தான் அத்தருணத்தில் தனது சரீரத்தில் உயிர் தங்கி நிலைபெறுமென்று நினைத்தார். அவ்வித உணவை யளிக்கவல்லவர் எவரும் அருகில் இல்லையே! என் செய் வோம்; பிராணநாடிகள் துடிக்கின்றனவே என்று வருத்தத் துடன் துடிக்கும்பொழுது அவ்வைசியன் அத்தருணத்தில் அங்கு வந்து நின்றான். நெடுநாளாய் அவனது துர்க்குணங் கள் மாறுகவென்று ஆசிகூறிய அவ்வேதியர் அத்தருணத் தில் அவனைக்கண்டு களித்துத்தனக்கு ஏதேனும் உணவு அளிப்பாய் என்று கை ஜாடையினால் அறிவித்தார்.

புத்தியில் சிறந்த அந்த வைசியன் அவ்வித ஜாடைகளை அறிந்துகொண்டு நெடுநாளாய் அவரிடத்தில் வைத்த அன்

பினால் அவ்வித இடரில் அவருக்கு உணவு அளிக்கக்கருதி விரைவாய் அருகிலுள்ள நகருக்கு ஓடுகையில் அவனது வழியில் மாம்சத்தை எடுத்துச்செல்லும் ஒரு துருஷ்கன் எதிர் வந்தான். அத்தருணத்தில் தான் செய்த பாபத்திரளால் புத்தி மாறுதலையடைந்த அவ்வைசியன் அத்துருஷ்கனிடமிருந்து அம்மாம்சத்துண்டுகளை விலைக்கு வாங்கிக்கொண்டு வெகுவிரைவாய் அவ்வேதியர் அருகில்வந்து பரிவுடன் அவரது கரங்களுக்கு நீரளித்து அம்மாம்சத்துண்டுகளை உண்ணக்கொடுத்தான். உயிர் நீங்கக்கூடிய நிலைமையில் இருக்கும் அவ்வந்தணோத்தமர் அம்மாம்ஸங்களைக்கண்டு இதுவும் இச்சமயத்துக்குத்தகும் என்று நினைத்து ஈசனருளால் நிலைபெறக்கூடிய தனது ஆன்மாவுக்கு ஆதாரமாக உட்கொள்ளக்கருதி அதையுற்றுப்பார்க்கையில், அது மாம்ஸமென அறிந்தபோதிலும் அவ்வேதியர் அச்சமயத்தில் தியாகராஜரது தாரக மந்திரத்தை ஜபித்துக் கொண்டே உட்கொண்டார். அவ்வேதியரது சித்தசுத்திய ஸ்வபாவத்தையும் கர்மானுஷ்டான சுத்தியையும் கண்ட தியாகேசர் அவரிடத்தில் கருணைசெய்து அதை அன்னமாக மாற்றி அவரைக்காத்து விளங்கினார்.



## 211. மண்ணைப் பொன்னாக்கிய லீலை.

அச்சமயத்தில் அம்மாம்சத் துண்டுகளை அளித்த வைசியன் அவரருகில் சற்று நேரம் தங்கியிருந்து உபசாரங்களைச் செய்துவிட்டுத் தனது இருப்பிடமடைந்து அவ்வேதியர் மாம்சத்தையுட்கொண்டாரென்றே பிறருடன் பழிமொழிகளைப் பகரலானான். தயாநிதியாயும், ஸாதுஜனங்களைப் பலவகையிலும் ரக்ஷிக்கிறவராயும் விளங்கும் தியாகேசர் அம்மாமிசத்தை நல்லுணவாக்கியதையறியாத அவ்

வைசியனது துர்ப்போதனையினல் அவ்வேதியரது நற் கீர்த்திக்குக் குறைவான இகழ்ச்சியானது திசைகளில் பரவி வரும்பொழுது அவ்வித உணவையுட்கொண்ட அவ்வேதியர் ஈசனருளால் கொஞ்சம் கொஞ்சமாய்ச் சரீர சௌக்கி யத்தையடைந்து நாளடைவில் முன்போல் கர்மானுஷ் டான காரியங்களுக்குச் சாதனமான சரீர பலத்தையும் அடைந்து ஒரு வருஷ காலத்தில் செய்து முடிக்கவேண்டிய ஜபங்களைச் சாங்கமாய் முடித்து மனக்களிப்பை அடைந்தார்.

முறைப்படி ஜபத்தை முடித்தெழுந்த சோதிசர்மா வென்னும் அவ்வேதியர் மனக்களிப்புடன் வாருணலிங்க மூர்த்தி முதலிய லிங்கமூர்த்திகளைத் தர்சித்துக்கொண்டே அச்சோழமண்டலத்துக்கு ஹாரம்போல் விளங்கும் காவிரி யாற்றின் இருகரைகளில் விளங்கும் புண்ணிய க்ஷேத்திரங் களில் நீராடி ஜபம் செய்து முனிச்ரேஷ்டர் போல் பிரம்ம தேஜஸ்ஸினல் சூழப்பட்டவராய் ஒருநாள் திருவாரூர் நகரையடைந்தார். திருவாரூர் நகரையடைந்து கமலா லயத்தில் நீராடிச் சங்கதீர்த்தம், வருணதீர்த்தம் முதலான புண்ணிய தீர்த்தங்களில் ஜபங்களை முடித்த சோதிசர்மன் என்னும் அவ்வேதியர் தியாகராஜரது திருக்கோயிலுள் நுழைந்து ஈசனைப் பணிந்து பலிபீடத்தருகில் சென்றார். அத்தருணத்தில் அவ்வேதியரிடத்தில் நெடுநாளாக அப வாதத்தையுண்டுபண்ணிவரும் அவ்வைசியன் தற்செயலாய் அங்கு ஈசுவர தரிசனத்துக்காக வந்தான். அவ்வைசியன் அவ்வேதியரைக்கண்டவுடன் வழக்கம்போல் அவ்வந்தணர் மாம்சபோஜி என்று பற்பல கெட்ட மொழிகளைப் பல ரிடம் கூறவே, அம்மொழிகளை உண்மையென்று நம்பிய அந்நகரத்தார் அவரைத் தடுத்தார்கள்.

தியாகராஜரது ஸன்னிதானத்தின் அருகில் புகாவண் ணம் ஜனங்களால் தடுக்கப்பட்ட அவ்வேதியர் அத்தரு ணத்தில் தியாகராஜரது திவ்ய தரிசனத்தையடையாத

மனக்குறையினால் கருகிய முகத்துடன் வாடிய மனதுடன் பெருமூச்சு விட்டார். சற்று நேரம் வரையில் எண்திசைகளையும் உற்றுப்பார்த்தார். "குற்றமற்றவர்களின் பழியை நீக்கவல்ல குணநிதியே, இத்தருணத்தில் என்னைக் காப்பது உமது கடமை. நான் ஜன்மம் முதல் புண்ணிய ஸ்நானம் செய்து வந்ததற்கு நற்பலன் இருக்குமாயின், நான் நெடுநாள் செய்துவந்த தவத்துக்கு நற்பயன் இருக்குமாயின் தியாகராஜரது திவ்விய தரிசனம் எனக்குத் தடையின்றிக் கிடைக்கவேண்டும். நான் நடந்து செல்லும் பூமியெல்லாம் சுவர்ணமாக ஆகவேண்டும்" என்றுரைத்து நின்றார். இவ்விதமாய் அவ்வேதியர் கூறிய மொழிகளைக் கேட்ட தியாகேசர் அவருக்குத் தனது பரஞ்சோதி மண்டலத்தின் தரிசனத்தை யளித்ததுமன்றி ஓர் ஆகாயவாணியையுமேவினார்.

அவ்வித அசரீரி வாக்கியத்தைக் கேட்ட அந்நகர வாசிகளனைவரும் வியப்படைந்து அவ்வேதியர் மீது தியாகேசர் காட்டிய கருணையைப் பலவாறு புகழ்ந்து, அவ்வந்தணர் மாமிசத்தைப் புசித்ததாகத் தாங்கள் நம்பியதாலுண்டான பாபத்திரனுக்குச் சாந்தியும் செய்யலானார்கள். அத்தருணத்திலேயே அவ்வேதியர் கூறியவாறே அவர் நடந்து செல்லும் வழியில் விளங்கும் மண்பூமியானது பொன்பூமியாகப் பிரகாசிப்பதைக்கண்டு "இவ்வேதியரே முனிவர்; இவரது மொழியே ஸத்தியமொழி; இவர் மீது தியாகேசர் கருணை செய்திருக்கிறார்; இவர் எவ்வித குற்றமுமற்றவர்; இவரது நற்செய்கைகளைக் கண்டுகளித்த தியாகேசர் இவர் கூறியவாறே மண்ணைப் பொன்னாக்கி வைத்தார்" என்று இவ்விதமாய் அந்நகரவாசிகள் கூறுவதைக் கேட்ட அவ்வைசியனும் நடுக்கமுற்று மனந்துடித்துத் தான் அவரிடத்தில் செய்துவந்த அபராதங்களை எவ்வாறு துலைப்பதென்று அழுது அவரது பாதத்திலேயே சரணம் புகுந்து

?ன்.

தான் செய்த குற்றத்துக்காகச் சரணம் புகுந்த அவ்வைசியனையும், அரசன் முதலான தொண்டர்களையும் ஆசிர்வதித்த அவ்வேதியர் தான் மொழிந்தவாறே தனக்குத் தியாகேசர் தரிசனம் அளித்ததைக்கண்டும், தான் சென்ற விடமெங்கும் பொன்னாக விளங்குவதைக்கண்டும் ஆச்சரியமடைந்து மற்றொரு மந்திரத்தையுச்சரித்து இனி தான் செல்லுமிடம் பொன்னாக விளங்கா வண்ணம் செய்தார். இவ்விதமாய் வாய்மொழியினாலேயே உலகுக்கு நன்மை தீமைகளைச்செய்யவல்ல வேதியர்களின் சிறப்பையும் அவ்வந்தணோத்தமர்களுக்கு அவ்வித வல்லமையை யளித்து வரும் தியாகராஜரது திவ்விய லீலைகளையும் பலவாறு புகழ்ந்து மகிழ்ந்த ஜனங்களனைவரும் துயரமற்ற வாழ்வி

புலன்கனைந்தா லாட்டுண்டு போது போக்கிப்
புறம்புறமே திரியாதே போது நெஞ்சே
சலங்கொள் சடை முடியுடைய தலைவா வென்றுந்
தக்கன்செய் பெருவேள்வி தகர்த்தா யென்றும்
இலங்கையர்கோன் சிரநெரித்த விறைவா வென்று
மெழிலாரு மிடங்கொண்ட வெந்தா யென்றும்
நலங் கொளடி யென்றலைமேல் வைத்தா யென்று
நாடோறு நவின்றேத்தாய் நன்மை யாமே.

— அப்பர் சுவாமிகள்.

ஓம் ஸ்ரீம் ஹம்ஸ த்யாகராஜாய நமஸ்தே.

இத்துடன் ஸ்ரீ தியாகராஜ லீலை இரண்டாம் பிரிவாகிய உத்தராயண

# தியாகராஜ லீலைகள்.

## இரண்டாம் பிரிவு — இரண்டாம் பாகம்

### சிறப்புப் பெயர் அகராதி.

---